# சங்க இலக்கியத்தில் அற நோக்கு

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

*ஆய்வாளர்*

டே. மேரி ஆரோக்கிய கிளீட்டஸ் கலா

*நெறியாளர்*

முனைவர் சு. வஜ்ரவேல்

பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
தமிழ்த்துறை
கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்
சைதாப்பேட்டை

தமிழ்த்துறை

**கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்**

சைதாப்பேட்டை
சென்னை–600015
ஆகஸ்ட்–2011

முனைவர் **சு. வஜ்ரவேல்**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
தமிழ்த்துறை
கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்
சைதாப்பேட்டை
சென்னை.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

திருமதி டே. மேரி ஆரோக்கிய கிளீட்டஸ் கலா, 'சங்க இலக்கியத்தில் அற நோக்கு' என்னும் தலைப்பில் உருவாக்கியுள்ள இந்த ஆய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத்தின் கீழ், கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம், சைதாப்பேட்டையில் என் மேற்பார்வையில் பகுதி நேர ஆய்வாளராக இருந்து அவர் நிகழ்த்தியது ஆகும். இவ்வாய்வேடு அவரது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்தப் பட்டப் பேற்றிற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

சென்னை

22-08-2011

S VAJRAVELU, B.A., M.Phil., M.Ed., PhD
(சு. வஜ்ரவேல்)
Department of Tamil
Institute of Advanced Study in Education
Chennai-600 015

டே. மேரி ஆரோக்கிய கிளீட்டஸ் கலா
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்
சைதாப்பேட்டை
சென்னை.

# ஆய்வாளர் உறுதிமொழி

'சங்க இலக்கியத்தில் அற நோக்கு' என்னும் தலைப்பில் நான் உருவாக்கியுள்ள இந்த ஆய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத்தின் கீழ், கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம், சைதாப்பேட்டையில் நான் பகுதி நேர ஆய்வாளராக ஆய்வு நிகழ்த்தியபோது என்னால் உருவாக்கப்பட்டது என்றும் இதற்கு முன் வேறு எந்தப் பட்டப் பேற்றிற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

சென்னை
22-08-2011

டே. மேரி ஆரோக்கிய கிளீட்டஸ் கலா
(டே. மேரி ஆரோக்கிய கிளீட்டஸ் கலா)

# நன்றியுரை

'சங்க இலக்கியத்தில் அற நோக்கு' என்னும் தலைப்பிலான இவ்வாய்வினைப் பகுதி நேரத்தில் நான் மேற்கொள்ள அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக்கழகத்தார்க்கும், சென்னை, சைதாப்பேட்டையில் உள்ள கல்வியியல் மேம்பாட்டு நிறுவன முதல்வருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வுக்கு நெறியாளராக இருந்து என்னை நெறிப்படுத்தி உதவிய சென்னை, சைதாப்பேட்டையில் உள்ள கல்வியியல் மேம்பாட்டு நிறுவனத்தின் தமிழ்த்துறைத் தலைவர்,பேராசிரியர் சு. வஜ்ரவேல் அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

நான் பகுதி நேரத்தில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கி உதவிய சிந்திக் கல்லூரியின் செயலர் திரு. நாராயணதாஸ் கால்ரோ அவர்களுக்கும் கல்லூரி முதல்வர் முனைவர் டி. தட்சிணாமூர்த்தி அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் திரு. த. பிரகலாதன் அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வினை நான் மேற்கொள்வதற்குப் பெரிதும் துணைபுரிந்த என் கணவர் திரு. எஸ். பெஞ்சமின் சேசு ராஜா அவர்களுக்கும் என் குழந்தைகள் பெ. கிரேஸ் ஜெனிஃபர், பெ. ஜோசுவா எபினேஸ் ஆகியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்த ஆய்வுப் பணிக்குப் பெரிதும் துணைபுரிந்த தூய தாமஸ் கலை அறிவியல் கல்லூரியின் தமிழ் உதவிப் பேராசிரியர் திரு. த. ஆதித்தன் அவர்களுக்கும் எங்கள் கல்லூரியின் பேராசிரியர்களுக்கும், அச்சாக்கத்தில் துணைபுரிந்த டுடே கிராஃபிக்ஸ் நிறுவனத்தார்க்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# சங்க இலக்கியத்தில் அற நோக்கு

## பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| அடி | – | பாடலடி |
| உ–ர் | – | உரையாசிரியர் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| கலி. | – | கலித்தொகை |
| குறள் | – | திருக்குறள் |
| நற். | – | நற்றிணை |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பதிற். | – | பதிற்றுப் பத்து |
| பரி. | – | பரிபாடல் |
| பா. | – | பாடல் |
| புறம். | – | புறநானூறு |
| மேலது | – | மேற்குறித்த நூல் |

# முன்னுரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் மக்களின் வாழ்வியல் விழுமியங்களின் தொகுப்பாகச் சங்க இலக்கியம் விளங்குகிறது. செய்யுள் என்னும் இலக்கிய வடிவத்தில் அமைக்கப்பட்டிருந்தாலும் இவை ஒவ்வொன்றின் உள்ளடக்கத்திலும் உரையாடல் தன்மையையும் வருணனைத் தன்மையையும் பின்புல விளக்கத்தினையும் காணமுடிகிறது. இலக்கியம் எத்தகைய உள்ளடக்கங்களை எல்லாம் கொண்டிருக்கும் என்பதனை இந்தச் சங்க இலக்கியத்தின் வாயிலாக எளிதில் அறிந்து கொள்ள முடியும். களவு, கற்பு, வீரம், கொடை, கல்வி, போக்குவரத்து, வழிகள், அறம் முதலான பொதுவான செய்திகளையும் மன்னர்கள், வள்ளல்கள், நாடுகள், நகரங்கள், ஆறுகள், கடல்கள் முதலான சிறப்புகளையும் தன்னுள்ளே உள்ளடக்கமாகக் கொண்டிருக்கும் ஒரு கருவூலம்தான் சங்க இலக்கியம்.

பண்டைக் காலத்தில் எத்தகைய விலங்குகள் வாழ்ந்தன, அவற்றின் பழக்க வழக்கங்கள் என்னென்ன என்பதையும் பறவைகளின் இயல்புகளையும் அறிந்துகொள்ள முடிகிறது. வேளாண்மைத் தொழில் மலைநிலத்திலும் வயல் நிலத்திலும் எவ்வாறு நடைபெற்றது என்பதனையும் வேளாண் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்ட கருவிகள் தொடர்பான செய்திகளையும் அறிந்து கொள்ள முடிகிறது.

பத்துப்பாட்டு, எட்டுத் தொகை என்னும் இந்த இலக்கியச் செல்வங்கள் பனை ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன. பனை ஏடுகளைச் சேகரித்தல், பதப்படுத்தல், பாதுகாத்தல், எழுதுதல், படிஎடுத்தல், பராமரித்தல், பரவச் செய்தல்

என்று இந்த இலக்கியங்கள் கடந்துவந்துள்ள பாதையினை எண்ணும்போது அந்தக்காலப் புலவர்களும் புரவலர்களும் எவ்வளவு முயற்சி மேற்கொண்டிருப்பார்கள் என்பது புலனாகிறது. தங்கள் வாழ்நாள் பணியாகக் கருதி இந்த இலக்கியங்களைப் படைத்த எம் தமிழ் முன்னோர்களின் உழைப்பினையும் இலக்கியச் செழுமையினையும் இக்காலத் தமிழ் மக்கள் உணர்ந்து செயலாற்ற வேண்டும்.

## ஆய்வுத் தலைப்பு

'சங்க இலக்கியங்களில் அறநோக்கு' என்பது இந்த ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தலைப்பு ஆகும்.

## ஆய்வுப் பொருள் விளக்கம்

அறம் என்னும் சொல் அகண்ட பொருண்மை கொண்டது. இதுதான் பொருள் என்று வரையறை செய்ய இயலா அளவிற்கு ஒரு கருத்துருத் தன்மையினைப் பெற்று விளங்குகிறது. இந்தச் சொல்லினை அறம் என்றும் அறன் என்றும் வழங்குகிறோம். சங்க இலக்கியங்களில் அறம் என்றும் அறன் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. அறம் என்னும் சொல்லுக்குப் போலியாக அறன் என்னும் சொல்லினைக் கருத இடம் உண்டு. மனம் – மனன், குணம் – குணன் என்பதுபோல இந்தச் சொல்லும் ஈற்றுப் போலியாக நின்று ஒரே பொருண்மையினைத் தருகிறது எனலாம்.

அறம் என்னும் சொல்லுக்குத் தமிழ், தமிழ் அகரமுதலி தருமம், புண்ணியம், அறச்சாலை, தரும தேவதை, யமன், தகுதியானது, சமயம், //வ ஞானம், நோன்பு, இதம், இன்பம், தீப்பயன் உண்டாக்கும் சொல் முதலான பொருண்மைகளைத் தந்துள்ளது. ஆனால் அறன் என்னும் சொல்லுக்கு வேள்வி முதல்வன், அறக்கடவுள் முதலான பொருண்மைகளைத் தந்துள்ளது.

அறம் என்ற சொல்லுக்குத் தமிழ் லெக்சிகன் இதே பொருண்மைகளைத் தான் தந்துள்ளது. ஆனால் அறன் என்னும் சொல்லினை அறம் என்னும் சொல்லின் மாறுபட்ட வடிவம் என்றே குறிப்பிட்டுள்ளது. இவற்றின் துணைகொண்டு அறத்தின் பொருண்மையினைத் தெளிவாக வரையறை செய்வது எளிதன்று. அறம் என்னும் சொல்லுக்குரிய பொருண்மையாக வாழ்வியல் நெறி, நீதி என்னும் பொருண்மைகளையும் நாம் பயன்படுத்துகிறோம். மேற்கூறிய பொருண்மைகளின் அடிப்படையில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்

மக்கள் வரலாறு ஒவ்வொரு சமூகத்திலும் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் வரலாற்றுக் காலம் எனப் பிரிக்கப்படுகிறது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் அரசு என்ற அமைப்பு முறை இல்லை என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. ஒவ்வோர் இனக்குழுவும் தங்களுக்கு என்று சில நெறிமுறைகளை வகுத்துக் கொண்டு வாழ்ந்ததாகத் தெரிவிக்கின்றனர்.

தமிழ்ச் சமூக வரலாற்றிலும் வரலாற்றுக்கு முற்பட்ட காலம், வரலாற்றுக் காலம் என்னும் பிரிவு உள்ளது. ஆனால் தமிழ் மக்களிடையே வரலாற்றுக் காலம் மிகப் பழைமை கொண்டதாக விளங்குகிறது. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றினைக் கொண்ட மக்கள் கூட்டமாக இது விளங்குகிறது. இந்தக் கால வரையறை என்பது செவ்வியல் இலக்கியங்களின் காலத்தை ஒட்டி வகுக்கப்பட்டுள்ளது. இந்தக் கால எல்லைக்கும் முற்பட்டே மிகவும் பண்பட்ட சமூகமாக இந்தச் சமூகம் விளங்கியிருக்கிறது. இருப்பினும் அறிஞர்கள் பண்டைத் தமிழர்களின் நெறிப்பட்ட வரலாற்றினை இரண்டாயிரம் ஆண்டுக்கு முந்தையது என்று குறிப்பிட்டுள்ளனர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வாழ்வியல் நெறிகளை வகுத்துக் கொண்டு அந்த நெறிக்குட்பட்டு வாழ்ந்த சமூகம் என்று நாம் கொண்டாலும் அவர்களின் தொன்மையைக் காட்டிலும் தொன்மை வாய்ந்த பண்பட்ட சமூகம் என்று உலக அரங்கில் எந்தச் சமூகத்தினையும் காட்ட இயல வில்லை என்பது தெளிவு. அக்கால மக்கள் அறநெறி பிழைத்தலைப் பெருந்தவறான செயலாகக் கருதியுள்ளனர் என்பதனை அறிய முடிகிறது. அறத்தின் மேன்மையினை உணர்ந்த அவர்கள் அதனை உயிராகக் கருதி வாழ்ந்துள்ளனர். அத்தகைய அற வாழ்க்கையினை வாழ்ந்த தமிழ் மக்களின் வாழ்வியலில் அறம் இடம் பெற்றிருந்த தன்மையினையும் உயர்வினையும் புலப்படுத்தும் நோக்கில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## கருதுகோள்

அறம் என்னும் சொல்லினை ஒரு கோட்பாடு என்று கருதலாம். இந்த அறவியல் கோட்பாடு அன்றாட வாழ்வியலிலும் அரச நெறிமுறையிலும் இடம் பெற்றிருக்கிறது. அன்றாட வாழ்க்கை என்பது இல்வாழ்க்கையினையும் அரச நெறிமுறை என்பது ஆட்சி முறையினையும் உள்ளடக்கியதாகும். இந்த அற நோக்கம் பண்டைத் தமிழரின் இல்வாழ்க்கையிலும் ஆட்சி முறையிலும் அடிப்படையாக அமைந்துள்ளது என்பது கருதுகோளாகக் கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கிய நூல்களாக நமக்குக் கிடைத்துள்ள பத்துப்பாட்டு நூல்களும் எட்டுத் தொகைநூல்களும் ஆய்வின் எல்லைகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இந்த ஆய்வு பகுப்பாய்வு முறையிலும் விளக்க ஆய்வு முறையிலும் அமைந்துள்ளது. ஒப்பீட்டாய்வு முறை மேற்கொள்ளப்பெறவில்லை. மேலும் கோட்பாடு சார்ந்த ஆய்வு என்பதால் ஆய்வாளரின் கருது கோளுக்கு முதன்மை கொடுக்கப்பட்டுள்ளது. எனவே துணைமை நூல்களின் துணை பெரிதும் பயன் கொள்ளவில்லை. முதன்மை நூல்களில் இடம்பெறும் அறநோக்கு இங்கே கண்டறிந்து தரப்பட்டுள்ளது.

## ஆய்வுப் பகுப்பு

இந்த ஆய்வேடு ஆய்வு ~~வசதிக்காக~~ நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை

1. சங்க இலக்கியம் காட்டும் அறத்தின் மேன்மை
2. சங்க இலக்கியம் காட்டும் அறனில் தன்மை
3. சங்க இலக்கியம் காட்டும் பொதுமை அறம்
4. சங்க இலக்கியம் காட்டும் இல்லறம்

என்பவை ஆகும்.

## இயல் 1

### சங்க இலக்கியம் காட்டும் அறத்தின் மேன்மை

அறநெறியின்பாற்பட்ட வாழ்க்கையினைப் பண்டைத் தமிழர்கள் வாழ்ந்துள்ளார்கள். இவர்களின் வாழ்க்கையில் அறத்தினை விழுமியமாகக் கைக்கொண்டுள்ளனர். எனவே அறங்கூறும் அவையம் என்னும்

அமைப்பினையே நிறுவி இக்கால நீதி மன்றங்களை விடவும் சிறந்த நிலையில் அக்கால மன்னர்கள் தங்கள் ஆட்சியினை அமைத்துள்ளனர்.

அறங்கூறும் அவையத்தில் அறநெறிப்பட்ட வாழ்க்கை கொண்டவர்களையே பொறுப்பாளர்களாக நியமித்துள்ளார்கள். அவ்வாறு அறநெறிப் படாதவர்களை அறங்கூறும் அவையத்தின் பொறுப்பாளர்களாக நியமிப்பதனைப் பண்டைத் தமிழ் மன்னர்கள் பெரும்பிழையாகக் கருதியுள்ளனர். இவ்வாறு அவர்கள் கருதியுள்ள தன்மையினை வஞ்சினப் பாடல்கள் நமக்குத் தெரிவிக்கின்றன.

அறநெறிப் பட்ட வாழ்க்கை என்னும்போது எவை எல்லாம் அறம் என்பதனையும் நாம் அறிந்துகொள்ள வேண்டும். அவ்வாறு அறிந்து கொள்வதற்கும் எவ்வித இன்னலையும் நமக்குத் தராமல் நமது சங்க இலக்கியங்களே அறச் செயல்களையும் பட்டியல் போட்டிருப்பதனைக் காணமுடிகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களுள் எந்நில வாழ்க்கை கொண்டவர்களாக இருந்தாலும் அறநெறிப் பட்ட வாழ்க்கை வாழ்வதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். பாலை நிலம் என்பது வறண்ட நிலம் என்றாலும் அங்கே தொழில் எதுவும் சிறப்புற நடைபெறாது என்றாலும் வழிப்பறியினைத் தொழிலாகக் கொண்டவர்களாக அந்நில மக்கள் உணர்த்தப்பட்டாலும் வழிப்பறி செய்யும் தொழிலினைச் சங்க இலக்கியம் சிறப்பிக்கவில்லை. அத்தகைய வாழ்க்கை முறையினையும் அது காட்டவில்லை. இவை போன்ற அறத்தின் மேன்மையினை உணர்த்தும் கருத்துகள் இந்த இயலில் தரப்பட்டுள்ளன.

அறக்கொடை புரிவதைத் தங்கள் வாழ்க்கையின் பயனாகக் கருதி அக்கால மன்னர்கள் வாழ்ந்தனர். அறத்தினால் உண்டாகும் புகழினை நிலையான புகழாகக் கருதினார்கள்.

## இயல் 2

### சங்க இலக்கியத்தில் அறனில் தன்மை

அறம் இல்லாத செயல்பாடுகளை அறனில் தன்மை என்னும் தொடர் உணர்த்துகிறது. அறம் இல்லாத செயல்களைச் செய்வதைத் தமிழ் மக்கள் இழிவாகக் கருதியுள்ளனர். இருப்பினும் அச்செயல்கள் நிகழ்ந்துள்ளன என்பதனால்தான் அறமற்ற செயல்கள் என்றும் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

அறனில் செயல்களை அகப்பாடல்களும் புறப்பாடல்களும் உணர்த்துகின்றன. அகப்பாடல்கள் உணர்த்தும் அறனில் செயலுக்கும் புறப்பாடல் உணர்த்தும் அறனில் செயலுக்கும் வேறுபாடு உள்ளது. அகப்பாடல்களில் வெளிப்படும் அறனில் செயல் பெரும்பாலும் இல்வாழ்க்கை தொடர்பானதாகவே அமைந்துள்ளது எனலாம்.

தலைவன் குறித்த காலத்தில் வராமல் இருப்பதை அறனில் செயலாகத் தெரிவித்துள்ளனர். தலைவனைச் சந்திப்பதற்கு இடையூறு செய்யும் தாயின் செயல்களையும் அறனில் செயலாக அக இலக்கியங்கள் உணர்த்துகின்றன. தாயின் செயல்பாடு மகளின் நல்வாழ்வுக்காகத் தான் என்றாலும் தலைவியின் நோக்கில் அது அறனில் செயலாகக் கருதப்படுகிறது.

புறப் பாடல்கள் பொதுமை அறங்களில் விலகி நடப்பதை அறனில் செயல் என்று உணர்த்துகின்றன. பொதுமை அறம் என்பது தனிப்பட்ட வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட சமூக வாழ்க்கையினை உள்ளடக்கியது. சமூக வாழ்க்கையில் ஏற்படுத்தப்பட்டுள்ள பொதுமைத் தன்மையிலிருந்து விலகுவதனை இது குறிப்பிடுகிறது.

## இயல் 3

# சங்க இலக்கியம் காட்டும் பொதுமை அறம்

உலகம் நிலைத்த தன்மை கொண்டது. ஆனால் உலகில் உள்ள உயிர்கள் நிலையாத் தன்மை கொண்டவை. மன்னனாக பொருள் ஈட்டம் பெற்று வாழ்ந்தாலும் அன்றாடம் பொருள் தேடி அலைந்துண்ணும் இயல்பு கொண்டிருந்தாலும் வாழ்க்கை நிலை என்பது பொதுவானது. பிறப்பு உண்டு என்றால் இறப்பு உண்டு. உணவு, உறைவிடம், உடை முதலானவை அடிப்படையில் பொதுவானவை. அவற்றின் உயர்வு, தாழ்வு என்பது மனத்துடன் தொடர்பு கொண்டது. எனவே மக்கள் அறத்தினை உயர்ந்ததாகக் கருதினர். அந்த அறச் செயல்களில் முதன்மையானதாக ஈகையைக் கருதினர். ஈகைதான் பொருள்சமன்பாட்டினைத் தரவல்லது என்பதனை உணர்ந்திருந்தனர். இருப்போர் இல்லார்க்கு ஈவது இல்லாமையைப் போக்கும் என்னும் தன்மையினைக் காட்டிலும் பொருள் உடைமைச் சமூகத் தன்மையிலிருந்து பொருள் பரவலாக்கப்பட்ட சமூகத் தன்மைக்கு அழைத்துச் செல்லும் எனலாம். எனவேதான் ஒருவன் சேர்த்த செல்வத்தின் பயன் எது என்றால் அது ஈதல் என்று உரைத்தனர்.

இந்த ஈகையின் பெருமையை உணர்த்துவதற்கு என்றே நிலையில்லாத் தன்மையினை உணர்த்தினார். மன்னா உலகம் என்று உலக மக்களின் நிலையின்மையினை விளக்கினர். ஊர்ப்பொது மன்றம், நிலம் பொதுவானது, நீர்நிலைகள் பொதுவானவை என்னும் எண்ணம் தமிழ் மக்களிடம் இருந்துள்ளது.

வீரத்தை உயர்ந்த செயலாகத் தமிழ் மக்கள் கருதினர். விழுப்புண்

படுவதை உயர்ந்த செயலாகக் கருதினர். போரில் இறப்பதே இறப்பு என்று போற்றினார்கள்.

**இயல் 4**

## சங்க இலக்கியம் காட்டும் இல்லறம்

களவு, கற்பு என்னும் இருநிலைகளில் பண்டைத் தமிழரின் இல்லற வாழ்க்கை அமைந்துள்ளது. இந்த இருநிலைகளையும் விளக்கும் வகையில் அகப்பாடல்கள் அமைந்துள்ளன. களவு வாழ்க்கை என்பது இல்லற வாழ்வின் தொடக்க நிலை எனலாம். இந்தத் தொடக்க நிலையில் அன்புகொண்ட நெஞ்சங்கள் எவ்வாறு கலக்கின்றன என்பதனையும் அதன் தொடர்ச்சியான உடன்போக்கு முதலானவற்றையும் அகப்பாடல்கள் உணர்த்துகின்றன. தலைவன் தலைவி கொண்ட காதல் புலப்பாட்டினைப் புலப்படுத்தும் உத்தியை விளக்கும் இடத்தினை அறத்தொடு நிற்றல் என்றே தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளதனைக் காணமுடிகிறது. கற்பு வாழ்க்கையில் தலைவனுக்கு உரிய கடமையாகத் தொழிலினையும் தலைவிக்குரிய கடமையாக இல்லக்கடமையினையும் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

கற்பு வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் உள்ளத்தால் ஒன்றிய நிலையில் காரணமாக மறுபிறவி பற்றிய சிந்தனையும் இடம்பெற்றுள்ளது. இனி வரும் பிறவிகளிலும் நீயே எனது கணவன் என்று குறிப்பிடும் வண்ணம் உயர்ந்த கற்பொழுக்கத்தினைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

இல்லறக் கடமைகளுள் ஒன்றாக விருந்தோம்பல் காட்டப்பட்டுள்ளது. இந்த விருந்தோம்பலை உயிராகக் கருதியுள்ளனர் பண்டைக்காலத் தமிழர்கள்.

தமிழ் மக்கள் அறவழிப்பட்ட வாழ்வாக விளங்கும் வாழ்க்கையினைத் தூய

வாழ்க்கையாகக் கருதியிருக்கின்றனர். அறத்தின் மேன்மைத் தன்மையினை உணர்ந்துள்ளனர். பொதுவுடைமை எண்ணம் மிக்கவர்களாக விளங்கியுள்ளனர். பொதுமை அறத்தின் ஒரு பகுதியாக நிலையாமையும் சங்க காலத்தில் உணர்த்தப்பட்டுள்ளது.

இல்லற வாழ்க்கையினைக் களவு, கற்பு என்னும் இரண்டு கைகோளாக வகுத்துள்ளனர். களவினையும் கற்பினையும் உயர்வாகவே கருதியுள்ளனர். களவு வாழ்க்கை கற்பு வாழ்க்கையில் நிறைவு பெற்றிருக்கிறது. அவ்வாறு நிறைவு பெறாத தன்மையும் இருந்துள்ளது. எனவே பொய்யும் வழுவும் தோன்றியதாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

இல்லறக் கடமையினை ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனியே வகுத்துள்ளனர். வினையினை ஆடவர்க்கும் மனைத் தொழிலினை மகளிர்க்கும் பிரித்துள்ளனர். இந்த ஏற்பாடு ஒரு வசதிக்காகச் செய்யப்பட்ட ஏற்பாடே ஒழியப் பெண்களை அறிவுத் துறையிலிருந்து புறக்கணிப்பது ஆகாது முதலான முடிவுகள் இந்த ஆய்வின் வாயிலாக எட்டப்பட்டுள்ளன.

# சங்க இலக்கியத்தில் அறத்தின் மேன்மை

அறத்தின்பாற்பட்ட வாழ்க்கை என்றும் நிலைத்த இன்பத்தைத் தரவல்லது எனலாம். அறம் அல்லாத வழியில் வாழ்கின்றவர் வாழ்க்கை மிகவும் சிறப்பு வாய்ந்ததுபோல் தோற்றம் அளித்தாலும் அது பெருங்கேடாய் முடியும் என்பதற்குப் பல சான்றுகளை நாம் இந்த உலகில் பார்த்திருக்கிறோம். எனவே மனிதனுக்கு மேன்மை தரத்தக்கது அறம் என்பதில் ஐயம் எதுவும் இல்லை. அந்த அறத்தின் மேன்மையினைத் தெரிவிக்கும் வகையில் சங்க இலக்கியங்களில் பல பாடல்கள் அமைந்துள்ளன. அந்தப் பாடல்கள் தெரிவிக்கும் அறத்தின் மேன்மை பற்றிய கருத்துகளை இந்தப் பகுதியில் ஆய்வோம்.

*அறம் சிறக்க*

மன்னனும் மக்களும் அறம் சிறக்க வேண்டும் என்றுதான் விரும்புவர். அறம் இல்லாத வாழ்க்கையை யாரும் விரும்புவது இல்லை என்று ஐங்குறுநூறு தெரிவித்துள்ளது.

*வாழி ஆதன் வாழி அவினி*
*அறம் நனி சிறக்க அல்லது கெடுக*
*என வேட்டோளே யாயே......*[1]

என்னும் ஐங்குறுநூற்றின் வேட்கைப் பத்துப் பாடலில் ஒரு தாயின் விருப்பம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அந்தத் தாய் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் சிறப்பு வந்து சேரவேண்டும் என்னும் வேட்கை இல்லாதவளாக விளங்கியதைக் காணமுடிகிறது. ஆதனை வாழ்த்திய அவள் அவனது நாட்டில் அறம் மிகவும் நன்றாகச் சிறக்க வேண்டும் என்று விரும்புகிறாள். அறச் செயலுக்கு எதிரான செயல்கள் கெட்டொழிந்திட வேண்டும் என்றும் விரும்பியுள்ளாள். எனவே சங்க காலத்தில் பெண்கள் அறத்தின் மேன்மையை உணர்ந்து சமுதாய நல்லறம் பேணுபவர்களாக விளங்கியிருக்கிறார்கள் என அறிய முடிகிறது. இந்தப் பாடலில் அறம் நனி சிறக்க என வேண்டுகிற காரணத்திலிருந்து அறத்தின் மேன்மையினை உணர்ந்து கொள்ள முடியும்.

*முன்னோரின் அறத்தினைப் போற்றும் வாழியாதன்*

செல்வக் கடுங்கோ வாழியாதன் அறத்திலும் மறத்திலும் சிறந்து விளங்கியவன் என்று பதிற்றுப்பத்துத் தெரிவிக்கிறது. அறம் எனப்படுவது அறத்தின் சிறப்பினை உணர்த்துகிறது. இங்கே மறம் என்ற சொல் அறத்திற்கு எதிரான பொருண்மையில் பயன்படுத்தப்படாமல் வீர்த்தின் சிறப்பினை உணர்த்தும் வகையில் பயன்படுத்தப்பட்டுள்ளதனைக் காணமுடிகிறது.

*நல்மரம் துவன்றிய நாடுபல தரீஇப்*
*பொன்அவிர் புனை செயல் இலங்கும் பெரும்பூண்*

*ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்*
*இட்ட வெள்வேல் முத்தைத் தம் என*
*முன்திணை முதல்வர் போல நின்று*
*தீஞ்சுனை நிலைஇய திருமா மருங்கின்*
*கோடு பல விரிந்த நாடுகாண் நெடுவரை*
*சூடா நறவின் நாள்மகிழ் இருக்கை*
*அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய*
*மறம்புரி கொள்கை வயங்கு செந்நாவின்*
*உவலை கூராக் கவலைஇல் நெஞ்சின்*
*நனவில் பாடிய நல்இசைக்*
*கபிலன் பெற்ற ஊரினும் பலவே!*[2]

இந்தப் பாடலில் செல்வக் கடுங்கோ வாழியாதனின் கொடைச் சிறப்பும் அறச்சிறப்பும் விளக்கப்பட்டுள்ளது. வாழியாதனின் முன்னோர் அறவழியில் ஆட்சி புரிந்தனர். அந்த அறவழியினின்று தவறாமல் ஆட்சி புரிந்தவன் செல்வக் கடுங்கோ வாழியாதன். வாழியாதனின் நாட்டின்கண் உள்ள மலையானது மிகவும் உயரமானது. மலையின் மேல் நின்று நாடு முழுவதும் காணத்தக்க வகையில் அமைந்துள்ளது.

நாளோலக்க மண்டபத்தில் வாழியாதன் வீற்றிருக்கும் போது பிற மன்னர்கள் வந்து அவனைப் பணிந்து புகழ்வர். அவ்வாறு புகழ்வதாலும் அவனது அறம் திரியா நல்லாட்சியாலும் பெரும்புகழினைப் பெற்றுள்ளான். அந்தப் புகழினைப் போற்றிப் புகழ்ந்து பாடிய கபிலருக்குப் பல ஊர்களைத் தானமாக வழங்கினான் வாழியாதன். அந்த ஊர்களின் எண்ணிக்கையை விட வாழியாதனின் புகழ் பலவாகும் என்று இந்தப் பாடல் தெரிவிப்பதால் அறத்தின் வாயிலாகவே மன்னர்கள் புகழ் பெற்றுள்ளனர் என்பதனை அறிய முடிகிறது.

*மலை வாழ்த்து*

தலைவி ஒருத்தி தனது காதலனுடன் உடன் போக்காகச் செல்கிறாள். அவள் சென்ற வழியாக அவளைத் தேடிக்கொண்டு அவளது தமையன்மார் வருகின்றனர். அவர்கள் சென்ற வழியில் மலை ஒன்று இருந்தது. தலைவியின் தமையன்மாரின் கண்ணுக்கு அவர்கள் புலப்படாமல் மலை ஒன்று மறைத்தது. எனவே அந்த மலையினை வாழ்த்திப் பாடுகிறாள் அந்தத் தலைவி.

*அறம் சாலியரோ! அறம் சாலியரோ!*
*வறன் உண்டாயினும் அறம் சாலியரோ!*
*வாள்வனப்பு உற்ற அருவி*
*கோள்வல் என் ஐயை மறைத்த குன்றே!*[13]

இந்த வாழ்த்தின் வாயிலாக நாம் அறத்தின் மேன்மையினை உணர முடிகிறது. தனக்குத் துணைபுரிந்த மலையானது அறம் ஓங்கிச் செழிக்கட்டும் என்று வாழ்த்துகிறாள். மலையின் செழிப்பானது நீர் வளத்தினைப் பொறுத்து அமையும். அந்த நீர் வளமாகிய அருவியைக் கொண்டது அந்த மலை. அந்த அருவி எதைப் போன்று விளங்குகிறது என்பதனை ஓர் உவமையின் வாயிலாகப் பாடியுள்ளார். உறையின் உள்ளே இருக்கும் வாளின் வெண்மைத் தன்மை கொண்டதாக அந்த மலையில் அருவி பாய்கிறது என்று தெரிவித்துள்ளார். மழைவளம் இல்லாத காலத்திலும் நீர் வளம் குறையாத அருவி வளத்தினைப் பெற்றுச் சிறக்கட்டும் என்று வாழ்த்துகிறாள். நீர் வளத்தினை மலையானது தன்னிடத்தில் வைத்துக்கொள்ளாமல் தன்னைச் சார்ந்த பகுதிகளுக்கு வழங்கும் தன்மை கொண்டது மலை. எனவே அறம் சாலியரே! என்று வாழ்த்துகிறாள் தலைவி.

*அறம் செய் அந்தணர்*

தலைவி ஒருத்தி தலைவனுடன் சென்று விட்டாள். அவர்களைத் தேடி, செவிலித்தாய் செல்கிறாள். அவ்வாறு சென்ற அவளால் அவர்களைக் காணமுடியவில்லை. அந்த வழியாக வந்த அந்தணர்களைப் பார்த்து அந்தச் செவிலித்தாய் தனது மகளையும் அவளது காதலனையும் பார்த்தீர்களா ? என்று கேட்கிறாள்.

*அறம்புரி அருமறை நவின்ற நாவின்*
*திறம்புரி கொள்கை அந்தணிர் தொழுவல் என்று*
*ஒண்தொடி வினவும் பேதை அம் பெண்டே !*
*கண்டனம் அம்ம சுரத்திடை அவளை*
*இன்துணை இனிது பாராட்ட*
*குன்று உயர் பிறங்கல் மலை இறந்தோளே!*[4]

செவிலித்தாயின் கேள்விக்குப் பதிலாக அந்தணர் கூறுவது போல் அமைந்தது இந்தப் பாடல். குன்றுகள் நிறைந்த பெரிய மலை வழியாக அந்த மலையினைக் கடந்து உன் மகள் சென்று விட்டாள். உன் மகளுடன் செல்லும் காதலன் கூறும் இனிய பாராட்டு மொழிகளைக் கேட்டு மகிழ்ந்தபடியே அவள் செல்கிறாள். எனவே அவள் மகிழ்ச்சியாக இருக்கிறாள் என்ற நம்பிக்கையுடன் நீ திரும்பிப் போவாயாக என்று அந்தணர்கள் கூறுகின்றனர்.

இந்தப் பாடலில் அந்தணர்களை அறம்புரி அருமறை நவின்ற நாவினர் என்று ஓதலாந்தையார் தெரிவித்துள்ளார். அந்தணர்கள் அறத்தின் மேன்மையினை உணர்ந்து அறத்தின் தன்மையிலிருந்து

மாறுபடாமல் அறத்தினை மேற்கொண்டு வேதம் ஓதும் இயல்பு கொண்டவர்கள் என்று தெரிவிக்கப்பட்டுள்ளதால் அறத்தின் மேன்மையினை நாம் உணர முடியும். அந்தணர்களுக்கு உயர்வு கொடுக்கும் செயல்களாக இந்தப் பாடலில் கூறப்பட்டவை இரண்டு.

1. அறச் செயல்
2. வேதம் ஓதல்

இந்த இரண்டு செயல்களில் வேதம் ஓதுதலை முதலில் குறிப்பிடாமல் அறச் செயல் செய்தலை முதலில் குறித்துள்ளமையால் அறத்தின் மேன்மை விளக்கம் பெறுகிறது எனலாம்.

*அறம் நிலைபெற்ற செங்கோல்*

சேரமான் இரும்பொறையின் பெருமையினைத் தெரிவிக்கும் புறநானூற்றுப் பாடலில் செங்கோலின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. செங்கோல் ஆட்சி என்று சிறப்பிக்கப்படும் ஆட்சியே அறநெறி வழுவா ஆட்சி தான் என்பதனைத்தெரிவித்துள்ளார் குறுங்கோழியூர் கிழார்.

*இருமுந்நீர்க் குட்டமும்*
*வியன் ஞாலத்து அகலமும்*
*வளிவழங்கு திசையும்*
*வறிது நிலைஇய காயமும் என்றாங்கு*
*அவை அளந்து அறியினும் அளத்தற்கு அரியை*
*அறிவும் ஈரமும் பெருங்கண்ணோட்டமும்*
*சோறு படுக்கும் தீயொடு*
*செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது*
*பிறிது தெறல் அறியா நின் நிழல் வாழ்வோரே*

*திருவில் அல்லது கொலைவில் அறியா*
*நாஞ்சில் அல்லது படையும் அறியா*
*திறன்அறி வயவரொடு தெவ்வர் தேயஅப்*
*பிறர் மண் உண்ணும் செம்மல் நின் நாட்டு*
*வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது*
*பகைவர் உண்ணா அருமண்ணினையே*
*அம்பு துஞ்சும் கடி அரணால்*
*அறம் துஞ்சும் செங்கோலையே*
*புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்*
*விதுப்புறவு அறியா ஏமக்காப்பினை*
*அனையை ஆகன்மாறே*
*மன்உயிர் எல்லாம் நின் அஞ்சும்மே!*[5]

பெரிய கடலின் ஆழத்தினை அறிந்து சொல்லிவிட முடியலாம். பரந்த உலகத்தினை அளந்து சொல்லிவிடவும் முடியலாம். காற்று வீசும் திசையினைக் கணித்துச் சொல்லி விடலாம். எந்தப் பிடிமானமும் இல்லாமல் இருக்கும் ஆகாயத்தின் பேரளவினையும் சொல்லி விடலாம். ஆனால் இரும்பொறையின் பெருமையினை அளந்து சொல்லிவிட முடியாது என்று பாடியுள்ள புலவர் அந்த அளவற்ற பெருமைக்கு உரிய காரணங்களைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார்.

இரும்பொறையின் ஆட்சியில் மக்கள் எந்த வெந்துயரினையும் அடையவில்லையாம். அதனை விளக்குவதற்காகச் சோறு பொங்கும் போது ஏற்படும் வெப்பச் சூட்டினையும் கதிரவன் வழங்கும் வெப்பச் சூட்டினையும் தவிர வேறு எந்த வெங்கொடுமையும் இல்லை என்கிறார். இரும்பொறையின் ஆட்சியின் கீழ் வாழ்கின்ற மக்கள் பார்த்த வில் வானவில் மட்டுமே! அவர்கள் கொலைவில்லினைக் கண்டது இல்லை என்கிறார். எனவே இரும்பொறையின் ஆட்சிக்காலத்தில் போர்

இல்லாமல் அமைதி நிலவியதனை அறிய முடிகிறது. நிலத்தினை உழுவதற்குப் பயன்படுத்தும் கலப்பை அல்லாமல் வேறு எந்தப் படைக்கலனையும் மக்கள் பயன்படுத்துவது இல்லை. உனது நாட்டில் உள்ள மண்ணினைக் கருவுற்ற பெண்கள் மட்டுமே விரும்பி உண்ணுவர். பகைவர் எவராலும் விரும்பிக் கைப்பற்றப்படாத மண் உனது மண். அம்பு தாங்கிய அரண்களைக் கொண்டு நல்ல காவலினை மக்களுக்கு வழங்குகிறாய். அறநெறி தவறாத செங்கோல் ஆட்சியினை வழங்குகிறாய்.

இந்தப் பாடலில் செங்கோல் ஆட்சிக்கு அடிப்படையாக அறத்தினைக் குறிப்பிட்டுள்ள புலவர் அந்த அறநெறி தவறாத தன்மை எவ்வாறு நிகழ்கிறது என்பதனை நல்லாட்சியின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ள தன்மையினைக் காணமுடிகிறது.

*வகுத்தலும் வல்லது அரசு*

ஓர் அரசின் கடமை என்ன என்பதனைத் திருக்குறள் தெளிவுபடுத்தியுள்ளது.

*இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த*
*வகுத்தலும் வல்லது அரசு*[6]

என்னும் குறட்பாவில் இயற்றல் என்பதற்கு ஓர் அரசு தனக்குத் தேவையான வருவாய் வரும் வழிகளைக் கண்டறிந்து அந்த வருவாயைப் பெறுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று பொருள். அவ்வாறு பல்வேறு வழிகளில் வந்த வருவாயினை ஒருங்கிணைத்து எவ்வளவு எனக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஒருங்கிணைத்துக் கொள்வதை ஈட்டல் என்கிறது. அவ்வாறு

ஒருங்கிணைத்துக் கொண்ட வருவாயினைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இந்த இடத்தில் ஊழல் இல்லாத தன்மையினைக் குறிப்பிடுகிறது. ஊழல் இருந்தால் இருக்கின்ற வருவாயினை இழக்கும் நிலை ஏற்படும். எனவே ஒருங்கிணைத்த வருவாயினைப் பாதுகாக்கும் திறனும் ஓர் அரசுக்கு வேண்டும். அவ்வாறு காத்து வைத்திருக்கும் பொருள்களை அப்படியே பயனற்றுப் போக விடாமல் பகுத்துக் கொடுக்க வேண்டும். எந்தத் துறைக்கு எவ்வளவு கொடுத்தால் நாடு செழிக்கும் என்பதனை அறிந்து துறை தோறும் பகுத்துக் கொடுக்க வேண்டும். அவ்வாறு வகுத்துக் கொடுப்பதில் அரசின் திறமை உச்சமாக வெளிப்படும் எனத் தெரிவித்துள்ளது திருக்குறள். இதே வகுத்தலைப் பதிற்றுப்பத்தும் பின்வருமாறு தெரிவித்துள்ளது.

*பல்வேறு வகைய நனந்தலை ஈண்டிய*
*மலையவும் கடலவும் பண்ணியம் பகுக்கும்*
*ஆறு முட்டுறா அது அறம் புரிந்து ஒழுகும்*
*நாடல் சான்ற துப்பின் பணைத்தோள்*
*பாடுசால் நன்கலம் தரூஉம்*
*நாடு புறந்தருதல் நினக்குமார் கடனே!*

இந்தியாவைப் போன்ற மாநில அமைப்புகள் கொண்ட நாட்டில் உள்ள பொருள்கள் அனைத்தும் அந்த நாட்டின்கண் உள்ள மாநிலங்கள் அனைத்திற்கும் சம அளவில் சென்று சேர வேண்டும். அவ்வாறு சென்று சேர வில்லை என்றால் மாநிலங்களுக்கு இடையே வேற்றுமை உணர்வு பெருகி நாட்டின் பாதுகாப்பானது கேள்விக்குரியது ஆகிவிடும். எனவேதான் பொருள் ஈட்டுவதற்கு இணையாக வகுத்தலையும் பெரிதாகக் கருதுகின்றனர்.

முதலில் பொருள் ஈட்டிய தன்மையினைப் பதிற்றுப்பத்து விளக்குகிறது. தன் நாட்டிலும் பகைவர் நாட்டிலும் திரட்டிய பொருள் என்று தெரிவிக்கிறது. தன் நாட்டின் வளத்தின் வாயிலாகவும் பகைவர் நாட்டிலிருந்து கொண்டுவந்த பொருள்கள் வாயிலாகவும் ஒரு நாட்டிற்குச் செல்வம் வருகிறது. அவ்வாறு வந்த செல்வத்தினை வகைப்படுத்தி நாட்டு வளர்ச்சிக்குப் பயன்படுத்துவது மன்னனின் கடமை ஆகும். நாட்டு வளர்ச்சிக்கு முறையாக வழங்குவதை அறம் என்று தெரிவிக்கிறது. எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழ்கின்ற வாழ்க்கையினை அறம் என்று தெரிவிக்கிறது இந்தப் பாடல். எனவே அறம் என்பது எல்லோருடைய இன்பத்தையும் அடிப்படையாகக் கொண்டது என்றாலும் அது மன்னனின் வகுத்தல் திறனை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது எனத் தெளிய முடிகிறது.

*கற்பு அறத்தின் மேன்மை*

கற்பினையும் அறமாகவும் அறத்தின் சிறப்பாகவும் கொண்டவர்கள் தமிழர். இல்லத்தினை ஆள்பவள் பெண் என்பதால் பெண்ணை இல்லாள் என்று சிறப்பித்தனர். நாட்டை ஆளும் மன்னவனாக இருந்தாலும் இல்லத்தை ஆளும் இல்லாள் சரியாக அமையவில்லை என்றால் அவனால் நாட்டைச் சரியாக ஆட்சி செய்ய இயலாது. எனவேதான் வாழ்க்கைத் துணை நலம் என்று சிறப்பித்தார் திருவள்ளுவர்.

*இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதன்*
*இல்லவள் மாணாக் கடை* [8]

இல்லத்தை ஆட்சி செய்யும் பெண் கற்பில் சிறந்து மாண்புடையவளாக விளங்கினால் ஒருவனுடைய இல்லத்தில் எல்லாச்

செல்வங்களும் நிறைந்திருக்கும். அதே பெண் மாண்பில்லாதவள் என்றால் எல்லாச் செல்வங்களும் இருந்தாலும் இல்லாத தன்மைக்கு ஒப்பாகும் என்று இந்தக் குறள் தெரிவித்துள்ளது. இந்தக் குறளில் கற்பினை மாண்பு எனத் தெரிவித்த திருவள்ளுவர் இன்னொரு குறளில் கற்பு என்றே வெளிப்படையாகத் தெரிவித்துள்ளார்.

*பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்*
*திண்மை உண்டாகப் பெறின்* [9]

கற்பினை வலிமையான அறம் என்று இந்தக் குறட்பாவில் திருவள்ளுவர் தெரிவித்துள்ளார். இந்த வலிமையான கற்பாகிய அறத்தினை ஒரு பெண் தன்னுடையதாகக் கொண்டு வாழ்ந்தால் அந்தப் பெண்ணை விட வேறு எந்தச் செல்வமும் ஒருவனுக்குக் கிடையாது என்று விளக்கியுள்ளார். இந்தக் குறட்பாவிலும் மனித வாழ்க்கையில் கற்புப் பெறும் உயர்ந்த இடத்தினைத் தெரிவித்துள்ளார்.

கற்பின் பெருமையைப் பதிற்றுப்பத்து, பின்வருமாறு தெரிவிக்கிறது.

*வெண்திரை முந்நீர் வளைஇய உலகத்து*
*வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து*
*வண்டன் அனையை மன் நீயே! வண்டுபட*
*ஒலிந்த கூந்தல் அறம்சால் கற்பின்*
*குழைக்கு விளக்கு ஆகிய ஒள்நுதல் பொன்னின்*
*இழைக்கு விளக்கு ஆகிய அவ்வாங்கு உந்தி*
*விசும்பு வழங்கு மகளிருள்ளும் சிறந்த*
*செம்மீன் அனையள் நின் தொல்நகர்ச் செல்வி* [10]

இந்த உலகம் கடலால் சூழப்பட்டுள்ளது. இந்த உலகில் நிலைத்த புகழுடன் வாழ்வதற்கு ஒரு காரணமாக விளங்குவது செல்வம். அத்தகைய செல்வத்தினை மிகுதியாகக் கொண்டு மிகுந்த புகழுடன் விளங்கியவன் வண்டன் என்பவன் ஆவான். அந்த வண்டன் கொண்ட புகுழுக்கு இணையானவன் என்று களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் புகழ்ந்துள்ளார். இந்தச் சேரமன்னன் அறத்தின் பெருமையினை உணர்ந்தவன் என்பதனை விளக்குவதற்காக அவனது மனைவின் அறக்கற்பினைத் தெரிவித்துள்ளார்.

பெண்கள் காதில் அணியும் அணிகலனுக்குப் பெயர் குழை. அந்தக் குழை என்ற அணிகலனுக்கு ஒளியைத் தருகிறது சேரன் மனைவியின் கண்கள். அவளது மேனியில் விளங்கும் அணிகலன்களுக்கு அவளது மேனியும் தொப்பூழும் ஒளியினைக் கொடுக்கின்றன. இத்தகைய ஒளிபொருந்திய அழகு கொண்டவள் சேரனின் மனைவி. அவள் கற்பு நெறி தவறாதவள். கற்பினை ஓர் அறமாகக் கொண்டவள். அவளது கற்பு அறத்தின் வாயிலாகவே அறத்தின் மேன்மையினை அறிந்துள்ளான் நார்முடிச் சேரல் என்று உணர்ந்துகொள்ளும் அளவிற்கு அறத்தின் பெருமையினைக் காப்பியாற்றுக் காப்பியனார் விளக்கியுள்ளார்.

*அறமல்லாதவை*

மிகுந்த கோபம், காமம், மிகுந்த இரக்கம், அச்சம், பொய் சொல்லுதல், அளவுக்கு அதிகமான அன்பு, கடுமையாகத் தண்டித்தல் முதலானவை அறம் அல்லாதவை ஆகும். இத்தகைய அறம் அல்லாதவற்றை நீக்கி அறத்தின் பெருமையை உணர்ந்து நல்லறம்

பேணியவர்கள் சேரமன்னர்கள். அவர்கள் வழியில் வந்தவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என்று போற்றுகிறார் பாலைக் கௌதமனார்.

சினம் என்பது கொடியது. அது யாரிடம் இருக்கிறதோ அவர்களை வேறு யாரும் நெருங்க முடியாது. எனவே சினத்தைக் கொல்லி நோய் என்கிறார் திருவள்ளுவர்.

*சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்*
*ஏமப் புணையைச் சுடும்* [11]

இந்தக் குறட்பாவில் சினத்தினை நெருப்போடு ஒப்பிட்டுப் பின் அதனினும் கொடியது என்கிறார் திருவள்ளுவர். நெருப்பு அதனுடன் சேர்ந்திருக்கும் பொருள்களை மட்டும் அழிக்கும். ஆனால் சினமோ தன்னைச் சேர்ந்திருப்பவர்களை அழிப்பதுடன் அவர்களுக்குத் துணை நிற்பவர்களையும் சேரவிடாமல் ஒதுக்கிவிடும் என்று சினத்தின் கேட்டினைத் தெரிவித்துள்ளார். இந்தக் குறட்பாவில் கோபத்தினை மட்டும் கொடியதாகக் காட்டிய திருவள்ளுவர் பின்வரும் குறட்பாவில் கொடியதாகக் காமத்தினை முன்வைக்கிறார்.

*காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்*
*நாமம் கெடக்கெடும் நோய்* [12]

உண்மை அறிவு எப்போது தோன்றும் என்றால் காமம், கோபம், அறிவின்மை என்னும் மூன்றும் நம்மிடம் இல்லை என்றால் மெய்யறிவுக்கு எதிராக நிற்கும் நோய் நம்மை விட்டு நீங்கும் என்று குறிப்பிட்ட திருவள்ளுவர் இவற்றுள் முதலாவது காமம் என்று குறிப்பிட்டுள்ளார்.

*சினனே காமம் கழி கண்ணோட்டம்*
*அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை*
*தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து*
*அறம் தெரி திகிரிக்கு வழியடை ஆகும்*
*தீது சேண் இகந்து நன்று மிகப்புரிந்து*
*கடலும் கானமும் பல பயம் உதவ*
*பிறர் பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது*
*மையில் அறிவினர் செவ்விதின் நடந்து தம*
*அமர் துணைப் பிரியாது பார்த்து உண்டு மாக்கள்*
*மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய*
*ஊழி உய்த்த உரவோர் உம்பல்!* [13]

இந்தப் பாடலில் அறம் அல்லாத செயல்கள் எவை என்று பட்டியலிட்டுப் பாடியுள்ளார் பாலைக் கௌதமனார். சினம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது இங்கே தேவையற்ற சினத்தைக் குறிக்கும். காமம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது மிகுந்த காமத்தினைக் குறிக்கும். கண்ணோட்டத்தினைப் பாடல் அடியிலேயே கழி கண்ணோட்டம் என்று குறித்து மிகுதியான இரக்கம் என உணர்த்தியுள்ளார். அச்சம் என்பது அஞ்சத் தகாத இடங்களில் அச்சப்படுவதைக் குறிக்கும். அன்பு தேவையானது. ஆனால் அளவுக்கு அதிகமான அன்பு தேவையற்றது என உணர்த்தியுள்ளார். தவறு செய்தவரைத் தண்டிப்பது மன்னனின் கடமை. ஆனால் அந்தத் தண்டனையானது தவற்றினை விடக் கொடுமையானதாக இருத்தலாகாது என்பதனை உணர்த்தவே தெறல் கடுமை என்று தெரிவித்துள்ளார். இவ்வாறு குறிப்பிட்டுள்ளவை அனைத்தும் அறத்தின் வழியாக ஆட்சி செய்வதற்குத் தடையானவை ஆகும். எனவே இவற்றை விலக்கி நல்லாட்சி புரிவதே மன்னனின் கடமை ஆகும். அத்தகைய நல்லாட்சியினைப் பல்யானை செல்

கெழுகுட்டுவனின் முன்னோர் வழங்கியுள்ளனர். அந்த மரபில் தோன்றிய அவன் நன்மைகள் பலவற்றைச் செய்தும் தீமைகளை அகற்றியும் நல்லாட்சி புரிந்தான். கடல், காடு, மலை, வயல் என்று உள்ள நானில வளத்தினையும் நல்ல வழியில் பெற்று நல்லாட்சி புரிந்தான். நாட்டில் உள்ள குடிமக்கள் யாரும் துன்பம் அடையா வண்ணம் காத்துக் கொண்டான். பிறர் பொருளினைக் கவரும் உள்ளம் இல்லாததால் வீணான போர் நிகழ வில்லை. எனவே நாட்டில் அமைதி நிலவியது. குற்றமற்ற அறிவுடையார் சொல்லும் அறவழியிலிருந்து சிறிதும் விலகாமல் தன்னைச் சார்ந்தவர்களைப் பிரியாமல் ஆட்சி செய்கின்ற காரணத்தால் நாட்டிலும் அனைத்து மக்களும் தங்கள் உற்றார் உறவினரோடு சிறந்து வாழ்ந்தனர். இவ்வாறு அறம் அல்லாதவற்றை நீக்கி அறவழியில் நல்லாட்சி புரிந்து வாழ்தலைச் சங்க கால மன்னர்கள் போற்றியுள்ளனர் எனலாம்.

*அந்தணரின் அறச் செயல்*

அறம் என்னும் சொல்லுக்கு வாழ்க்கை முறை என்னும் பொருளும் உண்டு. மன்னனின் வாழ்க்கை முறை, மக்களின் வாழ்க்கை முறை என்று அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையின் அனுபவத்தின் வாயிலாக வாழ்க்கை முறைகளை வகுத்து வாழ்கிறவர்கள் தமிழர்கள். அந்தத் தமிழர்களுக்கு அப்பாற்பட்டவர்கள் அந்தணர்கள் என்பதால் அவர்களின் வாழ்க்கை அறத்தினைத் தனித்த அறமாக அவர்கள் கண்டனர். அந்த வாழ்க்கை அறத்தினைப் பாலைக் கௌதமனார் பின்வருமாறு பாடியுள்ளார்.

*ஓதல் வேட்டல் அவை பிறர் செய்தல்*
*ஈதல் ஏற்றல் என்று ஆறு புரிந்து ஒழுகும்*
*அறம்புரி அந்தணர் வழி மொழிந்து ஒழுகி*

*ஞாலம் நின்வழி ஒழுக பாடல் சான்று.* [14]

வேதத்தை ஓதுதல், வேள்வி செய்தல், வேதத்தினைப் பிறர் போற்றச் செய்தல், வேள்வி செய்தலைப் பிறர் ஏற்றுக்கொள்ளும்படி செய்தல், பிறருக்குக் கொடுத்தல், பிறரிடம் பொருள் பெறுதல் என்னும் ஆறு தொழில்களும் அந்தணர்கள் செய்யும் அறச் செயல்கள் ஆகும். இந்த அறவழியினை ஏற்றுக்கொண்டு அவர்கள் வழிநின்று ஆட்சி செய்பவதால் உலகம் பல்யானை செல் கெழு குட்டுவன் ஆணை கேட்டு நடக்கிறது என்று பாடியுள்ளார்.

இந்தப் பாடலில் இடம் பெற்றுள்ள அந்தணர் என்னும் சொல் பார்ப்பனர்களைக் குறிக்கிறது என்பதனைத் தொல்காப்பியத்தின் துணைகொண்டு நாம் அறிய இயலும். தொல்காப்பியத்தின் புறத்திணையியல் தெரிவிக்கிறது.

*அறுவகைப் பட்ட பார்ப்பன பக்கமும்*
*ஐவகை மரபின் அரசர் பக்கமும்*
*இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்*
*மறுவில் செய்தி மூவகைக் காலமும்*
*நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்*
*நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்*
*பாலறி மரபின் பொருநர் கண்ணும்*
*அணிநிலை வகையொடு ஆங்கெழு வகையின்*
*தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்*[15]

என்று வாகைத் திணை நூற்பா தெரிவிக்கிறது. இதில் பார்ப்பனர்க்கு என்று தெரிவிக்கப்பட்டுள்ள வேதம் ஓதுதல், வேதம் ஓதச் செய்தல்,

வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், பிறரிடம் பொருளைப் பெறுதல், பிறருக்குப் பொருளைக் கொடுத்தல் என்னும் ஆறினையும் குறிப்பிட்டுள்ளது. எனவே பதிற்றுப் பத்தில் அந்தணர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது பார்ப்பனரைக் குறிக்கும் எனலாம். இந்த ஆறு தொழில்களும் பார்ப்பனர்களின் அறம் என்று தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே விளங்கியது என்பதனை மேற்காணும் நூற்பாவின் இறுதி அடியில் இடம்பெற்றுள்ள 'என்மனார் புலவர்' என்னும் தொடரால் அறிந்து கொள்ள முடிகிறது.

பார்ப்பனர்களின் அறுவகைத் தொழிலினைத் திருமுருகாற்றுப் படையும் தெரிவிக்கிறது.

*இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது*
*இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி*
*அறுநான்கு இரட்டி இளமை நல்யாண்டு*
*ஆறினில் கழிப்பிய அறன் நவில் கொள்கை*

*மூன்றுவகைக் குறித்த மூத்தீச் செல்வத்து*
*இருபிறப்பாளர் பொழுது அறிந்து நுவல*[16]

இந்த அடிகளில் பார்ப்பனர்களின் அறுவகைத் தொழில் குறிக்கப்பட்டுள்ளதுடன் அவர்களை இருபிறப்பாளர் என்றும் தெரிவிக்கிறது. பூணூல் அணிவதற்கு முன் ஒரு பிறப்பு, பூணூல் அணிந்த பின்னர் வேறொரு பிறப்பு என்றும் இருவகைப் பிறப்பினைக் கொண்டவர்கள் என்று அவர்கள் குறிக்கப்பட்டுள்ளனர். கல்விக்காலம் முழுவதும் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து வாழும் அவர்கள் அந்த அறத்தினில் தவறாமல் வாழ்கின்றனர் என்பதனை இந்த அடிகள் உணர்த்துகின்றன.

*அறம் காக்கும் பெண்டிர்*

மன்னன் காக்கும் அறம் நல்லாட்சி. மக்கள் காக்கும் அறம் நல்வாழ்வு. பெண்கள் காக்கும் அறம் கற்பறம். இந்தக் கற்பறத்தினைக் கைக்கொண்டவர்களாகப் பாண்டிய நாட்டுப் பெண்கள் விளங்கினர் என்று பரிபாடல் திரட்டுத் தெரிவிக்கிறது. பரிபாடல் திரட்டின்கண் உள்ள இரண்டாம் பாடலில்,

*பணிவு இல் உயர் சிறப்பின் பஞ்சவன் கூடல்*
*மணி எழில் மாமேனி முத்த முறுவல்*
*அணி பவளச் செவ்வாய் அறம் காவற் பெண்டிர்*
*மணி அணிந்த தம் உரிமை மைந்தரோடு ஆடித்*
*தணிவின்று வையைப் புனல்* [17]

பரிபாடல் திரட்டில் இடம் பெற்றுள்ள இந்த இரண்டாம் பாடல் வையை பற்றிய பாடல் ஆகும். மதுரையை அணி செய்யும் ஆறு வையா ஆறு. இந்த ஆற்றில் மதுரையின் கண் உள்ள மகளிர் நீராடச் செல்கின்றனர். அந்த மகளிரின் அழகினை வருணிக்கிறார். தமிழ்ப் பெண்களின் நிறம் மாநிறம். அந்த மாநிறம் கொண்ட பெண்கள் முறுவல் பூத்த முகம் கொண்டவர்கள். அவர்களது வாய் சிவந்த நிறம் கொண்டது. அவர்கள் தங்கள் கணவர்களுடன் வையையில் நீராடுகின்றனர். கற்பினை வாழ்க்கை நெறியாக– அறமாகக் கொண்டு வாழ்கின்றனர் என்று இந்தப் பரிபாடல் தெரிவிக்கிறது.

*அறிவுப் போரும் மறப் போரும்*

திருப்பரங்குன்றத்தில் அறிவில் சிறந்தோர் தங்கள் அறிவுத் திறன்

வெளிப்படும்படியாகத் தங்கள் கருத்தினை நிலைநாட்டும் சொற்போரில் திழைத்தனர். வீரர்கள் தங்கள் உடல் வலிமையினைக் காட்டும் வீரப்போரில் மூழ்கினர். இந்த இரு பிரிவினரும் தங்கள் துறையினில் முறையாகச் செயல்பட்ட தன்மையினை அற வழிப்பட்டது என்கிறார் நப்பண்ணனார்.

*புலத்தினும் போரினும் போர் தோலாக் கூடல்*
*கலப்போடு இயைந்த இரவு தீர் எல்லை*
*அறம் பெரிது ஆற்றி அதன் பயன் கொண்மார்*
*சிறந்தோர் உலகம் படருநர் போல*
*உரிமாண் புனைகலம் ஒண்துகில் தாங்கி*
*புரிமாண் புரவியர் போக்கு அமை தேரர்*
*தெரி மலர்த் தாரர் தெரு இருள் சீப்ப நின்*
*குன்றொடு கூடல் இடைஎல்லாம் ஒன்றுபு*
*நேர் பூ நிரை பெய்து இரு நிலம் பூட்டிய*
*தார் போலும் மாலைத் தலை நிறையால் தண்மணல்*
*ஆர் வேலை யாத்திரை செல்யாறு.* [18]

மக்கள் தங்கள் வாழ்க்கை முறையில் மாற்றம் ஏதும் இல்லாமல் வாழ்வதே அறம் எனப்படுகிறது. அந்த அறச் செயலாகிய தங்கள் தொழிலினை அறிவுத் துறையினரும் போர்த்துறையினரும் புரிந்து தேவர் உலகம் செல்வது போல மதுரையில் இல்லறத்தின் கண் உள்ளோர் மகிழ்ச்சியுடன் செல்கின்றனர் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இங்கே இல்லறத்தில் பெறும் மகிழ்ச்சியும் சொர்க்கத்தில் பெறும் மகிழ்ச்சியும் ஒன்றானவை என்னும் கருத்து உணர்த்தப் பெற்றுள்ள தன்மை போற்றுதற்குரியது ஆகும்.

*திருமாலின் செங்கோல் அறம்*

முழுமுதற் கடவுளாகப் போற்றப்படுபவன் திருமால். அந்தத் திருமால் அனைத்து இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறான் என்பதையும் அறம் தவறாச் சிறப்புடையவன் என்பதையும் பரிபாடலில் இளவெயினனார் தெரிவித்துள்ளார்.

*தீயினுள் தெறல் நீ, பூவினுள் நாற்றம் நீ*
*கல்லினுள் மணியும் நீ, சொல்லினுள் வாய்மை நீ*
*அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் மைந்து நீ*
*வேதத்து மறைநீ பூதத்து முதலும் நீ*
*வெஞ்சுடர் ஒளியும் நீ திங்களுள் அளியும் நீ*
*அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ*
*ஆதலின்*
*உறையும் உறைவது இலையே உண்மையும்*
*மறவியில் சிறப்பின் மாயமார் அனையை*
*முதல்முறை இடைமுறை கடைமுறைத் தொழிலில்*
*பிறவாப் பிறப்பு இலை பிறப்பித்தோர் இலையே*
*பறவாப் பூவை பூவினோயே*
*அருள் குடையாக அறம் கோலாக*
*இருநிழல் படாமை மூவேழ் உலகமும்*
*ஒரு நிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ*
*பாழ் என, கால் என, பாகு என, ஒன்று என*
*இரண்டு என, மூன்று என, நான்கு என, ஐந்து என*
*ஆறு என, ஏழு என, எட்டு என, தொண்டு என*
*நால்வகை ஊழி எண் நவிற்றும் சிறப்பினை*
*செங்கட் காரி கருங்கண் வெள்ளை*

*பொங்கட் பச்சை பைங்கண் மாஅல்*
*இடவல குடவல கோவல காவல*
*காணா மரப நீயா நினைவ*
*மாயா மன்ன உலகு ஆள் மன்னவ*
*தொல்லியல் புலவ நல்யாழ் பாண*
*மாலைச் செல்வ தோலாக் கோட்ட*
*பொலம்புரி ஆடை வலம்புரி வண்ண*
*பருதி வலவ பொருதிறல் மல்ல*
*திருவின் கணவ பெருவிறல் மள்ள*
*மாநிலம் இயலா முதல்முறை அமையத்து*
*நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய*
*வாய்மொழி மகனோடு மலர்ந்த*
*தாமரைப் பொகுட்டு நின்மேனி நிழலே!*[19]

திருமால் தீயினுள் வெப்பமாகவும், பூவில் மணமாகவும் கல்லின் மணியாகவும், சொல்லின் உண்மையாகவும் அறத்தில் அன்பாகவும் இருக்கின்றான் என்று இந்தப் பாடலில் பாடப்பட்டுள்ளது. இங்கே அறம் என்பது நற்பண்புகளை உணர்த்துகிறது. அத்தகைய நற்பண்புகளில் உயர்ந்தது அன்பு என்றும் இங்கே தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு பொருளிலும் உயர்ந்தது எதுவோ அதுவே திருமால் என்று தெரிவிக்கும் இந்தப் பாடலில் அறம் என்று தெரிவிக்கும்போது அன்பு என்று திருமால் உருவகப்படுத்தப்பட்டுள்ளதால் அறங்களுள் எல்லாம் உயர்ந்த அறம், அதாவது நற்பண்புகளுள் எல்லாம் உயர்ந்த பண்பு அன்பு என்பது உணர்த்தப்பட்டுள்ளது எனலாம்.

காயாம்பூ என்னும் பூவானது நீல நிறம் கொண்ட பூ. அந்தப் பூவின் நிறத்தினைக் கொண்டவன் திருமால்.அவன் மேல் உலகம், கீழ்

உலகம், பூவுலகம் என்னும் மூவுலகத்தையும் ஆட்சி செய்கிறான். அவன் எல்லா உயிர்களிடமும் இரக்கம் கொண்டவன். அந்த அருளினை வெண்கொற்றக் குடையாகவும் அறத்தினைச் செங்கோலாகவும் கொண்டு ஆட்சி செய்கிறான் என்று கூறுமிடத்தில் செங்கோல் வழுவாமல் இருப்பது அறம் என்றும் அந்த அறத்தையே செங்கோலாகக் கொண்டிருக்கிறான் என்று தெரிவித்திருப்பதால் அவனது ஆட்சியே அறத்தின் ஆட்சி என்று தெளிவுபடுத்தியுள்ளார் எனலாம்.

*அறவோர் அடைவர் முருகனை*

அறத்தின் வழிநடப்பவர்களால் மட்டுமே முருகனின் திருவருளினைப் பெறமுடியும். மற்றவர்களால் முருகனை அணுகமுடியாது என்பதை,

*நின்குணம் எதிர்கொண்டோர் அறம் கொண்டோர் அல்லதை*
*மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை*
*செறு தீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்*
*சேரா அறத்துச் சீரில்லோரும்*
*அளித்தவப் படிவத்து அயரியோரும்*
*மறுபிறப்பு இல் எனும் மடவோரும் சேரார்*
*நின்நிழல்* [20]

என்னும் அடிகளில் தெரிவித்துள்ளார். முருகனை அடைவோர் யாவர் என்னும் பட்டியலில் அறத்தின் வழி நடப்போர், மன்னுயிருக்கு நல்லவற்றைச் செய்ய நினைப்போர், அரிய தவம் செய்கிறவர் ஆகியோரைச் சேர்த்துள்ளார். யார் எல்லாம் முருகனை அடைய முடியாது என்னும் பட்டியலில், தீய நெஞ்சம் கொண்டவர்கள், சினம் கொண்டவர்கள், அறத்தின் வழியில் வாழாதவர்கள், பொய்த்தவ வேடம்

கொண்டு வாழ்கிறவர்கள், மறுபிறப்பு இல்லை என்று அறியாமல் கூறுகிறவர்கள் என்று தெரிவித்துள்ளார். இப்பாடலில் அறவழியில் வாழ்கின்ற அறவோர் முருகனை அடைவர் என்றும் அறவழியில் வாழாதவர்கள் முருகனை அடைய மாட்டார்கள் என்றும் கூறியிருப்பதிலிருந்து இறைவனை அடைவதற்கும் அறம் முதன்மையானது என அறிய முடிகிறது.

*அறம் செய்யும் காலம்*

அறத்திற்குப் பல பொருள்களை வழங்குவர். அவற்றுள் ஒன்று பிறருக்கு வழங்குதல் என்னும் ஈகை ஆகும். அந்த வகையில் அறச்செயல்களைச் செய்யும் காலம் என்று கார்த்திகை மாதத்தினைப் பழங்காலத்தில் கருதியிருக்கின்றனர் என்பதைப் பின்வரும் நற்றிணைப் பாடல் தெரிவிக்கிறது.

*புலி பொரச் சிவந்த புலாலம் செங்கோட்டு*
*ஒலி பல்முத்தம் ஆர்ப்ப வலி சிறந்து*
*வன்சுவல் பராரை முருக்கி, கன்றொடு*
*மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்*
*தேன் செய் பெருங்கிளை இரிய வேங்கைப்*
*பொன்புரை கவளம் புறந்தருபு ஊட்டும்*
*மாமலை விடரகம் கவைஇ காண்வர*
*கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை*
*அறுமீன் பயந்த அறம்செய் திங்கள்*
*செல்சுடர் நெடுங்கொடி போலப்*
*பல் பூங் கோங்கம் அணிந்த காடே* [21]

தலைவியை அழைத்துக்கொண்டு உடன்போக்காகச் செல்லும்

தலைவன் அவ்வாறு போகிற வழியில் தலைவியின் தந்தைக்குச் சொந்தமான காட்டினைக் காட்டுகிறான். அந்தக் காட்டில் கோங்க மரங்களில் பூக்கள் மலர்ந்துள்ளன. அந்த மலர்கள் கார்த்திகை விளக்குகளைப் போலக் காட்சி அளித்தன. அது கார்த்திகை நட்சத்திரம் தோன்றும் கார்த்திகை மாதம் என்றும் அந்த மாதத்தில் ஈகைச் செயல்களாகிய அறம் நிகழும் என்று இந்தப் பாடல் தெரிவிக்கிறது. எந்தக் காலத்திலும் பிறருக்கு உதவுவது தமிழரின் இயல்புதான் என்றாலும் சிறப்பாகக் கார்த்திகை மாதத்தில் ஈகைச் செயல்கள் நன்றாக நடந்துள்ளன என உணர்த்தப்பட்டுள்ளது.

*அறச்சாலைச் சிறப்பு*

சோழ நாட்டின் தலைநகராக விளங்கிய பூம்புகாரில் அறச்சாலை இருந்ததைப் பட்டினப் பாலை தெரிவிக்கிறது. அந்த அறச்சாலைக்கு வந்தோர்க்கு எல்லாம் உணவு படைக்கப்பட்டது. அவ்வாறு உணவு வழங்குவதற்காக அடுக்களையில் சோறு தொடர்ந்து பொங்கப்பட்டு வந்தது. அவ்வாறு சோறு பொங்கிய பின் வடித்த கஞ்சிநீரானது தெருவில் ஓடிச் சேறாகிய காட்சியை உருத்திரங்கண்ணனார் காட்டியுள்ளார்.

*திருத்துஞ்சும் திண் காப்பின்*
*புகழ் நிலைஇய மொழி வளர*
*அறம் நிலைஇய அகன் அட்டில்*
*சோறு வாக்கிய கொழுங்கஞ்சி*
*யாறு போலப் பரந்து ஒழுகி*
*ஏறுபொரச் சேறாகித்*
*தேர் ஓடத் துகள் கெழுமி*

*நீறு ஆடிய களிறு போல*
*வேறு பட்ட வினை ஓவத்து*
*வெண்கோயில் மாசு ஊட்டும்* [22]

என்னும் அடிகளில் வந்தவர்க்கு எல்லாம் உணவு வழங்கிய அறச்சாலை காட்டப்பட்டுள்ளது. அந்த அறச்சாலையிலிருந்து வழிந்த கஞ்சியானது இடையறாது வெளியேறிக் கொண்டிருந்தது என்பதனை உணர்த்துவதற்காக அந்தக் கஞ்சி நீர் ஆறு போல ஓடியது என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் அந்தக் கஞ்சி தேங்கி நிற்கும் இடம் வழியாகத் தேர் ஓடியதால் சேறாகி அந்தச் சேறு சுவரில் பட்டது என்றும் அது ஓவியம் போல் குறிப்பாகப் புதுமையான ஓவியம் போல் காட்சியளித்தது என்றும் தெரிவித்துள்ளார் உருத்திரங்கண்ணனார்.

சோழ நாடு சோறுடைத்து என்னும் பழமொழிக்கு ஏற்ப அந்நாளில் சோழ நாட்டிற்கு வந்தோர்க்கு எல்லாம் உணவு தடை இல்லாமல் வழங்கப் பட்ட அறச் சிறப்பு இங்கே உணர்த்தப்பட்டுள்ளது.

*அறமும் பொருளும் இன்பமும்*

இந்த உலகில் வாழ்கிறவர்களுக்கு நிலைத்த பேறாகக் கருதப்படுபவை அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று ஆகும். இந்த மூன்றின் சிறப்பையும் பின்வரும் புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது.

*சிறப்பு இல் சிதடும் உறுப்பில் பிண்டமும்*
*கூனும் குறளும் ஊமும் செவிடும்*
*மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு*
*எண்பேர் எச்சம் என்று இவை எல்லாம்*

*பேதைமை அல்லது ஊதியம் இல் என*
*முன்னும் அறிந்தோர் கூறினர் இன்னும்*
*அதன் திறம் அத்தை யான் உரைக்க வந்தது*
*வட்ட வரிய செம்பொறிச் சேவல்*
*ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்*
*கானத்தோர் நின் தெவ்வர் நீயே*
*புறஞ்சிறை மாக்கட்கு அறம் குறித்து அகத்தோர்*
*புய்த்து எறி கரும்பின் விடு கழை தாமரைப்*
*பூம்போது சிதைய வீழ்ந்தன கூத்தர்*
*ஆடுகளம் கடுக்கும் அக நாட்டையே*
*அதனால் அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்*
*ஆற்றும் பெரும நின் செல்வம்*
*ஆற்றாமை நிற் போற்றாமையே!* [23]

என்னும் புறநானூற்றுப் பாடலில் குருட்டுத் தன்மை, தசைப் பிண்டம், கூன், குறள் என்னும் குறுகிய வடிவம், ஊமை, செவிடு, விலங்கின் தோற்றம், அறிவில்லாத் தன்மை என்னும் எட்டுக் குறைபாடுகளும் மனிதர்களிடம் ஏற்படும் குறைபாடுகள் ஆகும். இந்தக் குறைபாடு எதுவும் இல்லாமல் பெறும் பிறப்பானது பெரும்பேறு ஆகும். இந்தக் குறை இல்லாமல் முழுமை பெற்ற மனிதனாகப் பிறப்பது போல் சோழன் நலங்கிள்ளியின் செல்வமானது அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றனையும் வழங்க வல்லது என்று மாங்குடி கிழார் பாடியுள்ளார். இந்தப் பாடல் வாயிலாக அறவழியில் சோழன் நலங்கிள்ளி ஆட்சி புரிகிறான் என்பது உணர்த்தப் பட்டுள்ளது. அறவழி அல்லாத வழியில் அவனது ஆட்சி நிகழ்ந்தது என்றால் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் அவனுடைய செல்வம் வழங்குவதற்குப் பதிலாகத் தீமையை நல்கும் என்பது சொல்லாமலேயே விளங்குகிறது. மேலும் அறத்தின்

வழியில் வாழ்கின்றவர்களுக்கு மட்டுமே முன்பு கூறிய எட்டுக் குறைகளில் எதுவும் இல்லாத பிறப்பு அமையும் என்பதும் விளக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

*அற நூல் கருத்துப்படி வாழ்வு*

மனிதர்கள் அறநூல்கள் தெரிவிக்கும் நற்கருத்துக்கு ஏற்ப தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு வாழவில்லை என்றால் துன்பம் அடைய நேரிடும் என்பதனை ஆலத்தூர் கிழார் தெரிவித்துள்ளார்.

*ஆன்முலை அறுத்த அறனில்லோர்க்கும்*
*மாணிழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்*
*பார்ப்பார் தப்பிய கொடுமையோர்க்கும்*
*வழுவாய் மருங்கில் கழுவாயும் உள என*
*நிலம் புடை பெயர்வது ஆயினும் ஒருவன்*
*செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என*
*அறம் பாடின்றே ஆயிழை கணவ!*
*காலை அந்தியும் மாலை அந்தியும்*
*புறவுக்கரு அன்ன புன்புல வரகின்*
*பால்பெய் புன்கம் தேனொடு மயங்கி*
*குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு*
*இரத்தி நீடிய அகன்தலை மன்றத்து*
*கரப்பு இல் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி*
*அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணர்க்கு*
*அகலாச் செல்வம் முழுதும் செய்தோன்*
*எம்கோன் வளவன் வாழ்க என்றுநின்*
*பீடுகெழு நோன்தாள் பாடேன் ஆயின்*

*படுபு அறியலனே பல்கதிர்ச் செல்வன்*
*யானோ தஞ்சம் பெரும, இவ்வுலகத்துச்*
*சான்றோர் செய்த நன்று உண்டாயின்*
*இமயத்து ஈண்டி இன்குரல் பயிற்றி*
*கொண்டல் மாமழை பொழிந்த*
*நுண்பல் துளியினும் வாழிய பலவே!* [24]

இந்தப் பாடலில் அறம் அல்லாத செயல்களை முதலில் தெரிவித்து அறத்தின் பெருமை விளக்கப்பட்டுள்ளது. பசுவின் மடியை அறுத்தல் கொடிய செயல். அந்தக் கொடிய செயலினைச் செய்தவர் அறம் இல்லாதவர் என்று தெரிவிக்கிறது. பெண்களின் கருவினைச் சிதைத்தல் அந்தக் காலத்தில் கொடிய பாவமாகக் கருதப்பட்டுள்ளது. ஏனெனில் இன்றைய கரு நாளைய வீரன் என்னும் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு கருச் சிதைத்தலை அறமற்ற செயலாகக் குறிப்பிட்டுள்ளனர். பார்ப்பனர்க்குச் செய்யும் தீமையும் கொடுமையானதாகக் கருதப்பட்டுள்ளது. இவை எல்லாம் பெரிய கொடுஞ்செயல்கள் என்றாலும் இந்தக் கொடுஞ்செயல்களிலிருந்து ஒருவன் தப்பிப் பிழைப்பதற்கு வழி உண்டு. ஆனால் ஒருவன் செய்த உதவியை மறந்தால் அதனால் ஏற்படும் பாவத்திலிருந்து தப்பிப் பிழைக்கவே முடியாது என்று அறம் தெரிவிக்கிறது என்று ஆலத்தூர் கிழார் பாடியுள்ளார். இதனைத் திருவள்ளுவரும்

*எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு*[25]

என்று குறிப்பிட்டுள்ளார். எனவே ஒருவன் செய்த உதவியை மறந்து செயல்படுவது பாவம் என அறிந்துகொள்ளமுடிகிறது.

மேலும் இந்தப் பாடலில் உணவினையும் செல்வத்தையும் வழ்ங்குவதையும் அறம் என்று குறிக்கப்பட்டுள்ள தன்மையைக் காணமுடிகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாணர்களுக்கு வரகரிசிச் சோற்றுடன் முயல் இறைச்சியையும் கொடுத்து அவர்கள் மகிழ்ந்து உண்ணச் செய்துள்ளான். அத்தகைய கொடை உள்ளம் கொண்ட அவன் இந்த உணவினை வழங்கியதோடல்லாமல் பெருஞ்செல்வத்தையும் வழங்கியுள்ளான். இவ்வாறு வழங்கும் வள்ளல்தன்மை கொண்ட அவனை நான் காலையும் மாலையும் போற்றிப் பாடவில்லை என்றால் முன்பு குறிப்பிட்ட செய்த நன்றியை மறந்த பாவத்தில் சிக்கியவன் ஆவேன். எனவே அவன் இமயமலைச் சாரலில் பெய்யும் மழைத் துளிகளை விட நீண்ட நாள் வாழ வேண்டும் என்று வாழ்த்திப் பாடியுள்ளார். இந்தப் பாடலில் பசித்தவர்களுக்கு உணவும் செல்வமும் வழங்குவது அறம் என்றும் அந்த அறச் செயல்களைக் குறைவின்றிச் செய்தவர்கள் புலவர் போற்றும் பெருமை கொண்டு விளங்கியுள்ளனர் என அறியமுடிகிறது.

*அறமும் மழையும்*

அற நெறி தவறாமல் மன்னன் ஆட்சி செய்தால் மழை தவறாமல் பெய்யும். அவ்வாறு மழை தவறாமல் பெய்வதைக் கொண்டே மன்னனின் ஆட்சி அறவழியில் நடைபெறுகிறது என்பதனை அறிந்து கொள்ளலாம் என்று வெள்ளைக்குடி நாகனார் பாடியுள்ளார்.

*நளியிரு முந்நீர் ஏணி ஆக*
*வளியிடை வழங்கா வானம் சூடிய*

*மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்*
*முரசு முழங்கு தானை மூவருள்ளும்*
*அரசு எனப்படுவது நினதே பெரும!*
*அலங்கு கதிர்க்கனலி நால்வயின் தோன்றினும்*
*இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்*
*அம்தண் காவிரி வந்து கவர்பு ஊட்ட*
*தோடு கொள் வேலின் தோற்றம் போல*
*ஆடுகண் கரும்பின் வெண்பூ நுடங்கும்*
*நாடு எனப்படுவது நினதே அத்தை ஆங்க*
*நாடுகெழு செல்வத்துப் பீடு கெழு வேந்தே*
*நினவ கூறுவல் எனவ கேண்மதி*
*அறம்புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து*
*முறைவேண்டு பொழுதில் பதன் எளியோர் ஈண்டு*
*உறை வேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே*
*ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ*
*மாக விசும்பின் நடுவு நின்றாங்கு*
*கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை*
*வெயில் மறை கொண்டன்றோ அன்றே வருந்திய*
*குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ*
*வெளிற்றுப் பனந்துணியின் வீற்று வீற்று கிடப்ப*
*களிற்றுக் கணம் பொருத கண்அகன் பறந்தலை*
*வருபடை தாங்கிப் பெயர் புறத்தூ ஆர்த்து*
*பொரு படை தரூஉம் கொற்றமும் உழுபடை*
*ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே*
*மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்*
*இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்*
*காவலர் பழிக்கும் இக்கண் அகல் ஞாலம்*
*அது நற்கு அறிந்தனை ஆயின் நீயும்*

*நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது*
*பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்*
*குடிபுறந்தருகுவை ஆயின் நின்*
*அடி புறந்தருகுவர் அடங்காதோரே!* [26]

மன்னவனின் செங்கோல் வளையாத நல்லாட்சி நடைபெற்றால் மழை பெய்யும் என்று கூறிய வெள்ளைக் குடி நாகனார் ஒரு நாடு சிறப்பாக விளங்குவதற்கு வேளாண்மை சிறந்து விளங்க வேண்டும் என்று உணர்த்தியுள்ளார். எனவே அரசு என்றால் அது கிள்ளிவளவனின் அரசு என்றும் நாடு என்றால் அது கிள்ளிவளவனின் சோழ நாடு என்றும் புகழ்ந்து போற்றியுள்ளார். அவனது நாட்டில் வேளாண்மை சிறந்து விளங்குகின்ற காரணத்தால் மழைவளம் நன்கு அமைந்துள்ளது. மழைவளம் மிகுந்து காணப்படுவதால் அவன் அறம் தவறா நல்லாட்சி நடத்துகிறான் என்று தெரிவித்திருப்பதிலிருந்து அறத்திற்கும் மழைக்கும் தொடர்பு காட்டி அறத்தின் பெருமையை உணர்த்தியுள்ளார்.

*அறம் வளர்க்கும் சோழர் பரம்பரை*

புறா ஒன்றினைக் காப்பதற்காக அந்தப் புறாவினைத் துரத்திய வல்லூறினுக்குத் தனது தசையை அரிந்து கொடுத்து அடைக்கலமாக வந்த புறாவைக் காத்த சிபிச் சக்கரவர்த்தி சோழர் குடியைச் சேர்ந்தவன்.

ஆகாயத்தில் தொங்கிக் கொண்டிருந்த அவுணர்களின் கோட்டையினைத் தேவர்களுக்காக அழித்தவன் சோழர்குடியைச் சேர்ந்த செம்பியன் என்பவன்.

இளம் வயதினனாக இருந்த கரிகாலனால் அறம் வளங்க முடியாது என்று கருதிய முதியவர்களின் எண்ணத்தினை அறிந்து முதிய கோலத்தில் வந்து அறத்தை நிலைநாட்டியவன் கரிகாலன். இத்தகைய அறம் நிலைபெற்ற குடியில் தோன்றியவன் நீ என்று கிள்ளிவளவனின் அறச்செயல் வாயிலாக அறத்தைப் போற்றுகிறார் மாறோக்கத்து நப்பசலையார்.

*புறவின் அல்லல் சொல்லிய கறைஅடி*
*யானைவால் மருப்பு எறிந்த வெண்கடைக்*
*கோல்நிறைத் துலாஅம் புக்கோன் மருக!*
*ஈதல்நின் புகழும் அன்றே சார்தல்*
*ஒன்னார் ஒட்கும் துன்னருங் கடுந்திறல்*
*தூங்கெயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்*
*அடுதல் நின் புகழும் அன்றே கெடு இன்று*
*மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறம் நின்று நிலையிற்று ஆகலின் அதனால்*
*முறைமை நின் புகழும் அன்றே மறம்மிக்கு*
*எழுசமம் கடந்த எழு உறழ் திணிதோள்*
*கண்ஆர் கண்ணி கலிமான் வளவ*
*யாங்ஙனம் மொழிகோ யானே ஓங்கிய*
*வரைஅளந்து அறியாப் பொன்படு நெடுங்கோட்டு*
*இமயம் சூட்டிய ஏம விற்பொறி*
*மாண்வினை நெடுந்தேர் வானவன் தொலைய*
*வாடா வஞ்சி வாட்டும் நின்*
*பீடுகெழு நோன்றாள் பாடுங்காலே!* [27]

கிள்ளி வளவனின் வீரத்தைப் பாட நினைத்த புலவருக்குப் பாடுவதற்குச் சொல் கிடைக்கவில்லை. ஏனெனில் எல்லாப் புகழையும் அந்த வளவனின் முன்னோர் பெற்றுவிட்டனர். அதே புகழை மீண்டும் பாடுவது கூறியது கூறல் என்று கருதியதால் அந்தப் புகழை எல்லாம் வளவனின் முன்னோர் புகழாகவே அவர் காட்டியுள்ளார். அவ்வாறு அவர் காட்டிய இரக்கச் சிந்தனைக்கு எடுத்துக்காட்டு, சிபிச்சக்கரவர்த்தி. வீரத்திற்கு எடுத்துக்காட்டு தொடித்தோள் செம்பியன். அறம் கூறும் திறத்திற்கு எடுத்துக்காட்டு கரிகால் வளவன்.

இமயத்தில் வில்லினைப் பொறித்து வெற்றி கொண்ட பெருமைகொண்ட குடி சேரர் குடி. அந்தச் சேரரை வென்று பெருமை பெற்ற நீ இமயத்தை வென்ற பெருமையைப் பெற்றுவிட்டாய் என்று கூறிய நப்பசலையார் கரிகால் பெருவளத்தானி அறத்தன்மையை எடுத்துக்காட்டி நல்ல முறையில் நீதி வழங்குவது சிறந்த அறம் என்று நிலை நாட்டியுள்ளார்.

*அறமற்ற தன்மை காட்டிய புலவர்*

மன்னனுக்கு அறம் எது, அறமற்றது எது என்று உணர்த்தும் பெருமை கொண்டவர்கள் தமிழ்ப் புலவர்கள். அத்தகைய புலவர்களில் ஒருவரான கோவூர் கிழார் கூறிய அறக்கருத்தினைப் பின்வரும் பாடல் காட்டுகிறது.

*நீயே புறவின் அல்லல் அன்றியும் பிறவும்*
*இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை*
*இவரே புலன் உழுது உண்மார் புன்கண் அஞ்சி*

*தமது பகுத்து உண்ணும் தண்ணிழல் வாழ்நர்*
*களிறு கண்டு அழூஉம் அழாஅல் மறந்த*
*புன்தலைச் சிறாஅர் மன்று மருண்டு நோக்கி*
*விருந்தின் புன்கணோ உடைய*
*கேட்டனை ஆயின் நீ வேட்டது செய்மே![28]*

புறாவுக்காகத் தன் தசையை அரிந்து கொடுத்த சிபியின் செயலையும் பிறவற்றையும் இந்தப் பாடலில் தொகுத்துத் தந்துள்ளார் கோவூர் கிழார். மேலும் போரில் தோற்று உயிரை இழந்த மலையமான் திருமுடிக்காரியின் குழந்தைகளை யானைக்காலிலிட்டுக் கொல்வதற்குக் கிள்ளிவளவன் துணிந்த போது அதனைத் தடுத்து அறமற்ற செயலைச் செய்யாமல் தடுத்துள்ளார் அவர். எனவே புலவர்கள் அறத்தின் பெருமையை மன்னர்களுக்கு நேருக்கு நேராகவும் மறைமுகமாகவும் உணர்த்தியுள்ளனர் என அறியமுடிகிறது. இந்தப் பாடலில் சோழர் குடியின் பெருமையை முதலில் கூறிப் பின்னர் மலையமான் திருமுடிக்காரியின் வள்ளல் தன்மையையும் கூறி வேறு எதுவும் கூறாமல் புலவர் நிறுத்தியதோடு அல்லாமல், உன்னைப் பற்றியும் உனது பகைவன் காரி பற்றியும் நான் சொல்வதைச் சொல்லிவிட்டேன். உனக்கு என்ன செய்ய விருப்பமோ அதன்படி செய்து கொள் என்று முடிவினை வளவனின் விருப்பத்திற்கே விட்டுவிட்டார் புலவர். புலவர் உணர்த்திய அறத்தினை உணராத அளவிற்கு அறிவற்றவனா கிள்ளி வளவன். உடனே தான் செய்யவிருந்த பாவச் செயலை நிறுத்தி அந்தக் குழந்தைகளைப் பராமரித்தான் என்பது தமிழர் வரலாறு காட்டும் உண்மை. இந்த உண்மை நிகழ்வுக்குக் காரணமாக இருந்தது பண்டைத் தமிழரின் அறவுணர்வு ஆகும்.

*அறங்கூறு அவையம்*

பண்டைத் தமிழர் நீதி வழங்குவதற்கு என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அறங்கூறு அவையத்தினை அமைத்து நல்ல முறையில் நீதி வழங்கினர் என அறிய முடிகிறது. அந்த அறங்கூறு அவையத்தில் மன்னன் அமர்ந்து நீதி கூறினான் என்பதற்குக் கரிகால் வளவன் சான்று. அந்த அறங்கூறு அவையத்தில் சான்றோர்களை நியமித்து நீதி வழுவாமல் நல்லாட்சி புரிந்த தன்மையினைப் பின்வரும் வஞ்சினப் பாடல் உணர்த்துகிறது.

*மடங்கலின் சினைஇ மடங்கா உள்ளத்து*
*அடங்காத் தானை வேந்தர் உடங்கு இயைந்து*
*என்னொடு பொருதும் என்ப அவரை*
*ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு*
*அவர் புறங்காணேன் ஆயின் சிறந்த*
*பேரமர் உண்கண் இவளினும் பிரிக*
*அறன் நிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறனில் ஒருவனை நாட்டி முறை திரிந்து*
*மெலிகோல் செய்தோன் ஆகுக மலிபுகழ்*
*வையை சூழ்ந்த வளம்கெழு வைப்பின்*
*பொய்யா யாணர் மையற் கோமான்*
*மாவனும் மன்னெயில் ஆந்தையும் உரைசால்*
*அந்துவன் சாத்தனும் ஆதன் அழிசியும்*
*வெஞ்சின இயக்கனும் உளப்படப் பிறரும்*
*கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த*
*இன்களி மகிழ்நகை இழுக்கி யான் ஒன்றோ*

*மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த*
*தென்புலம் காவலின் ஒரீஇப் பிறர்*
*வன்புலம் காவலின் மாறியான் பிறக்கே* [29]

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் பாண்டிய நாட்டினை ஆண்ட மன்னன். அவன் மீது பகைவர் போர்தொடுத்து வந்த வேளையில் அவர்களைப் போரில் புறமுதுகிட்டு ஓடச் செய்வேன் என்று வஞ்சினம் கூறுகிறார். அந்த வஞ்சினத்தின் வாயிலாகக் கற்பின் பெருமையும் நட்பின் பெருமையும் அறத்தின் பெருமையும் விளக்கம் பெறுவதைக் காணமுடிகிறது. பகைவரிடம் நான் தோற்றுப் போனால் எனது மனைவியைப் பிரிந்தவன் ஆவேன் என்று கூறுமிடத்து ஆணுக்கும் கற்பு உண்டு என்னும் செய்தியை அவன் உணர்த்துகிறான்.

மாவன், ஆந்தை, அந்துவன் சாத்தன், அழிசி, இயக்கன் என்னும் ஐவரும் பாண்டியனின் நண்பர்கள். அவர்களிடையே விளங்கிய நட்பிலிருந்து விலகியவன் ஆவேன் என்று வஞ்சினம் கூறியிருப்பதிலிருந்து நட்பினைப் போற்றும் திறம் உணர்த்தப்பட்டுள்ள தன்மையைக் காணமுடிகிறது.

அறங்கூறு அவையத்தில் அறிஞர் அமர்ந்து நீதி வழங்கினால் நீதி முறை சிறப்பாக அமையும். அற நெறி அறியாதவரை அந்த அவையத்தின் தலைவராக்கினால் அவர்கள் அறநெறிக்கு அப்பாற்பட்டுப் பிழைபட்ட நீதியை வழங்குவர். அப்படி அறநெறி அறியாதவரை அறங்கூறு அவையத்தில் நியமித்த குற்றத்தைச் செய்தவன் ஆவேன் என்று கூறும் இடத்தில் அறத்தின் சிறப்பு உணர்த்தப்படுகிறது.

மேலும் மன்னனானவன் கற்பினைப் போற்றவேண்டும் என்னும் அறத்தையும் நண்பர்களுடன் இணங்கியிருத்தல் வேண்டும் என்னும் அறத்தையும் நீதியைச் சரியாக வழங்கவேண்டும் என்னும் செய்தியையும் தரும் வகையில் இந்தப் பாடல் அமைந்துள்ளது எனலாம்.

*வள்ளலின் கொடை அறம்*

வள்ளல் தன்மையில் உயர்ந்து விளங்குபவன் பாரி. அவனது வள்ளல் தன்மையினை மடமைத் தன்மை கொண்டது என்று கருதுவோரும் உளர். ஏனெனில் காட்டில் கொழுகொம்பு இல்லாமல் தரையில் தவழ்ந்த முல்லைக்கொடிக்குத் தனது தேரை வழங்கினான் அவன். மனிதர்கள் அமர்ந்து செல்லும் பெருமையும் வேலைப்பாடு கொண்டதுமான தேரினை ஒரு முல்லைக் கொடி படர்வதற்கு விடுவது விரைவின் காரணமாக நடைபெற்ற ஒரு செயல். இந்தச் செயலினை முன்றுறை அரையனார் 'அறிமடமும் சான்றோர்க்கு அணி' என்று பாடியுள்ளார். இவ்வாறு அறியாமல் செய்யும் செயலும் சிறப்புடையதே என்று விளக்கியுள்ளார். கொடை உள்ளம் கொண்ட பாரி வழங்கும் போது தம் அறிவுப்புலனைப் பயன்படுத்தாமல் செயல்படுவான் என்பது இதன்மூலம் விளங்குகிறது. இந்தப் பாரியின் கொடை அறத்தினைக் கபிலர் பின்வரும் பாடலில் தெரிவித்துள்ளார்.

*குறத்தி மாட்டிய வயல்கடைக் கொள்ளி*
*ஆரம் ஆதலின் அம்புகை அயலது*
*சாரல் வேங்கைப் பூஞ்சினை தவழும்*
*பறம்பு பாடினரதுவே அறம் பூண்டு*
*பாரியும் பரிசிலர் இரப்பின்*

*வாரேன் என்னான் அவர் வரையன்னே*[30]

குறத்தி சமைப்பதற்குக் கொண்டு வந்த சுள்ளியில் ஒன்று சந்தன மரத்தின் கொம்பு. அந்தச் சந்தனக் கொம்பினை அடுப்பில் வைத்து எரிக்கும்போது அந்தப் புகை மலைச்சாரல் முழுவதும் பரவும். உயர்ந்த சந்தனக் கட்டையைப் பாதுகாக்காமல் குறத்தி எரிப்பதைப் போலப் பாரியும் தன்னிடம் உள்ள பொருள்களைப் பாதுகாத்து வைக்காமல் பிறருக்குக் கொடுத்துவிடுவான். அத்துடன் நில்லாமல் அவனைக் கேட்டாலும் கொடுத்துவிடுவான் என்று அவனது கொடை அறச் சிறப்பைப் பாடியுள்ளார்.

*பேகனிடம் வேண்டும் பாணர்கள்*

பாணர்கள் பாடிப் பரிசில் பெற்று வாழ்வது வழக்கம். இங்கே பாணர்கள் கேட்ட பரிசில் நம்மை வியப்பில் ஆழ்த்தும் அளவுக்கு அமைந்துள்ளது. அவர்கள் பொன்னையோ பொருளையோ உணவையோ உடையையோ கேட்கவில்லை. அதற்கு மாறாக அவர்கள் பேகனைப் பிரிந்து வாடும் அவனது மனைவி கண்ணகியைச் சென்று சேருமாறு வேண்டுகின்றனர்.

*மடத்தகை மாமயில் பனிக்கும் என்று அருளி*
*படாஅம் ஈத்த கடாஅ நல்லிசை*
*கடாஅ யானைக் கலிமான் பேக*
*பசித்தும் வாரேன் பாரமும் இலமே*
*களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ்*
*நயம்புரிந்து உறையுநர் நடுங்கப்பண்ணி*

*அறம் செய்தீமோ அருள் வெய்யோய் என*
*இஃது யாம் இரந்த பரிசில் அஃது இருளின்*
*இனமணி நெடுந்தேர் ஏறி*
*இன்னாது உறைவி அரும் படர் களைமே!* [31]

முன்னர்க் குறிப்பிட்ட அறிமடமும் சான்றோர்க்கு அணி என்னும் பழமொழியில் இந்தப் பேகன் மயிலுக்குப் போர்வை வழங்கிய செயலும் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. அவ்வாறு அவன் மயிலுக்குப் போர்வை வழங்கிய செயலையும் பரணர் சுட்டிக் காட்டியுள்ளார்.

*இயல் தொகுப்பு*

பண்டைத்தமிழர் அறம் சிறக்கவேண்டும் என்று விரும்பினார்கள். வாழ்வில் உயர்ந்ததாக அறத்தினைக் கருதினார்கள். அந்தணர் அறம்புரிதலைப் போற்றி வாழ்ந்தனர். மன்னன் செங்கோல் தவறாமல் ஆட்சி செய்து அறத்தினைக் காத்தான். பெண்கள் கற்பை ஓர் அறமாகக் கருதிப் போற்றினார்கள். கற்பின் பெருமையைச் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன. அந்தணர் தங்கள் அறுவகைத் தொழிலைத் தவறாது புரிந்தனர். பெண்கள் தமக்கும் அறம் காக்கும் கடமை உண்டு என்று கருதி வாழ்ந்தனர். வீரத்தை விடவும் அறிவுக்கு முதன்மை கொடுத்தனர். இறைவனும் அறம் தவறாச் சிறப்பினைக் கொண்டிருந்தான் என அறிய முடிகிறது. அத்தகைய தகுதி கொண்டவனாகத் திருமால் பரிபாடலில் காட்டப்பட்டுள்ளான். அறம் செய்தவர்களால் மட்டுமே இறைவனை–குறிப்பாக முருகனை அடைய முடியும் அறிய முடிகிறது. அறம் செய்வதற்கு என்று குறிப்பிட்ட காலம் எதுவும் இல்லை என்றாலும் கார்த்திகை மாதத்தினை அறம் செய்யும் காலம் என்று போற்றியிருக்கின்றனர்.

அறம் பொருள் இன்பம் என்பவற்றுள் அறத்தினை முதன்மையானதாகக் கருதுகிறது சங்க இலக்கியம். அறநூல் தெரிவிக்கும் அறக் கருத்துகளைப் பின்பற்றி வாழ்க்கையினை அமைத்துக் கொண்டு சிறப்பாக வாழ்ந்துள்ளனர். ஒருவர் செய்த உதவியைப் போற்றி மதித்துள்ளனர். அறத்திற்கும் மழைக்கும் தொடர்பு உண்டு என்று கருதி வாழ்ந்திருக்கின்றனர்.

தன்னுயிர் போல் பிற உயிர்களையும் போற்றிக் காத்துள்ளனர். புறாவின் துன்பத்தையும் போக்கி வாழ்ந்துள்ளனர். அறங்கூறு அவையத்தினை நிறுவி அறத்தைக் காத்துள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. ஐங்குறுநூறு : பா.7
2. பதிற்றுப்பத்து : பா.85
3. ஐங்குறுநூறு : பா.312
4. மேலது : பா.387
5. புறநானூறு : பா.20
6. திருக்குறள் : பா.385
7. பதிற்றுப்பத்து: பா.59
8. திருக்குறள் : பா.53
9. மேலது : பா.54
10. பதிற்றுப்பத்து : பா.31
11. திருக்குறள் : பா.306
12. மேலது : பா.360
13. பதிற்றுப்பத்து : பா.22
14. மேலது : பா.24
15. தொல்காப்பியம் : நூ.1021
16. திருமுருகாற்றுப்படை : அடி 177–182
17. பரிபாடல், திரட்டு :பா. 2
18. பதிற்றுப்பத்து : பா.19
19. பரிபாடல் : பா.3
20. மேலது : பா.5
21. நற்றிணை : பா.202
22. பட்டினப்பாலை : அடி 41–50
23. புறநானூறு : பா.28
24. மேலது : பா.34

25. திருக்குறள் : பா.110
26. புறநானூறு : பா.35
27. மேலது : பா.39
28. மேலது : பா.46
29. மேலது : பா.71
30 மேலது : பா.108
31. மேலது : பா.145

# சங்க இலக்கியத்தில் அறனில் தன்மை

மனித வாழ்க்கை என்பது சில பண்புகளையும் கோட்பாடுகளையும் அடிப்படையாய்க் கொண்டது. இந்தப் பண்புகளும் கோட்பாடுகளும் வரையறைக்குட்பட்டவை என்றாலும் அவை சிற்சில சமயங்களில் மீறப்பட்டிருக்கின்றன. அவ்வாறு மீறப்பட்ட செய்கைகளைச் சான்றோர் பழித்துரைத்துள்ளனர். இவ்வாறு சான்றோரால் பழித்துரைக்கப்பட்டவற்றை அறம் அல்லாதவை எனலாம்.

அவ்வாறு பழிக்கப்பட்டவை எவை என்பதனைத் திருக்குறள் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் என்று தெரிவித்துள்ளது.

*அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம்* [1]

என்னும் திருக்குறள் வாயிலாக அழுக்காறு இன்மை, அவாவின்மை, வெகுளியின்மை, இன்னாச்சொல் சொல்லாமை என்னும் நெறியின் நின்று வாழ்வதே அறம் என அறியமுடிகிறது. எனவே அறம் அல்லாத செயல்கள் அழுக்காறு கொள்வது, அவா கொள்வது, வெகுளி அடைவது, இன்னாச்சொல் கூறுவது என அறியலாம்.

மேலே சுட்டப்பட்ட நான்கு வகையான தீயொழுக்கங்களும் இல்லாமையே அறம் என்று தெரிவித்த திருவள்ளுவர் மனத்தில் குற்றம் இல்லாமல் இருப்பதே சிறந்த அறம் எனத் தெரிவித்துள்ளார்.

*மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற* [2]

என்னும் குறளில் மனத்தில் எந்தக் குற்றமும் இல்லாமல் வாழ்ந்துவிட்டால் அதுவே எல்லா வகையான அறச்செயல்களைச் செய்வதற்கும் இணையானது என்று தெரிவித்துள்ளார். இந்த இயலில் சங்க இலக்கியம் எவற்றை எல்லாம் அறனில் தன்மை எனக் குறிப்பிட்டுள்ளது எனக் காண்போம்.

*அறனில்லாதவன்*

சங்க இலக்கியங்கள் வாழ்க்கை அறத்தினை இல்லறம் என்றும் துறவறம் என்றும் பிரிக்கின்றது. இந்த இருவகை அறங்களைத் தவிர்த்து மனிதர்கள் பின்பற்ற வேண்டிய பல்வகை அறங்களையும் நாம் அறிவோம். ஆனால் அறனில்லாதவன் என்று சிலரைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

அறனற்ற செயல்களில் முதன்மையானதாகப் பசுவின் மடியினை அரிதல் முதலானவற்றை ஆலத்தூர் கிழார் தெரிவித்துள்ளார். அவர் இயற்றிய பாடலில் இடம்பெற்றுள்ள அறனற்ற செயல்களைக் காண்போம்.

*ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்*
*மாண்இழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும்*
*பார்ப்பார் தப்பிய கொடுமையோர்க்கும்*
*வழுவாய் மருங்கில் கழுவாயும் உள என*
*நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்*
*செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என*
*அறம் பாடின்றே ஆயிழை கணவ*
*காலை அன்றியும் மாலை அந்தியும்*
*புறவு கருவன்ன புன்புல வரகின்*
*பால்பெய் புன்கம் தேனொடு மயங்கி*
*குறுமுயல் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு*
*இரத்தி நீடிய அகன்தலை மன்றத்துக்*
*கரப்புஇல் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி*
*அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணற்கு*
*அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்*
*எம்கோன் வளவன் வாழ்க என்றுநின்*
*பீடுகெழு நோன்தாள் பாடேன் ஆயின்*
*படுபு அறயிலனே பல்கதிர்ச் செல்வன்*
*யோனோ தஞ்சம் பெரும இவ்வுலகத்து*
*சான்றோர் செய்த நன்று உண்டாயின்*
*இமயத்து ஈண்டி இன்குரல் பயிற்றி*
*கொண்டல் மாமழை பொழிந்த*
*நுண்பல் துளியினும் வாழிய பலவே!* [3]

என்னும் புறநானூற்றுப் பாடலில் அறம் இல்லாத செயல்கள் என்று நான்கினைக் குறிப்பிட்டுள்ளார் ஆலத்தூர் கிழார்.

1. ஆன் முலை அறுத்தல்
2. மகளிர் கருவைச் சிதைத்தல்
3. பார்ப்பனர்க்குத் தீமை செய்தல்
4. செய்த நன்றியை மறத்தல்

என்னும் இந்த நான்குமே அறன் இல்லாத செயல்கள்தான். என்றாலும் முதலில் குறிப்பிட்டுள்ள மூன்று அறனில்லாத செயல்களைச் செய்தவர்கள் அந்தத் துன்பத்திலிருந்து தப்பிப் பிழைக்க முடியும். ஆனால் செய்த நன்றியினை மறந்தவர்கள் அதனால் பெறும் பழியிலிருந்து தப்பிப் பிழைக்கவே முடியாது என்று அறிந்துகொள்ள முடிகிறது. எனவே நான்கும் அறனில்லாத செயல்கள்தான் என்றாலும் செய்த நன்றியினை மறத்தல் மிகவும் கொடுமையானது என அறியமுடிகிறது. எனவேதான் திருவள்ளுவரும்,

*செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்*
*வானகமும் ஆற்றல் அரிது* [4]

என்று குறிப்பிட்டுள்ளார்.

*தலைவனின் பொய்யுரை*

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் ஒருவன் வையையில் புதுப்புனல் வந்த போது பரத்தையுடன் சென்று நீராடுகிறான். அந்தப் பரத்தையுடன் ஆரவாரத்துடன் நீராடியது ஊரினர்க்குத் தெரியக் கூடாது என்று பரத்தையர் மறைக்கின்றனர். அவ்வாறு அவர்கள் மறைக்க நினைத்தாலும் மறைக்க முடியாமல் ஊரில் அலர் பரவுகிறது. அலர் பரவிய காரணத்தினால் தலைவன் பரத்தையுடன் நீராடியது

தலைவிக்கும் தோழிக்கும் தெரிந்து விடுகிறது. எனவே வாயில் வேண்டி வந்த தலைவன் கூறும் பொய்யினை ஏற்றுக்கொள்ளாது தோழி அவனுக்கு வாயில் மறுக்கிறாள்.

*பிணங்குஅரில் வள்ளை நீடிலைப் பொதும்பில்*
*மடிதுயில் முனைஇய வள்உகிர் யாமை*
*நொடிவிடு கல்லின் போகி அகன்துறைப்*
*பகுவாய் நிறைய நுங்கின் கள்ளின்*
*நுகர்வார் அருந்து மகிழ்பு இயங்கு நடையொடு*
*தீம்பெரும் பழனம் உழக்கி அயலது*
*ஆம்பல் மெல்லடை ஒடுங்கும் ஊர!*
*பொய்யால் அறிவன் நின் மாயம் அதுவே*
*கையகப்பட்டமை அறியாய் நெருநை*
*மைஎழில் உண்கண் மடந்தையொடு வையை*
*ஏர்தரு புதுப்புனல் உரிதினின் நுகர்ந்து*
*பரத்தை ஆயம் கரப்பவும் ஒல்லாது*
*கௌவை ஆகின்றால் பெரிதே காண்தகத்*
*தொல்புகழ் நிறைந்த பல்பூங்கழனி*
*கரும்பு அமல் படப்பை பெரும்பெயர்க் கள்ளூர்*
*திருநுதல் குறுமகள் அணிநலம் வௌவிய*
*அறனிலாளன் அறியேன் என்ற*
*திறனில் வெஞ்சூள் அறிகரி கடாஅய்*
*முறிஆர் பெருங்கிளைச் செறியப் பற்றி*
*நீறுதலைப் பெய்த ஞான்றை*
*வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே!* [5]

என்னும் மதுரைத் தமிழக் கூத்தனார் கடுவன் மள்ளனார் எழுதிய பாடலில் அறனிலாளன் என்று தலைவனைக் குறிப்பிடாமல் பொய்

கூறிய ஒருவனைக் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு அவன் கூறிய பொய்ந்நிகழ்ச்சி பின்வருமாறு.

கள்ளூர் என்னும் ஊர். அந்த ஊரில் இளமைத் தன்மை வாய்ந்த ஒருத்தியுடன் ஒருவன் காதல் கொண்டு மகிழ்ந்திருக்கிறான். பின்னர் அவளை எனக்குத் தெரியாது என்று பொது மன்றத்தில் பொய்ச்சத்தியம் உரைக்கிறான். அவன் உரைத்தது பொய் என்று மன்றம் அறிகிறது. எனவே அவனை ஒரு மரத்தின் கிளையில் கட்டிவைத்து அவனது தலைமேல் சாம்பலைக் கொட்டுகின்றனர். பொய் கூறிய அவனது நிலையினைக் கண்டு ஊர் மக்கள் அனைவரும் ஆரவாரம் செய்கின்றனர். அந்த ஆரவாரத்தைவிடவும் மிகுதியான ஆரவாரம் நேற்று நீ பரத்தையுடன் வைகையில் நீராடும்போது எழுந்தது. இவ்வாறு எல்லாருக்கும் தெரிந்த ஒன்றை மறைக்கின்றாயே! நீ அந்தப் பொய்ச்சத்தியம் செய்த அறனிலாளன் போன்றவன் என்று தலைவனுக்கு வாயில் மறுக்கிறாள் தோழி.

இந்தப் பாடலில் பொய்ச்சத்தியம் உரைப்பவனை அறனிலாளன் என்று உரைக்கிறார் கடுவன் மள்ளனார். பொய்ச்சாட்சி கூறுதல், பொய்ச்சத்தியம் உரைத்தல் முதலானவையும் அறனற்ற செயல்கள் என அறிய முடிகிறது.

*செந்நெல் அரிநர் கூர்வாள் புண்ணுறக்*
*காணார் முதலொடு போந்தன பூவே*
*படையொடும் கதிரொடும் மயங்கிய படுக்கைத்*
*தன்னுறு விழுமம் அறியா மென்மெலத்*
*தெறுகதிர் இன்துயில் பசுவாய் திறக்கும்*

*பேதை நெய்தற் பெருநீர்ச் சேர்ப்பர்க்கு*
*யான் நினைந்து இரங்கேனாக நோய்இகந்து*
*அறனி லாளன் புகழ எற்*
*பெறினும் வல்லேன் மன்தோழி யானே* [6]

இருவர் கொண்ட காதல் என்பது இருவருக்கும் சமமான இன்பத்தினைத் தரத்தக்கது. துன்பம் என்றாலும் இருவருக்கும் சமமான துன்பத்தினைத் தரவல்லது. இங்கே தலைவனைப் பிரிந்து இருக்கும் தலைவி மட்டுமே துன்பத்தினை அனுபவிக்க, தலைவன் துன்பம் எதுவும் இல்லாமல் இருப்பதாகத் தலைவி கருதுகிறாள். தலைவியின் காதல் துன்பத்தினை உணராமல் பிரிந்து சென்ற தலைவனின் செயல் அறனில்லாத செயல் என இங்கே உணர்த்தப்பட்டுள்ளது. அறிந்தோ அறியாமலோ நாம் செய்யும் செயல்களால் மற்றவர்க்குத் துன்பம் ஏற்படும் என்றால் அதுவும் அறனற்ற செயல் என இப்பாடல் வாயிலாக அறிய முடிகிறது.

அறுவடைக் காலத்தில் அதிகாலையில் நெற்பயிரை அறுத்து வயலில் உலர விடுகின்றனர். அவ்வாறு அறுவடை செய்த நெற்பயிருடன் நெய்தல் மலர்களும் கலந்து கிடந்தன. அந்த அதிகாலையில் கதிரவனது வரவினைக் கண்டதும் நெய்தல் மலர் மலருகிறது. நெய்தல் மலர் எவ்வாறு தனது துன்பத்தினை உணராமல் கதிரவனைக் கண்டு மலர்கிறதோ அதைப்போல நானும் தலைவனைக் கண்டு மகிழ்கிறேன். ஆனால் அவனோ என்னை வாட்டும் துன்பத்தினை அறியாமல் பிரிந்து சென்ற அறனிலாளனாக இருக்கின்றானே என்று நினைத்துப் புலம்புவதாக இந்தப் பாடல் அமைந்துள்ளதனைக் காணமுடிகிறது.

மேலும் நெய்தல் மலரின் உயிர் வாதையினைத் தனது காதல் நோய்க்கு இணையானதாகக் கருதி இரங்கும் தலைவியின் நிலையினைக் கருதும்போது உயிர் போகும் அளவிற்கான துன்பத்தினைக் கொடுத்தவன் அறனிலாளன் என்றே நமக்கும் தோன்றுகிறது.

நற்றிணைத் தலைவி கூறியதைப் போன்றே அறனிலாளன் என்று ஐங்குறுநூற்றுத் தலைவியும் கூறியுள்ளாள்.

*அம்ம வாழி தோழி நாம் அழப்*
*பல்நாள் பிரிந்த அறனிலாளன்*
*வந்தனனோ மற்று இரவில்*
*பொன்போல் விறற்கவின் கொள்ளும் நின் நுதலே!*[7]

என்னும் பாடலில் தலைவியைப் பிரிந்து பொருள்தேடச் சென்ற தலைவன் பலநாள் வராத காரணத்தினால் அவனை அறனிலாளன் என்று தனது தோழியிடம் கூறுகிறாள் தலைவி. இந்தப் பாடலில் தலைவனது வருகையினைக் கண்ட தோழிக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஏனென்றால் இத்தனை நாள் பிரிந்திருந்த தலைவன் இன்றைக்காவது வந்தானே என்னும் தேற்றநிலை அவளுக்கு இருந்தது. இந்தத் தேற்றநிலையினைக் கடந்த பெருந்துன்பத்தில் தலைவி ஆழ்ந்திருந்த காரணத்தினால் அவள் தலைவனை அறனிலாளன் என்று தெரிவிக்கிறாள்.

இந்தப் பாடலில் தலைவன்மேல் கொண்ட கோபம் சிறிதும் நீங்காத நிலையில் தலைவி காட்டப்பட்டுள்ளாள். ஆனால் ஐங்குறுநூற்றுத் தலைவியரில் வேறு ஒருத்தி தலைவனைக் கண்டதும்

அவன்மேல் கொண்ட கோபத்திலிருந்து விடுபட்டதனைக் காணமுடிகிறது. அம்மூவனார் பாடிய அந்தப் பாடல் வாயிலாகவே தலைவி இதனைத் தெரிவித்திருப்பதைக் காணமுடிகிறது.

*அம்ம வாழி தோழி யான் இன்று*
*அறனிலாளன் கண்ட பொழுதில்*
*சினவுவென் தகைக்குவென் சென்றனன்*
*பின் நினைந்து இரங்கிப் பெயர்தந்தேனே* [8]

இந்தப் பாடலில் தன்னைத் தவிக்கவிட்டுப் பிரிந்து நெடுநாள் சென்ற தலைவனை அறனிலாளன் என்று தெரிவித்திருந்தாலும் அவனைக் கண்டதும் அவளது நிலையில் மாற்றம் ஏற்பட்டிருப்பதனைக் காணமுடிகிறது.

*அறனில்லாத வண்டு*

தன்னைப் பிரிந்து சென்ற தலைவனை அறனில்லாதவன் என்று தெரிவித்த தலைவியர் நடுவே நற்றிணைத் தலைவி ஒருத்தி வண்டினைப் பார்த்து அறனில்லாத வண்டு என்று தெரிவித்துள்ளாள்.

*கொடியை வாழி தும்பி இந்நோய்*
*படுகதில் அம்ம யான் நினக்கு உரைத்தன*
*மெய்யே கருமை அன்றியும் செவ்வன்*
*அறிவும் கரிதோ அறனிலோய் நினக்கே*
*மனைஉறக் காக்கும் மாண்பெரு கிடக்கை*
*நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய*
*தாறுபடு பீரம் ஒதி வேறுபட*

*நாற்றம் இன்மையின் பசலை ஊதாய்*
*சிறுகுறும் பறவைக்கு ஓடி விரைவுடன்.*
*நெஞ்சு நெகிழ் செய்தனன் பயனோ அன்புஇல*
*வெம்மலை அருஞ்சுரம் இறந்தோர்க்கு*
*என் நிலை உரையாய் சென்னு அவண் வரவே!* [9]

என்னும் பாடலில் தலைவியைப் பிரிந்த தலைவன் கொடிய மலையையும் காட்டையும் கடந்து சென்றுள்ளான். அவனைத் தேடிச் சென்று நீ எனது நிலையை உரைக்கவில்லை. எனவே நீ அறம் இல்லாத நெஞ்சம் கொண்ட வண்டு என்று தெரிவிக்கிறாள். மேலும் வண்டின் நிறம் கருமையானது. அந்த வண்டின் நிறத்தினை அதன் உள்ளத்திற்கும் பொருத்திக் கூறியிருப்பது தும்பி சேர் கீரனார் இயற்றிய இப்பாடலுக்கு மேலும் அழகினைச் சேர்க்கிறது. வண்டே உனது உடல்தான் கருமை என்று நினைத்திருந்தேன் ஆனால் உனது உள்ளமும் கருமையுடையது என்று அந்தத் தலைவி மனம் நொந்து கூறியுள்ள தன்மையினைக் காணமுடிகிறது.

*வண்டின் தன்மையும் தலைவன் தன்மையும்*

கலித்தொகைத் தலைவி ஒருத்தி தனது காதலனைப் பைத்தியம் பிடித்தவன் என்று கூறுகிறாள். அவனைப் போற்றிப் பாடும் பாணனும் பைத்தியம் என்கிறாள். அவனது வருகையை ஏற்றுக் கொள்ளும் பரத்தையரும் பைத்தியம் என்கிறாள். அவனது தேரும் பைத்தியம் என்று தெரிவித்த அவள் நான் அவ்வாறு பைத்தியம் கொள்ள மாட்டேன் என்று ஊடல் கொண்டு நிற்கின்றாள்.

*பொய்கைப் பூப் புதிது உண்ட வரிவண்டு கழிபூத்த*
*நெய்தல்தாது அமர்ந்து ஆடிப் பாசடைச் சேப்பினுள்*
*செய்து இயற்றியது போல வயல் பூத்த தாமரை*
*மைதபு கிளர் கொட்டை மாண்பதிப் படர்தரூஉம்*
*கொய்குழை அகை காஞ்சித் துறை அணிநல் ஊர*

*அன்பு இலன் அறன் இலன் எனப் பாடான் என ஏத்தி*
*நின்புகழ் பல பாடும் பாணனும் ஏமுற்றான்*
*நஞ்சு நீர் செகுத்தலும் அறிந்து உண்டாங்கு அளியின்மை*
*கண்டும் நின்மொழி தேறும் பெண்டிரும் ஏமுற்றார்*
*முன்பகல் தலைக்கூடி நண்பகல் அவள் நீத்து*
*பின்பகல் பிறர் தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்*
*–என ஆங்கு*
*கிண்கிணி மணித் தாரோடு ஒலித்து ஆர்ப்ப ஒண்தொடிப்*
*பேர்அமர்க் கண்ணார்க்கும் படுவலை இது என*
*ஊரவர் உடன் நகத் திரிதரும்*
*தேர் ஏமுற்றன்று நின்னினும் பெரிதே!* [10]

வண்டானது பொய்கையில் பூத்த மலர்களில் வண்டினை உண்ட பின் அதன் அயலில் உள்ள கழியில் பூத்திருக்கும் நெய்தல் மலரில் வந்து தேன் உண்ணும். மீண்டும் மாலையில் தாமரை மலரில் வந்து கண்ணுறங்கும். இந்த வண்டினைப் போல் தலைவனும் முற்பகலில் ஒருத்தியுடனும் நண்பகலில் வேறு ஒருத்தியுடனும் பிற்பகலில் வேறு ஒருத்தியுடனும் கூடுகிறான். எனவே அவன் அன்பில்லாதவன். அறிவில்லாதவன் என்று ஊடலுடன் கூறுகிறாள்.

கலித்தொகைத் தலைவி ஒருத்தியைப் பார்த்து அவளது வாட்டத்திற்கான காரணத்தினைத் தோழியர் கேட்கின்றனர். அதற்கு அந்தத் தலைவி தனது வாட்டத்திற்கான காரணம் அறனில்லாத தலைவனின் காதல் அறமற்ற செயல் என்று உரைக்கிறாள். அத்தலைவன் எங்கே இருக்கிறான் என்று என்னால் அறிய முடியவில்லை.

கடலால் சூழப்பட்ட இந்த உலகத்தினை வானத்திலிருந்து நிலவு பார்த்துக்கொண்டிருக்கிறது. அந்த நிலவில் உள்ள களங்கமாகிய முயலே நீ என் தலைவன் எங்கே இருக்கிறான் என்று வானத்திலிருந்து பார்த்துச் சொல். அவ்வாறு சொல்லாவிட்டால் உன்னை வேட்டை நாயிடம் காட்டிக் கொடுத்து விடுவேன், வேடனிடம் நீ இருக்கும் இடத்தினைக் காட்டிக் கொடுத்துவிடுவேன், நிலவோடு உன்னையும் பாம்பிடம் சொல்லி விழுங்கச் செய்துவிடுவேன் என்றெல்லாம் காதல் நோயினால் புலம்புகிறாள். அந்தப் புலம்பலின் வெளிப்பாடாக நமக்குக் கிடைத்துள்ள பாடலைக் காண்போம்.

*நின்னுற்ற அல்லல் உரைஎன என்னை*
*வினவுவீர் தெற்றெனக் கேண்மின் ஒருவன்*

*குரல் கூந்தல் என்உள்ள எவ்வம் நினக்கு யான்*
*உரைப்பனைத் தங்கிற்று என்இன்னுயிர் என்று*
*மருவு ஊட்டி மாறி யதற்கொண்டு எனக்கு*
*மருவு ஒளிப்பட்டது என்நெஞ்சு.*

*எங்கும் தெரிந்து அதுகொள்வேன் அவன் உள்வழி*
*பொங்குஇரு முந்நீர் அகம் எல்லாம் நோக்கினை*

*திங்களுள் தோன்றி இருந்த குறு முயால்*
*எம்கேள் இதன் அகத்து உள்வழிக் காட்டீமோ*

*காட்டியாய் ஆயின் கத நாய் கொழுவுவேன்*
*வேட்டுவ உள்வழிச் செப்புவேன் ஆட்டி*
*மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த*
*என் அல்லல் தீராயெனின்.*

---------------------

*உதுக்காண் தையால் தேறு எனத் தேற்றி அறனிலான்*
*பைய முயங்கி ஒழி.*

----------------------

*ஓ ஓ கடலே தெற்றெனக் கண்ணுள்ளே தோன்ற இமையெடுத்துப்*
*பற்றுவேன் என்று யான் விளிக்கும் கால் மற்றும் என்*
*நெஞ்சத்துள் ஓடி ஒளிந்து ஆங்கே துஞ்சா நோய்*
*செய்யும் அறனில்லவன்.* [11]

என்னும் கலித்தொகை அடியில் தன்னுடன் கூடி இன்புற்ற பின் பிரிந்து சென்ற தலைவன் எங்கே இருக்கிறான் என்று என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை; எங்கே இருக்கிறான் என்று சொல்லாமல் சென்ற அவன் அறனிலாளன் என்று தலைவி வருந்திக் கூறுவதைக் காணமுடிகிறது.

*தாயின் ஏக்கம்*

தலைவி ஒருத்தி இளமைத் தன்மை வாய்ந்தவள். அவள் உணவு உண்ணுவதற்கு அடம் பிடிப்பவள். தேன் கலந்த பாலை உண்ண

வேண்டினாலும் அதனை உண்ணாமல் மறுத்துச் செல்கின்ற தன்மை வாய்ந்தவள். அத்தகைய தலைவி தலைவனோடு உடன் போக்கில் சென்றுவிட்டாள். அவள் தாயையும் உறவினரையும் பிரிந்து சென்ற நிலம் வறண்ட பாலை நிலம். நீருக்கு அலைந்த யானை குடித்த நீர் வற்றிய கிணறுகளைக் கொண்டது அந்தக் கொடிய பாலை நிலம். அந்தப் பாலைநிலத்து நீரற்ற கிணற்றினைத் தலைவன் தோண்டி அதில் ஊறிய சிறிது தண்ணீரினைக் குடத்தில் நிறைக்கிறான். அது அந்தக் குடத்தினை நிறைக்கவில்லை. அந்தக் குறை குடத்தில் உள்ள கலங்கல் நீரையும் மகிழ்ச்சியாகக் குடிக்கிறாள் அந்தத் தலைவி.

பாலையும் தேனையும் கலந்து கொடுத்தபோது கூடக் குடிக்க மறுத்த தலைவி கலங்கிய நீரினைக் குடிக்கும் வண்ணம் பிரித்துவிட்ட அந்தத் தலைவன் கொடியவன், அறனில்லாதவன் என்று தாய் புலம்புகின்றாள்.

*அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்*
*உணங்கு திறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்*
*குடபுல மருங்கின் உய்ம்மார் புள் ஓர்த்துப்*
*படை அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்*
*நிரை பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்*
*குறைக்குளம்பு ஒலித்த கல்பிறழ் இயவின்*
*வெஞ்சுரம் போழ்ந்த அஞ்சுவரு கவலை*
*மிஞிறு ஆர் கடாஅம் கரந்துவிடு கவுள*
*வெயில் தின வருந்திய நீடு மருப்பு ஒருத்தல்*
*பிணர்அழி பெருங்கை புரண்ட கூவல்*
*தெண்கண் உவரிக் குறைக்குட முகவை*
*அறனிலாளன் தோண்ட வெய்து உயிர்த்துப்*

*பிறைநுதல் வியர்ப்ப உண்டனள் கொல்லோ*
*தேன்கலந்து அளைஇய தீம்பால் ஏந்திக்*
*கூழை உலர்ந்து மோழைமை கூறவும்*
*மறுத்த சொல்லள் ஆகி*
*வெறுத்த உள்ளமொடு உண்ணா தோளே!*[12]

என்னும் பாடலில் சேந்தம் பூதனார் தலைவனின் செயலினை அறனில் செயல் என்று காட்டியுள்ளார்.

எந்தச் செயலாக இருந்தாலும் அதற்குப் பல கோணங்கள் உண்டு. ஒருவரது பார்வையில் அறனற்ற செயலாகத் தோன்றுவது வேறொருவர் பார்வையில் அறனுடைய செயலாகத் தோன்றுவதற்கு வாய்ப்பு உண்டு. இங்கே மகளைப் போக்கிய தாயின் பார்வையில் தனது மகள் பாலை நிலத்தில் அடையும் துன்பத்தினைக் கண்டு மனம் வெறுத்த நிலையில் அவனை அறனிலாளன் எனக் காட்சி அளிக்கிறான். அதே தலைவன் அந்தத் தலைவியின் பார்வையில் உள்ளம் ஒத்த காதலனாகக் காட்சி அளிக்கிறான். எனவே இந்த அறனிலாளனது செயல் முழுமையாக அறனற்ற செயல் என்று உரைக்க இயலாதது ஆகும்.

மகளைப் பிரிந்த வேறு ஒரு தாயும் தலைவனை அறனிலாளன் என்று கூறுவதனை அகநானூறு நமக்குக் காட்டுகிறது.

தோழியரோடு விளையாடுவதால் மிகவும் களைப்பு அடையும் தன்மை கொண்ட இளையவள் தலைவி. அவளது களைப்பினைப் போக்குவதற்காகக் கிண்ணத்தில் பாலை ஏந்தி எனது பங்கிற்காகவும் உனது தந்தையின் பங்கிற்காகவும் பாலைக் குடி என்று ஊட்டுவது

வழக்கம். அத்தகைய இளமைத் தன்மை கொண்ட தலைவி இன்று தலைவனோடு பாலை நிலம் வழியாக நடந்து செல்கிறாள். அந்தப் பாலை நிலத்தில் பொன் ஒழுக்குப் போன்ற வெண்ணிறப் பல்வரிசையினைக் கொண்ட செந்நாய்க்கு அஞ்சிய புள்ளி மான் விளா மரத்தின் அடிப்பகுதியில் சென்று மறைகிறது. அந்த விளா மரத்தின் நெற்றில் காற்றுப் புகுந்து கோவலர் ஊதும் குழலிசைபோல் கேட்கிறது. அந்த இசை வரும் திசை நோக்கிச் செல்லும் இயல்பு கொண்ட மான் போலத் தலைவியானவள் தலைவனுடன் சென்று விட்டாள்.

பந்து எறிந்து விளையாடும் போதே கால்வலிக்கு ஆட்படும் தலைவியானவளை இத்தகைய கொடிய பாலை நிலத்தின் வழியே அழைத்துச் சென்ற தலைவன் மிகவும் கொடியவன், அறனில்லாதவன் என்கிறாள் அந்தத் தாய்.

*சீர்கெழு வியனகர் சிலம்பு நக இயலி*
*ஓரை ஆயமொடு பந்து சிறிது எறியினும்*
*வாராயோ என்று ஏத்தி பேர்இலைப்*
*பகன்றை வால்மலர் பனிநிறைத்ததுபோல்*
*பால் பெய் வள்ளம் சால்கை பற்றி*
*என்பாடு உண்டனை ஆயின் ஒருக்கால்*
*நுந்தைபாடும் உண் என்று ஊட்டி*
*பிறந்ததற்கொண்டும் சிறந்தவை செய்து யான்*
*நலம் புனைந்து எடுத்த என்பொலந்தொடிக் குறுமகள்*
*அறனிலாளனொடு இறந்தனள் இனியென*
*மறந்து அமைந்து இராஅ நெஞ்சம் நோவேன்*
*பொன்வார்ந்தன்ன வைவால் எயிற்றுச்*

*செந்நாய் வெரீஇய புகர்உழை ஒருத்தல்*
*பொரிஅரை விளவின் புன்புற விளைபுழல்*
*அழல்எறி கோடை தூக்கலின் கோவலர்*
*குழல்என நினையும் நீரில் நீளிடை*
*மடத்தகை மெலியச் சாஅய்*
*நடக்கும்கொல் என நோவல் யானே* [13]

என்னும் கயமனார் பாடலில் பந்து எறியும் போதே கால்வலிக்கும் தன்மை கொண்ட தலைவியால் கொடிய பாலைவழியை எவ்வாறு கடக்க முடியும் என்று வருந்திய தாய் அத்தகைய கொடிய வழியில் அழைத்துச்செல்லும் தலைவனை அறனிலாளன் என்கிறாள்.

தலைவியின் துன்பம்

மழைக்காலம் வந்து முடிந்த பிறகும் பிரிந்து சென்ற தலைவன் வரவில்லை என்னும் துன்பத்தில் இருக்கிறாள் தலைவி. அப்போது அவளைப் பார்த்து, தோழி நீ ஆற்றியிருப்பது உன் கடமை என்கிறாள். தோழியின் கூற்றினைக் கேட்ட தலைவியின் வருத்தம் மிகுகிறது. எனவே தலைவனின் வராமையாகிய செயல் அறனற்ற செயல் என்கிறாள்.

மங்குல் மாமழை விண்அதிர்பு முழங்கி
துள்ளுப் பெயல் கழிந்த பின்றை புகைஉறப்
புள்ளிநுண் துவலை பூவகம் நிறைய
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர்வார் கண்ணின் கருவிளை மலர
துய்த்தலைப் பூவின் புதல்இவர் ஈங்கை

*நெய்த்தோய்த் தன்ன நீர்நனைஅம்தளிர்*
*இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர*
*அவரைப் பைம்பூப் பயில அகல்வயல்*
*கதிர்வார் காய்நெல் கட்கு இனிது இறைஞ்ச*
*சிதர்சினை தூங்கும் அறிசிர அரைநாள்*
*காய்சின வேந்தன் பாசறை நீடி*
*நம் நோய் அறியா அறனிலாளர்*
*இந்நிலை களைய வருகுநர் கொல் என*
*ஆனாது எறிதரும் வாடையொடு*
*நோனேன் தோழி என் தனிமையானே!*[14]

தலைவன் போருக்காக மன்னனுடன் சென்றுவிட்டான். போர் எண்ணத்துடன் பாசறையில் இருக்கின்ற தலைவனுக்குத் தலைவியின் எண்ணம் சிறிதும் வரவில்லை. எனவேதான் இந்த மழைக்காலம் முடிந்த பின்னரும் அவன் இங்கே வரவில்லை. நம்முடைய காதல் துன்பத்தினை அறியாமல் பாசறையில் இருக்கும் அவன் அறனிலாளன் ஆவான். இந்த வாடைக் காலத்தின் துன்பத்தினைப் போக்க அவன் வருவானோ? மாட்டானோ? தெரியவில்லையே! என்று வருந்துகிறாள்.

*அறனில் வேந்தன்*

தலைவியைப் பிரிந்து தலைவன் பொருள் ஈட்டச் செல்கிறான். போகிற வழியில் அவனது மனம் தலைவியை நினைக்கிறது. பொருள் ஈட்டச் செல்லாமல் தலைவியிடம் திரும்புவதற்கு மனம் விரும்புகிறது. அந்த மனத்தின் போக்கை மாற்றும் வகையில் தலைவன் கூறுவதனைப் பின்வரும் பாடல் தெரிவிக்கிறது.

*பல்லிதழ் மென்மலர் உண்கண் நல்யாழ்*
*நரம்பு இசைத்தன்ன இன்தீங் கிளவி*
*நலம் நல்கு ஒருத்தி இருந்த ஊரே*
*கோடு உழு களிற்றின் தொழுதி ஈண்டிக்*
*காடு கால் யாத்த நீடு மரச்சோலை*
*விழை வெளில் ஆடும் கழைவள நனைந்தலை*
*வெண்நுனை அம்பின் விசை இட வீழ்ந்தோர்*
*எண்ணு வரம்பு அறியா உவல்இடு பதுக்கைச்*
*சுரம்கெழு கவலைக் கோட்பால் பட்டன*
*வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்*
*கைப்பொருள் இல்லை யாயினும் மெய்க்கொண்டு*
*இன்னுயிர் செகாஅர் விட்டகல் தப்பற்குப்*
*பெருங்களிற்று மருப்பொடு வரிஅதள் இறுக்கும்*
*அறனில் வேந்தன் ஆளும்*
*வறனுறு குன்றம் பல விலங்கினவே!*[15]

கொடிய பாலை நிலத்தின் தன்மையினைக் கடுந்தொடைக் காவினார் இந்தப் பாடலில் காட்டியுள்ளார். பெரிய கூர்மையான கொம்புகளைக் கொண்ட ஆண் யானைகள் மிகுதியாகத் திரியும் பெரிய காடு. அந்த யானைகளுக்கு அஞ்சி யாரும் அவ்வழியே செல்லத் தயங்குவர். எயினர்களின் விசை அம்புகளுக்கு ஆளாகிய வழிப் போக்கர் பலர் பரல் கற்களுக்கிடையே இறந்து கிடப்பர். பலரும் செல்ல விரும்பாத அந்தப் பாலைவழியில் செல்கிறவர்களிடம் பொருள் இல்லை என்று அந்த எயினர்களைக் கொல்லாமல் விட்டு விட்டால் அந்த எயினர்களின் மன்னன் அவர்களுக்குத் தண்டனை வழங்குவான். அத்தகைய அறமில்லாத கொடிய மன்னன் ஆளுகின்ற மலைப்பகுதியைக் கடந்துதான் தலைவியின் ஊருக்குச்

செல்லவேண்டும். எனவே கொண்ட கொள்கையாகிய பொருள் ஈட்டலில் மாறாமல் செல் மனமே என்று தலைவன் தன் மனத்துக்குக் கட்டளையிட்டுச் செல்கிறான் என்று இந்தப் பாடல் தெரிவிக்கிறது.

இந்தப் பாடலில் அறமில்லா மன்னனின் செய்கைகளைக் காட்டியுள்ளார்.

அறமில்லா மன்னன் வழிப்பறித் தொழிலைத் தொழிலாகக் கொண்டிருப்பான்.

வழிப் போக்கர்களை அம்பு எய்து கொல்லச் செய்வான்.

வழிப் போக்கரிடம் பொருள் இல்லை என்றாலும் அவர்களைக் கொலைசெய்யவேண்டும் என்னும் எண்ணம் கொண்டவன்.

எயினர்கள் பொருள் இல்லா வழிப் போக்கர்களைக் கொல்லவில்லை என்றால் அதற்குரிய தண்டனையை அந்த எயினர்களுக்கு வழங்கும் அளவிற்குக் கொடியவன், அறமில்லாதவன்.

*அறனில்லாக் கூற்றுவன்*

இந்த உலகில் வாழ்கின்ற மக்கள் யாராக இருந்தாலும் கூற்றுவனின் கையில் அகப்பட்டு இறப்பது உறுதி. எனவே வாழ்க்கை நிலையற்றது. இந்த நிலையற்ற வாழ்க்கையில் இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் பொருள் ஆசையினால் தனது தலைவியைப் பிரிந்து செல்ல மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் தேடிய செல்வத்தை இங்கே விட்டுவிட்டுத் தான் அவர்கள் கூற்றுவன் கையில்

அகப்படுவர் என்னும் கருத்தினைக் கொண்ட பாடலில் கூற்றுவனை அறனில்லாக் கூற்றுவன் என்று தெரிவித்துள்ளார் குறுந்தொகைப் புலவர் காலெறி கடிகையார்.

*இருங்கண் ஞாலத்து ஈண்டு பயப் பெருவளம்*
*ஒருங்குடன் இயைவது ஆயினும் கரும்பின்*
*கால் எறி கடிகைக்கண் அயின்றன்ன*
*வால்எயிறு ஊறிய வசையில் தீம்நீர்க்*
*கோல்அமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய*
*ஆள்வினை மருங்கில் பிரியார் நாளும்*
*உறல் முறை மரபின் கூற்றத்து*
*அறனில் கோள்நற்கு அறிந்தி சினோரே!*[16]

உலகம் பெரிது . இந்த உலகில் உள்ள வளங்களும் மிகுதி. இந்த வளங்கள் அனைத்தும் கிடைக்கப் பெறுவதாக இருந்தாலும் தலைவியை விட்டுப் பிரிய நினைக்க மாட்டான் தலைவன். ஏனெனில் அவளது கரும்புச்சக்கை போன்ற வெண்மையான பல்லும் கரும்புச் சாறு போன்ற இனிமையான வாய் நீரும் அவனது எண்ணத்தில் இன்பத்தைக் கொடுத்துக்கொண்டே இருக்கும்.' இந்தத் தலைவியைக் கூடுவதில்தான் தலைவனின் இன்பம் இருக்கிறது. இந்த இன்பத்தினைத் துறந்து அவன் சேர்க்கின்ற பெரும்பொருள் அவன் இறக்கும்போது அவனுடன் வராது. ஏனெனில் செல்வம் நிறைந்தவன் என்று யாரையும் எமன் விட்டுவைப்பதில்லை. அறநெறிக்கு உட்படாமல் யாரையும் அழிக்கின்ற குணம் கொண்டவன் அந்த எமன் என்று இந்தப் பாடல் கூற்றுவனாகிய எமனை அறனில்லான் என்கிறது.

*வெளிமானைக் கொன்ற கூற்றுவன்*

கோடைகாலத்தில் அலைந்து வருபவர்க்கு நல்ல நிழல் போன்றவன் வெளிமான். அவனை வாழ்த்திப் பாடவந்த புலவன் ஒருவன் அவன் இறந்த நிலையில் கூற்றுவனின் அறனற்ற செயலைச் சாடுகிறான்.

*நீடு வாழ்க என்று யான் நெடுங்கடை குறுகிப்*
*பாடி நின்ற பசிநாட் கண்ணே*
*கோடைகாலத்துக் கொழுநிழல் ஆகிப்*
*பொய்த்தல் அறியா உரவோன் செவிமுதல்*
*வித்திய பனுவல் விளைந்தன்று. நன்று என*
*நச்சி இருந்த நசைய முதாக*
*அட்ட குழிசி அழல்பயந் தாஅங்கு*
*அளியர் தாமே ஆர்க என்னா*
*அறனில் கூற்றம் திறனின்று துணிய*
*ஊழின் உறுப்ப எருக்கிய மகளிர்*
*வாழைப் பூவின் வளை முறி சிதற*
*முதுவாய் ஒக்கல் பரிசிலர் இரங்க*
*கள்ளி போகிய களரிஅம் பறந்தலை*
*வெள்வேல் விடலை சென்று மாய்ந்தனனே*
*ஆங்க அதுநோய் இன்றாக ஓங்குவரைப்*
*புலிபார்த்து ஒற்றிய களிற்று இரைபிழைப்பின்*
*எலிபார்த்து ஒற்றா தாகும் மலிதிரைக்*
*கடல்மண்டு புனலின் எழுமெனச் சென்று*
*நனியுடைப் பரிசில் தருகம்*
*எழுமதி நெஞ்சே துணிபு முந்துறுத்தே!* [17]

பெருஞ்சித்திரனார் பாடிய இந்தப் பாடல் கையறு நிலைத் துறையில் அமைந்தது. வெளிமான் மன்னனைக் கொன்ற கூற்றுவனைச் சினந்து பாடுவதாகவும் இளவெளிமானின் ஈகையில்லாச் செயலை இகழ்ந்து பாடுவதாகவும் இது அமைந்துள்ளது.

பசியோடு இருப்பவன் உண்பதற்காக உணவு சமைக்கும்போது சமைத்த அந்தப் பானையிலிருந்து உணவு வராமல் நெருப்பு வந்தால் எவ்வாறு இருக்குமோ அதைப் போன்ற கொடிய துன்பத்தினைக் கூற்றுவன் வெளிமானைக் கொன்று நிகழ்த்தி விட்டான். இந்தக் கொடுமையைப் புரிந்த கூற்றுவன் அறனில்லாதவன் என்று பாடிய அவர் இளவெளிமானின் ஈகையற்ற செயலைப் பின்வருமாறு கூறியுள்ளார்.

புலியை அடித்துத் தின்பதற்காகக் குறிபார்த்துக் காத்திருந்த யானையிடமிருந்து அந்தப் புலி தப்பி விட்டால் எலியைப் பிடித்து அந்த யானை உண்ணாது. அது போல வெளிமானிடம் பரிசில் பெற வந்த எனக்கு இந்த எலி போன்ற இளவெளிமான் கொடுக்கும் பரிசில் தேவையில்லை என்று திரும்பிச் செல்கிறார். தமது இந்த வறிதே திரும்பும் நிலைக்குக் காரணம் ஆன கூற்றுவன் அறனில்லாதவன் என்று வெம்புகிறார் பெருஞ்சித்திரனார்.

*அறிவில்லாக் கூற்றம்*

அதியமான் பொகுட்டு எழினி போரில் இறந்து விட்டான். அவனது இறப்பினைக் கண்டு வருந்திய அரிசில் கிழார் கூற்றத்தைப் பார்த்து அறமில்லாக் கூற்றுவன் என்று பாடியதோடு நிறுத்தாமல் அறிவில்லாக் கூற்றம் என்றும் கூறியுள்ளார்.

எழினி ஒருவனை மட்டும் அந்தப் போர்க்களத்தில் கொல்லாமல் கூற்றுவன் விட்டிருந்தால் அவனுடைய பகைவர் பலரது உயிர்கள் இந்தக் கூற்றுவனுக்குக் கிடைத்திருக்கும். பல உயிர்கள் கிடைப்பதை விட்டு எழினி ஒருவனுடைய உயிரை எடுத்துவிட்ட கூற்றத்தினை அறிவில்லாக் கூற்றம் என்கிறார்.

*கன்று அமர் ஆயம் கானத்து அல்கவும்*
*வெங்கால் வம்பலர் வேண்டு புலத்து உறையவும்*
*களமலி குப்பை காப்பு இல் வைகவும்*
*விலங்கு பகை கடிந்த கலங்காச் செங்கோல்*
*வையகம் புகழ்ந்த வயங்குவினை ஒள்வாள்*
*பொய்யா எழினி பொருது களம்சேர*
*ஈன்றோள் நீத்த குழவி போலத்*
*தன்னமர் சுற்றம் தலைத்தலை இனைய*
*கடும்பசி கலக்கிய இடும்பை கூர் நெஞ்சமொடு*
*நோய் உழந்து வைகிய உலகினும் மிகநனி*
*நீ இழந்தனையே அறனில் கூற்றம்*
*வாழ்தலின் வரூஉம் வயல்வளன் அறியான்*
*வீழ்குடி உழவன் வித்து உண்டாஅங்கு*
*ஒருவன் ஆருயிர் உண்ணாய் ஆயின்*
*நேரார் பல்லுயிர் பருகி*
*ஆர்குவை மன்னோ அவன்அமர் அடுகளத்தே!*[18]

கன்றோடு புல் மேயச் சென்ற பசுக்கள் அச்சமின்றி மேய்ச்சல் இடத்திலேயே தங்கலாம். கடுந்தூரம் நடந்து சென்ற வழிப்போக்கர்கள் அவர்கள் நினைத்த இடத்தில் தங்கலாம். அறுவடை செய்த

தானியங்களைப் பாதுகாப்பின்றிக் களத்திலேயே வைக்கலாம். இத்தகைய செயல்கள் எல்லாம் அதியமான் பொகுட்டு எழினியின் நல்லாட்சியினால் நிகழக் கூடியவை. அத்தகைய எழினியின் உயிரைக் கூற்றுவனே நீ போர்க்களத்தில் எடுத்துக் கொண்டாய். அவனது சுற்றத்தார் அவனைப் பிரிந்து அழுது புலம்புவதைக் காட்டிலும் கூற்றுவனே நீ தான் மிகுந்த துன்பத்தினை அடைந்தாய். எப்படித் தெரியுமா ?

வயலில் விதைப்பதற்காக வைத்திருக்கும் வித்தினை வயலில் விதைத்தால் மிகுந்த வளமாகிய அறுவடையினைப் பெறலாம். ஆனால் அந்த வித்தினை உண்ணும் அளவிற்குத் தாழ்ந்த நிலைக்கு வந்த உழவன் அந்த வயல் வளத்தினை இழப்பது போல் வித்தாகிய எழினியின் உயிரைக் குடித்து விட்டாய். அவ்வாறு எழினியைக் கொல்லவில்லை என்றால் அவனது பகைவர் பலரது உயிரை நீ குடித்திருக்கலாமே என்று பாடியுள்ளார்.

இந்தப் பாடலில் வித்தை உண்பதைப் போல் எழினியைக் கொன்றதால் அறிவற்ற கூற்றம் என்று பாடிய அரிசில் கிழார், நல்லாட்சி நல்கிய அவனைக் கொன்றதால் அறனில்லா எமன் என்றும் பாடியுள்ளார்.

*என்போல் துன்பம் அடைக அறனில் கூற்றம்!*

தலைவன் ஒருவன் போருக்குப் போனவன் போர்க்களத்தில் இறந்து போனான். அவனது மனைவி போர்க்களத்துக்கு வந்து அழுது புலம்புவதை வன்பரணர் காட்சிப்படுத்தியுள்ளார்.

*ஐயோ எனின் யான் புலி அஞ்சுவலே*
*அணைத்தனன் கொளினே அகல்மார்பு எடுக்கவல்லேன்*
*என்போல் பெருவிதிர்ப்புறுக நின்னை*
*இன்னாது உற்ற அறனில் கூற்றே*
*நிரைவளை முன்கைப் பற்றி*
*வரைநிழல் சேர்கம் நடத்தசின் சிறிதே!* [19]

போர்க்களத்தில் இறந்து கிடக்கும் தலைவனைக் கண்டு ஐயோ என்று அலறி அழவும் முடியாமல் அந்தத் தலைவி விம்முகிறாள். அவ்வாறு அலறி அழ முடியாமல் இருப்பதற்குக் காரணம், அவன் இறந்து கிடக்கும் காடு புலி நடமாடும் காடு. இவளது அலறல் சத்தம் கேட்டு விட்டால் புலி பாய்ந்து வந்து தனது கணவனின் உடலை எடுத்துச் சென்று விடுமே என்று பயந்து அவள் அலறவில்லை. இறந்து கிடக்கும் அவனைத் தன்மார்போடு சேர்த்துத் தூக்கி எடுத்துச் செல்லலாம் என்றால் அவனது பரந்த மார்பினைத் தன்னால் தூக்கிச் செல்லவும் முடியாது என்று வருந்துகிறாள். அலறி அழவும் முடியாமல் எடுத்துச் செல்லவும் முடியாமல் நான் அடையும் இந்தக் கொடிய துன்பத்தினைப் போல் அறன் இல்லாத இந்தக் கூற்றமும் கொடிய துன்பத்தினை அடையட்டும் என்று சாபம் இடுகிறாள் அந்தத் தலைவி. அத்துடன் நில்லாமல் தனது கணவனை இந்தக் கொடுமையான இடத்திலிருந்து எவ்வாறு எடுத்துச் செல்வது என்று கலங்கிய அவளுக்கு ஓர் எண்ணம் தோன்றுகிறது. வளையல் அணிந்துள்ள எனது கையினைப் பற்றிக் கொண்டு மெதுவாக நடந்து வா, அந்த மலைநிழலுக்குப் போய்விடுவோம் என்று இரங்கத் தக்க நிலைக்கு ஒரு தலைவியைக் கொண்டு போய்விட்ட எமன் அறனில்லாதவன் என்பதில் ஐயமில்லை என்று வன்பரணர் தெரிவித்துள்ளார்.

தலைவன் ஒருவனும் தலைவி ஒருத்தியும் ஒருவருக்கொருவர் காதல் கொள்கின்றனர். அந்தக் காதல் ஊராருக்கும் அன்னைக்கும் தெரிந்துவிட்டது. மகளின் காதலை அறிந்த தாய் அவளை மீன்களைப் பாதுகாக்கும் பணிக்குக் கூட வெளியே அனுப்பாமல் வீட்டுக்குள் அடைத்துவிட்டாள். இந்த நிலையில் தலைவியைத் தேடிய தலைவன், தலைவியின் வீட்டுக்கு அருகில் வந்து நிற்கிறான். அவனைக் கண்ட தோழி தலைவியின் துன்ப நிலையினைத் தலைவனுக்கு உணர்த்த நினைக்கிறாள். அவ்வாறு உணர்த்தும் போது இந்த ஊரும் அறமில்லா ஊர், அன்னையும் அறமில்லாதவள் என்கிறாள்.

*உரவுக் கடல் உழந்த பெருவலைப் பரதவர்*
*மிகுமீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்*
*கல்லென் சேரிப் புல வன்புன்னை*
*விழவு நாறு விளங்கு இணர் அவிழ்ந்து உடன் கமழும்*
*அழுங்கல் ஊரோ அறமின்று, அதனால்*
*அறனில் அன்னை அருங்கடிப் படுத்த*
*பசலை ஆகி விளிவது கொல்லோ*
*புள்ளுற ஒசிந்த பூமயங்கு அள்ளல்*
*கழிச்சுரம் நிவக்கும் இருஞ்சிறை இவுளி*
*திரைதரு புணரியின் கழூஉம்*
*மலிதிரைச் சேர்ப்பனொடு அமைந்த நம் தொடர்பே!* [20]

மலர்ந்த புன்னை மலரின் மணமானது ஊரெங்கும் பரவுவது போலத் தலைவியின் காதலும் ஊரெங்கும் பரவிவிட்டது.

காதல் என்பது இயல்பாக எழக் கூடிய உணர்வு. இந்த உணர்வினைப் பெரிதாக்கி ஊர்மக்கள் அலராகப் பேசுகின்றனர். இப்படி இயல்பான உணர்வினை அலராக்கிய இந்த ஊர்மக்கள் அறமில்லாதவர்கள் என்று தோழி கூறுகிறாள். அந்த அலரின் காரணமாகவே தலைவி கொண்ட காதல் தாய்க்குத் தெரிந்தது. அந்தத் தாயாவது காதலின் இயல்புத் தன்மையினைப் புரிந்துகொண்டு இற்செறிக்காமல் இருந்திருக்கலாம். அவளும் இற்செறிப்பு என்னும் அறமற்ற செயலைச் செய்து அறமற்ற தாய் என்னும் பெயரினைப் பெற்றுவிட்டாள். தலைவனைப் பிரிந்ததால் தலைவியின் மேனியில் பசலை படர்ந்துள்ளது. தலைவனை அடைய முடியாத தலைவி பசலை படர்ந்து அழிய வேண்டியது தானோ என்று தோழி கூறுகிறாள். இந்தப் பாடலில் காதலுக்குத் தடை போடுவதனை அறமற்ற செயல் என்றும் அந்தத் தடைக்குக் காரணமான ஊரினை அறமற்ற ஊர் என்றும் அன்னையை அறமற்ற அன்னை என்றும் தோழி குறிப்பிட்டுள்ளாள்.

*கொடியவளான அறமற்ற அன்னை*

தலைவனும் தலைவியும் கொண்ட காதலை அறிந்த தாய் தனது மகளை இற் செறித்து விட்டாள். அவ்வாறு தலைவியின் காதலை அறிவதற்குத் தாய்க்குத் துணைபுரிந்தது தலைவியின் உடல் மாற்றம் ஆகும். தலைவியின் காதலன் எங்கே இருக்கிறான் என்று தாயும் உறவினரும் வினவுகின்றனர். அவ்வாறு அவர்கள் கேட்பதற்குக் காரணம் அவர்களது இரக்கமற்ற தன்மை. அதாவது தலைவனைத் துன்புறுத்தும் நோக்கத்துடன் அவர்கள் கேட்கிறார்கள். இந்தச் சூழலில் தலைவியை வரைந்து கொள்ளும் நோக்குடன் தலைவன் வரும் தேர் ஒலி புன்னை மரத்திடையே ஒலிக்கிறது. எனவே தலைவன் இன்று வராமல் வேறு ஒருநாள் வருவது நல்லது என்னும் மனநிலையில் தோழி கூறுவதாக அமைந்துள்ளது இந்தப் பாடல்.

*இருங்கழி பொருத ஈரவெண் மணல்*
*மாக்கொடி அடும்பின் மா இதழ் அலரி*
*கூந்தல் மகளிர் கோதைக் கூட்டும்*
*காம கொண்கன் நாம வெங்கேண்மை*
*ஐது ஏய்ந்தில்லா ஊங்கும் நம்மொடு*
*புணர்ந்தனன் போல உணரக் கூறித்*
*தான் யாங்கு என்னும் அறனில் அன்னை*
*யான் எழில் அறிதலும் உரியள் நீயும்நம்*
*பராரைப் புன்னைச் சேரி மெல்ல*
*நள்ளென் கங்குலும் வருமரோ*
*அம்ம வாழி அவர்தேர் மணிக்குரலே* [21]

என்னும் பாடலில் தலைவியின் காதலனைத் தாக்கும் நோக்கத்துடன் 'அவன் எங்கே?' என்று கேட்பதால் தாயை அறமற்ற தாய் என்கிறார் நம்பி குட்டுவன்.

*இற்செறித்ததால் அறமற்ற தாய்*

தலைவியின் காதலை அறிந்த தாய் அவளை இல்லிடைக் காவலில் வைத்துவிட்டாள். தலைவி இற்செறிக்கப்பட்டதைத் தலைவனுக்கு உணர்த்த விரும்பிய தோழி அதனைக் கிளியிடம் கூறுவது போல் கூறுகிறாள். அவ்வாறு கூறும்போது தாயை அறமற்ற தாய் என்கிறாள்.

முறஞ்செவி யானைத் தடக்கையின் தடைஇ
இறைஞ்சிய குரல பைந்தாள் செந்தினை

*வரையோன் வண்மை போலப் பலவுடன்*
*கிளையோடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்*
*குல்லை, குளவி, கூதளம், குவளை*
*இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்*
*சுற்று அமைவில்லன் செயலைத் தோன்றும்*
*நல்தார் மார்பன் காண்குறின் சிறிய*
*நற்கு அவற்கு அறிய உரைமின் பிற்றை*
*அணங்கும் அணங்கும் போலும் அணங்கி*
*வறும்புனம் காவல் விடாமை*
*அறிந்தனிர் அல்லிரோ அறனில் யாயே!* [22]

புனத்திடைக் காவலுக்குச் சென்ற தலைவி காதல் வயப்பட்டு விட்டாள் என்று அறிந்த தாய் அவளைப் புனக் காவலுக்கு அனுப்பாமல் தடை செய்ததுடன் வீட்டுக்குள்ளே அடைத்தும் விட்டாள். இந்தச் செயலைச் செய்த தாயை அறமற்ற தாய் என்கிறாள் தோழி.

*மகளே அறனில் தாய் எனல்*

தலைவன் ஒருவனும் தலைவியும் காதல் கொண்டனர். அந்தக் காதலைத் திருமணத்தில் நிறைவு செய்ய விரும்பிய தலைவன் தனது உறவினர்களை அனுப்பித் திருமணம் பற்றிப் பேசினான். அவனுக்குத் தனது மகளைத் திருமணம் செய்து கொடுக்க அந்தத் தாய் விரும்பவில்லை. வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்வது தனது காதலுக்கு இழுக்கு என்று கருதிய தலைவன் அந்தத் தலைவியுடன் உடல்போக்கில் சென்றுவிட்டான். அவ்வாறு உடன் போக்கில் சென்ற தலைவி தனது தாயை அறமற்ற தாய் என்கிறாள்.

*கடுங்கண் காளையொடு நெடுந்தேர் ஏறி*
*கோள்வல் வேங்கைய மலை பிறக்கு ஒழிய*
*வேறுபல் அருஞ்சுரம் இறந்தனள் அவள் எனக்*
*கூறுமின் வாழியோ ஆறுசெல் மாக்கள்*
*நல்தோள் நயந்து பாராட்டி*
*எற் கெடுத்து இருந்த அறனில் யாய்க்கே!* [23]

இந்தப் பாடலில் தலைவனோடு சுரத்தின் வழியாகச் சென்ற தலைவி தனது ஊர் நோக்கிச் சென்ற வழிப்போக்கர்களைப் பார்த்துப் பெருமிதத்துடனும் செய்தி அறிவித்தல் தன்மையுடனும் தனது உடன் போக்கினைக் கூறுகிறாள். அவ்வாறு கூறும்போது காதலித்தவனைத் திருமணம் செய்வது அறம். அவ்வாறு திருமணம் செய்யாமல் இருப்பது அறமற்ற தன்மை. இந்த அறமற்ற செயலுக்குத் தூண்டிய தாய் அறமற்றவள் என்கிறாள்.

*தாயின் அறனற்ற தன்மை*

தலைவியும் தலைவனும் கொண்டிருந்த காதல் தாய்க்குத் தெரிந்துவிட்டது. தலைவியைத் தாய் வீட்டிற்குள் அடைத்துவிட்டாள். தலைவியை எப்படியாவது சந்திக்கவேண்டும் என்று தலைவன் தவிக்கிறான். அந்தத் தவிப்பின் ஒரு பகுதியாகத் தலைவியைச் சந்திப்பதற்காக இரவில் அவளது வீட்டிற்கு வருகிறான். வீட்டின் கதவைத் திறப்பதற்குப் பல வகையிலும் முயன்று தோற்கிறான். அவனது முயற்சியின் சத்தத்தை வீட்டிற்குள் தலைவி கேட்டுக்கொண்டிருக்கிறாள். அவளுக்கும் தலைவனைச் சந்திக்க

வேண்டும் என்ற காதல் மிகுதியாகவே இருந்தது. என்றாலும் தலைவிக்கு அருகில் படுத்திருந்த தாயானவள் அவள் எழுந்து செல்ல இயலாதவாறு அணைத்தபடி படுத்திருக்கிறாள்.

*பல்லோர் துஞ்சும் நள்ளென் யாமத்து*
*உரவுக் களிறுபோல் வந்து இரவுக் கதவு முயறல்*
*கேளேம் அல்லேம் கேட்டனம் பெரும*
*ஓரி முருங்கப் பீலி சாய*
*நன்மயில் வலைப்பட்டாங்கு யாம்*
*உயங்குதொறும் முயங்கும் அறனில் யாயே!*[24]

என்னும் பாடலில் தலைவனைப் பார்க்க எழுந்து செல்ல முடியாமல் இறுகி அணைத்த தாயின் செயல் அறனற்ற செயல் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறு தாய் தடுத்தபோது செயல் பட முடியாத தலைவியின் நிலையினை ஓர் உவமை கொண்டு விளக்கியுள்ளார் கவிஞர். மயில் தனது தோகையோடு வலையில் மாட்டிக் கொண்டது போல் தலைவி தாயிடம் மாட்டிக்கொண்டாள் என்று உவமைப் படுத்தியுள்ளார்.

*அறமற்ற செயலுக்கான தண்டனை*

தலைவன் மேல் தலைவி கொண்ட காதல் ஊருக்குத் தெரிந்து விட்டது. ஊருக்குத் தெரிந்த காதல் தாய்க்கும் தெரிந்து விட்டது. தலைவனோடு தலைவியைச் சேரவிடாமல் அத்தாய் தடுத்து வைத்திருக்கிறாள். அந்தத் தாயின் தடையைத் தாண்டி, தலைவனை அடைவதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. அந்த வழி என்னவென்றால்

பெரிய மலைப் பிளவின் வழியாகத் தலைவனுடன் உடன்போக்குச் செல்வதுதான் என்று தோழி, தலைவியிடம் தெரிவிக்கிறாள்.

*ஊஉர் அலர்எழ சேரி கல்லென*
*ஆனாது அலைக்கும் அறனில் அன்னை*
*தானே இருக்க தன் மனை யானே*
*நெல்லி தின்ற முள் எயிறு தயங்க*
*உணல் ஆய்ந்திசினால் அவரொடு சேய்நாட்டு*
*விண்தொட நிவந்த விலங்கு மலைக் கவாஅன்*
*கரும்புநடு பாத்தியன்ன*
*பெருங்களிற்று அடி வழி நிலைஇய நீரே!* [25]

கரும்பு நட்ட பாத்தி போன்ற யானைத் தடம் பதிந்த பள்ளத்தில் உள்ள தண்ணீரைக் குடிக்கும் நிலை ஏற்பட்டாலும் பரவாயில்லை. ஊரார் தூற்றும் அலரினைக் கேட்டு உன்னை ஓயாமல் சுடுசொல்லால் வதைக்கும் தாய் உன்னை இழந்து அடையும் துன்பத்தை அடையுமாறு நீ தலைவனுடன் உயரமாகவும் அகலமாகவும் அமைந்துள்ள மலைப்பிளவு வழியாக உடன்போக்கில் செல் என்று கூறுகிறாள் தோழி. இங்கே இயல்பாகத் தோன்றும் காதலுக்கு இயல்புக்கு மீறிய தடை விதிக்கும் தாயின் செயலை அறமற்ற செயல் என்று உரைக்கிறாள் தோழி. அந்த அறமற்ற செயலுக்கு எது தண்டனை என்றால் பெற்ற மகளைப் பிரிந்து வாடுவதுதான் தண்டனை என்றும் உணர்த்துகிறாள்.

*தினை போனாலும் தலைவி போகக் கூடாது*

தலைவி தலைவனுடன் மலையின்கண் உள்ள அருவியில் நீராடி மகிழ்ந்த செய்தியினைத் தாய் அறிந்துவிட்டாள். எனவே விளைந்த

தினைக் கதிர்களைக் கிளிகள் கொய்து கொண்டு செல்வது தெரிந்த பிறகும் அந்தத் தினைக்கதிர்களைக் காப்பதற்காக நம்மை அனுப்ப அவள் விரும்பவில்லை. எனவே இனிமேல் தலைவனைக் கண்டு மகிழ்ந்திருப்பது இயலாது என்பதைத் தலைவிக்குக் கூறுவது போல் தலைவனுக்குக் கேட்குமாறு கூறுகிறாள் தோழி.

*சிலம்பில் போகிய செம்முக வாழை*
*அலங்கல் அம்தோடு அசைவளி உறுதொறும்*
*பள்ளி யானை பரூஉப்புறம் தைவரும்*
*நல்வரை நாடனொடு அருவி ஆடியும்*
*பல்லிதழ் நீலம் படுசுனைக் குற்றும்*
*நறுவீ வேங்கை இனவண்டு ஆர்க்கும்*
*வெறிகமழ் சோலை நயந்து விளையாடலும்*
*அரிய போலும் காதலம் தோழி*
*இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத*
*கரும்பு எனக் கவினிய பெருங்குரல் ஏனல்*
*கிளிபட விளைந்தமை அறிந்தும் செல்க என*
*நம்அவண் விடுநள் போலாள் கைம்மிகச்*
*சில்சுணங்கு அணிந்த செறிந்து வீங்கு இளமுலை*
*மெல்லியல் ஒலிவரும் கதுப்பொடு*
*பல்கால் நோக்கும் அறனில் யாயே!*[26]

தலைவியின் மார்பு வனப்புடன் விளங்குகிறது. அவளது காதல் நோயினை அறிந்தவளாகத் தாய் விளங்குகிறாள். இருந்தும் தினைபுனக் காவலுக்கு அவளை அனுப்பாமல் இருக்கிறாள். அனுப்பினால் தலைவனோடு கொண்ட காதல் தொடரும் என்று

நினைத்து அனுப்பாமல் இருக்கிறாள். தலைவியின் காதல் துன்பத்தினைப் போக்காமல் அத்துன்பம் மிகுமாறு செயல்படும் தாய் அறனில்லாதவள் என்கிறாள் தோழி.

*மகளின் பாதுகாப்புக் கருதும் அறனில் தாய்*

கடற்கரையில் காற்று மணற்குன்றுகளை ஏற்படுத்தும். அந்த மணற்குன்றில் தம் தோழிமாருடன் விளையாடும் தலைவியை அவ்வாறு விளையாட விடாமல் பாதுகாப்புக் கருதி வீட்டில் அடைப்பாள். அவ்வளவு பாதுகாப்பாக வளர்த்து வருகிறாள். அத்தகைய தலைவியின் வளையல் அணிந்த கை வருந்தும்படியாக நீ அமுக்கிப் பிடிக்கிறாய். இந்தச் செயலை அவளது தாய் கண்டால் அவளை வீட்டை விட்டு வெளியே வரவிடாமல் தடுத்துவிடுவாள்.

மகளின் பாதுகாப்பு ஒன்றையே கருத்தில் கொண்டு அவளது காதல் துன்பத்தைக் கருத்தில் கொள்ளாமல் இருப்பதால் அந்தத் தாயை அறமில்லாத தாய் என்கிறாள் தோழி.

*பெருங்கடற் பரப்பில் சேயிறா நடுங்க*
*கொடுந்தொழில்முகந்த செங்கோல் அவ்வலை*
*நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு*
*உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு*
*அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து*
*கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்*
*திண்தேர்ப் பொறையன் தொண்டி அன்ன எம்*
*ஒண் தொடி ஞெமுக்காதீமோ தெய்ய*
*ஊதை ஈட்டிய உயர் மணல் அடைகரை*

*கோதை ஆயமொடு வண்டல் தைஇ*
*ஓரை ஆடினும் உயங்கும் நின்னொளி எனக்*
*கொன்னும் சிவப்போள் காணின்   வென்வேல்*
*கொற்றச் சோழர் குடந்தை வைத்த*
*நாடுதரு நிதியினும் செறிய*
*அருங்கடிப் படுக்குவள் அறனில் யாயே![27]*

என்னும் பாடல் வாயிலாகத் தாயின் அறமற்ற செயல் புலப்படுகிறது.

*பண்பும் அறமும் இல்லாத தாய்*

வேந்தன் ஒருவன் மறக்குடிச் சிற்றரசன் ஒருவனின் மகளை மணந்துகொள்ள விரும்பிப் பெண் கேட்கிறான். அதற்கு அந்த மறக்குடித் தலைவன் ஒப்புக் கொள்ளவில்லை. எனவே கோபம் கொண்ட அந்த வேந்தன் அந்தச் சிற்றரசோடு போர் தொடுக்க ஏற்பாடுகளைச் செய்கிறான். வேந்தன் போர் தொடுத்து வந்தால் இந்தச் சிற்றரசனின் ஊர் அழிவது உறுதி. அங்கு வாழும் மக்கள் அல்லல் அடைவது உறுதி. இந்த அவலத்தை உண்டாக்க இருக்கும் போருக்குக் காரணம் எது என்றால் தலைவியின் அழகு. தலைவியின் அழகுக்குக் காரணமாக இருப்பவள் அவளது தாய். எனவே ஒரு நாட்டின் அழிவுக்கு அடிப்படையாய் விளங்கும் தலைவியின் அழகுக்குப் பொறுப்பான தாய் பண்பும் அறமும் அற்றவள் என்று பரணர் தெரிவிக்கிறார்.

*வேட்ட வேந்தனும் வெஞ்சினத்தினனே*
*கடவன கழிப்பு இவள் தந்தையும் செய்யான்*
*ஒளிறு முகத்து ஏந்திய வீங்குதொடி மருப்பின்*

*களிறும் கடிமரம் சேரா, சேர்ந்த*
*ஒளிறு வேல் மறவரும் வாய் மூழ்த்தனரே*
*இயவரும் அறியாப் பல்லியம் கறங்க*
*அன்னோ பெரும்பேதுற்றன்று இவ்வருங்கடி மூதூர்*
*அறனிலள் மன்ற தானே விறல் மலை*
*வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்*
*முகைவனப்பு ஏந்திய முற்றா இளமுலைத்*
*தகைவளர்த்து எடுத்த நகையொடு*
*பகைவளர்த்திருந்த இப்பண்பில் தாயே!* [28]

தலைவியின் அழகு மேம்படாதவாறு வளர்த்திருந்தால் வேந்தன் பெண்கேட்டு வந்திருக்க மாட்டான். அவ்வாறு செய்யாமல் அழகு வெளிப்படும்படியாக வளர்த்ததால் தாய் அறமும் பண்பும் அற்றவள் என்று உரைக்கப்பட்டுள்ளாள்.

*இயல் தொகுப்பு*

பண்டைத் தமிழர்களிடம் அறனில்லாத தன்மை என்று எதனையும் காண இயலாது. இந்த உலகில் இறப்பு என்பது இயல்பாக நிகழும் ஒரு நிகழ்வு. அந்த இறப்பிற்குக் காரணமானவன் கூற்றுவன் என்பதால் அந்தக் கூற்றுவனை அறம் இல்லாதவன் என்றும் அறிவு இல்லாதவன் என்றும் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

களவு ஒழுக்கத்தில் ஒழுகும் தலைவியை இற்செறிக்கும் தாயின் தன்மையையும் அறனற்ற தன்மை உடையது என்று சங்க இலக்கியம் தெரிவிக்கிறது. பொய்ச்சத்தியம் செய்வோருக்கு அக்காலத்தில்

தண்டனை வழங்கப்பட்டுள்ளது. அதனையும் அறனற்ற செயல் என்று குறிக்கின்றனர்.

வண்டு அறமற்றது. அந்த வண்டினைப் போல் தலைவியை ஏங்கச் செய்யும் தலைவனும் அறனற்றவன் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அறனில் வேந்தர்கள் யாரும் சங்க இலக்கியத்தில் காட்டப்படவில்லை எனினும் உவமையால் உணரும் பொருட்டு அறனில் வேந்தன் என்னும் குறிப்புக் காணப்படுகிறது.

# சான்றெண் விளக்கம்

1. திருக்குறள் : பா.35
2. மேலது : பா.34
3. புறநானூறு :பா.34
4. திருக்குறள் : பா.101
5. அகநானூறு: பா.256
6. நற்றிணை : பா.275
7. ஐங்குறுநூறு : பா.229
8. மேலது : பா.118
9. நற்றிணை : பா.277
10. கலித்தொகை : பா.74
11. மேலது : பா.144
12. அகநானூறு: பா.207
13. மேலது : பா.219
14. மேலது : பா.294
15. மேலது : பா.109
16. குறுந்தொகை : பா.267
17. புறநானூறு : பா.237
18. மேலது : பா.230
19. மேலது : பா.255
20. நற்றிணை : பா.63
21. மேலது : பா.145
22. மேலது : பா.376
23. ஐங்குறுநூறு : பா.385
24. குறுந்தொகை : பா.244

25. மேலது : பா.262

26. அகநானூறு: பா.302

27. மேலது : பா.60

28. புறநானூறு : பா.336

# சங்க இலக்கியத்தில் பொதுமை அறம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழன் இயற்கை வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தான். அப்போது அவனது வாழ்க்கை முறையில் கட்டுப்பாடுகள் என்று எதுவும் திணிக்கப்பட்டிருக்கவில்லை. இயல்பாகவே கட்டுப்பாடான வாழ்வாக அந்த வாழ்க்கை அமைந்திருந்தது. அவ்வாறு அவன் வாழ்ந்த வாழ்க்கை முறையில் சில செயல்கள் காலப்போக்கில் பொருந்தாத இயல்புடையவன ஆயின. பரத்தையர் என்னும் பிற பெண் தொடர்பு ஆண்களுக்கு இருந்துள்ளது. மதுவுண்டு மகிழ்ந்திருக்கிறார்கள். இந்த இரு செயல்பாடுகளாலும் அவர்களுக்கு இன்னல்கள் நேர்ந்திருப்பதனை அறிந்த அறிஞர்கள் அவற்றை ஒழிப்பதற்கான அறவுரைகளை வழங்கியுள்ளார்கள்.

அறச் செயல்களில் தனிமனித மேம்பாட்டுக்குத் துணைபுரிபவை, பொதுவாக அனைவருக்கும் துணைபுரிபவை எனப் பிரிக்கலாம். பொதுவாக அனைவருக்கும் பயன்படும் வகையில் கூறப்பட்டுள்ளவற்றைப் பொதுமை அறம் எனலாம். அந்தப் பொதுமை அறம் சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள தன்மையினை இந்த இயல் விளக்குகிறது.

ஆயுதம் இல்லாத ஒருவனை ஆயுதம் வைத்திருக்கும் ஒருவன் தாக்கி அழிப்பது எளிது. அது எளிதுதான் என்றாலும் அத்தகைய செயலை நேர்மையான செயலாக நாம் ஏற்றுக் கொள்வது இல்லை. மேலும் ஒருவனைப் பலர் சேர்ந்து தாக்குவதும் நேர்மையான போர் முறை என்று நாம் கருதுவது இல்லை. அந்த வகையில் போர்ப் பாசறைக்குப் பெண்களை அழைத்துச் செல்லும் மரபு தமிழரிடம் இல்லை. எனவே பெண்களைப் போரில் கொல்லுதல் மரபு மீறிய செயலாகக் கருதப்படுகிறது. மேலும் போருக்குத் தகுதியில்லாத நோயாளிகள் முதலானவர்களைக் கொல்வதும் போர் அறமற்ற செயல் எனக் கருதப்படுகிறது. இவ்வாறு போர் அறத்தினைப் பேணும் பாடல் ஒன்று புறநானூற்றில் காணப்படுகிறது.

*ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅதீரும்*
*எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின் என*
*அறத்து ஆறு நுவலும் பூட்கை மறத்தின்*
*கொல்களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்*
*எம்கோ வாழிய குடுமி தம் கோச்*
*செந்நீர் பசும்பொன் வயிரியர்க்கு ஈத்த*
*முந்நீர் விழவின் நெடியோன்*
*நல்நீர் பஃறுளி மணலினும் பலவே!* [1]

இந்தப் பாடலில் ஒரு போரின் அறிவிப்பும் அந்தப் போர் அறிவிப்பின் மையமாகப் போருக்கு வரத் தகுதி இல்லாதவர்கள் பாதுகாப்பான இடத்திற்குச் சென்று விடுங்கள் என்னும் உணர்த்தலும் இருப்பதை அறியமுடிகிறது. இவ்வாறு அறிவிப்பு வழங்கியபின் போருக்குப் போகும் ஆற்றல் பெற்றவன் பாண்டியன் பெருவழுதி. அவன் பசுக்களைக் கொல்வதையும் பார்ப்பனர்களைக் கொல்வதையும் பெண்டிரைக் கொல்வதையும் நோயுற்றவர்களைக் கொல்வதையும் ஆண் குழந்தைகளைப் பெறாதவர்களைக் கொல்வதையும் அறமற்ற செயலாகக் கருதினான். எனவே அவர்களை எல்லாம் போர்க்களத்தை விட்டு நீங்கிச் செல்லுமாறு அறிவிக்கிறான். இந்தப் பாடலில் பண்டைத் தமிழ் மன்னர்கள் பாதுகாத்த போர் அறம் விளக்கம் பெறுவதனைக் காணமுடிகிறது.

*ஈரமும் அறிவும் கொண்டவன்*

மன்னர்கள் பெரும்பாலும் தங்கள் நாட்டினை வளப்படுத்திச் செழிக்கச் செய்யும் எண்ணம் கொண்டவர்களாகவும் பிறநாட்டினை அழிக்கும் எண்ணம் கொண்டவர்களாகவும் விளங்குவர். பட்டினப் பாலையில் கரிகால் பெருவளத்தானின் பண்பினை இவ்வாறு விளக்குகிறார் முடத்தாமக் கண்ணியார். இங்கே சேரமான் இரும்பொறையின் இரக்கப் பண்பு விளக்கப்பட்டுள்ளது.

*இரு முந்நீர்க் குட்டமும்*
*வியன் ஞாலத்து அகலமும்*
*வளி வழங்கும் திசையும்*
*வறிது நிலைஇய காயமும் என்றாங்கு*
*அவை அளந்து அறியினும் அளத்தற்கு அரியை*

*அறிவும் ஈரமும் பெருங்கண்ணோட்டமும்*
*சோறு படுக்கும் தீயொடு*
*செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது*
*பிறிது தெறல் அறியா நின் நிழல் வாழ்வோரே*
*திருவில் அல்லது கொலைவில் அறியா*
*நாஞ்சில் அல்லது படையும் அறியா*
*திறனறி வயவரொடு தெவ்வர் தேயஅப்*
*பிறமண் உண்ணும் செம்மல் நின்னாட்டு*
*வயவுறு மகளிர் வேட்டு உணவின் அல்லது*
*பகைவர் உண்ணா அரு மண்ணினையே*
*அம்பு துஞ்சும் கடி அரணால்*
*அறம் துஞ்சும் செங்கோலையே*
*புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்*
*விதுப்புறவு அறியா ஏமக் காப்பினை*
*அனையை ஆகன் மாறே*
*மன்னுயிர் எல்லாம் நின் அஞ்சுமே!* [2]

கடலின் ஆழத்தினை அறிதல் எளிதன்று. அந்தக் கடலின் ஆழத்தினை அறிய நினைத்தாலும் அறிந்து விடலாம். இந்த உலகத்தின் அகலத்தினை அளந்து அறிய நினைப்பது எளிதன்று. அந்த உலகத்தினை அளந்திட நினைத்தாலும் அளந்திடலாம். காற்று வீசும் திசையினை அளந்து அறிவது எளிதன்று. அதனை அளந்து அறிய நினைத்தாலும் அளந்து விடலாம். ஆகாயத்தின் உயரத்தினை அளந்து அறிதல் எளிதன்று.அந்த ஆகாயத்தினை அளந்து அறிய நினைத்தாலும் இயலும். ஆனால் இரும்பொறையின் இரக்கத்தினையும் வீரத்தினையும் அறிந்தின் இயலாது. ஏனெனில் அவனது நாட்டில் சூரியனின் வெப்பத்தைத் தவிர வேறு வெம்மை எதுவும் கிடையாது. வானவில்லை

அறிந்த அவன் நாட்டு மக்கள் கொலைத் தொழிலுக்குப் பயன்படுத்தும் வில்லினை அறிந்ததில்லை. படைக்கலன் எதனையும் அறியாத அவன் நாட்டு மக்கள் உழுவதற்குப் பயன்படுத்தப்படும் படையாகிய கலப்பையை மட்டுமே அறிந்தவர்கள். அந்த அளவுக்கு இரும்பொறையின் ஆட்சியின் கீழ் வாழ்ந்த மக்கள் நிம்மதியாக வாழ்ந்தனர். அதற்குக் காரணம் இரும்பொறையின் ஈரமும் வீரமும் ஆகும். அவன் தன்நாட்டு மக்களைக் காக்கும் நோக்கில் செங்கோலாட்சியினை அறத்தின் வழியில் புரிந்ததால் பகைமை ஒழிந்தது. அவன் நாட்டில் உள்ள மண்ணினை அவனது நாட்டில் உள்ள கர்ப்பிணிப் பெண்கள் மட்டும் எடுத்து உண்ணமுடியுமே தவிர பகை நாட்டார் கைப்பற்ற இயலாது. அத்தகைய வீரம் கொண்டு விளங்கியவன் அவன் என்று குறுங்கோழியூர் கிழார் பாடியுள்ளார்.

இந்தப் பாடலில் மன்னன் ஒருவன் எவ்வாறு தன்நாட்டு மக்களைக் காக்க வேண்டும் என்னும் பொதுமை அறம் உணர்த்தப்பட்டுள்ளது.

*அறத்தின் பின்னவை பொருளும் இன்பமும்*

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்றாலும் பொருள் வாயிலாகத் தான் இன்பத்தைத் துய்க்க முடியும் என்றாலும் இவை இரண்டுமே அறத்திற்குப் பின்தான் என்று கோவூர் கிழார் பாடியுள்ளார்.

*சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்*
*அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல*
*இருகுடை பின்பட ஓங்கிய ஒரு குடை*
*உருகெழு மதியின் நிவந்து சேண் விளங்க*

*நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்*
*பாசறை அல்லது நீ ஒல்லாயே*
*நுதிமுகம் மழுங்க மண்டி ஒன்னார்*
*கடிமதில் பாயும் நின் களிறு அடங்கலவே*
*போர்எனின் புகலும் புனைகழல் மறவர்*
*காடு இடைக் கிடந்த நாடு நனி சேஎய*
*செல்வேம் அல்லேம் என்னார் கல்லென்*
*விழவுடை ஆங்கண் வேற்றுப்புலத்து இறுத்து*
*குணகடல் பின்னது ஆக குட கடல்*
*வெண்தலைப் புணரி நின்மாண் குழம்பு அலைப்ப*
*வலமுறை வருதலும் உண்டு என்று அலமந்து*
*நெஞ்சு நடுங்கு அவலம் பாய*
*துஞ்சாக் கண்ண வடபுலத்து அரசே!* [3]

பொருளும் இன்பமும் அறத்தின் பின்னே நிற்பது போல உனது வெண்கொற்றக் குடையின் கீழ் சேரனின் குடையும் பாண்டியனின் குடையும் தாழ்ந்து நிற்கின்றன. அந்த அளவிற்குப் போர் வெற்றி கொண்டவன் என்று நலங்கிள்ளியைப் பாடியுள்ளார். மேலும் அவனது போர் வெறி தணியாத தன்மை போலவே அவனது யானைப் படையினது போர் வெறியும் தணியாமல் உள்ளது. அவனது வீரர்களும் எவ்வளவு தொலைவில் உள்ள நாட்டினையும் சென்று போர் செய்து வெற்றி காணும் போர் வெறியுடன் விளங்குகின்றனர். நீயும் எப்போதும் போர்ப் பாசறையில் தங்கிப் போர் புரிவதையே விரும்புகிறாய். எனவே நலங்கிள்ளி வட நாட்டிற்குப் படையெடுத்துச் செல்வான் என்று அஞ்சி வடநாட்டு மன்னர்கள் தூங்காமல் துயரத்தில் ஆழ்ந்துள்ளார்கள் என்று நலங்கிள்ளியின் போர் வெற்றியை கோவூர் கிழார் பாடியுள்ளார். இந்த பாடலில் போர் வெறி பாடப்பட்டுள்ளது. என்றாலும் அறமே தலையாயது என்பதும் உணர்த்தப்பட்டுள்ளது. இந்தப் பாடல் முழுவதும் போர் வெறி

காட்டப்பட்டிருந்தாலும் மன்னனானவன் தனது போர்வெறியைத் தணித்து அறநெறிப்படி ஆட்சி செய்தலே சிறந்தது என்பதும் உணர்த்தப்பட்டுள்ளது எனலாம்.

*பசித்துன்பம் போக்குமின்*

இந்த உலகில் மிகவும் கொடிய நோய் பசித்துன்பம். பசி வந்திடப் பத்தும் பறந்து போம் என்பது முதுமொழி. எனவேதான்

*மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே*[4]

என்று சீத்தலை சாத்தனார் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பசிப்பிணியின் கொடுமையைப் பெருஞ்சித்திரனார் அனுபவித்துள்ளார். எனவே அந்தத் துன்பத்தினைப் பாடிக்காட்டுகிறார். புலவர் பொருள் வேண்டிக் குமண வள்ளலிடம் பாடினாலும் மக்கள் பசித்துன்பம் இல்லாமல் காப்பதே மன்னனின் ஆட்சி அறம் என்று உணர்த்தியுள்ளார்.

*வாழும் நாளோடு யாண்டுபல உண்மையின்*
*தீர்தல் செல்லாது என்னுயிர் எனப்பல புலந்து*
*கோல் காலாகக் குறும்பல ஒதுங்கி*
*நூல் விரித்தன்ன கதுப்பினள் கண்துயின்று*
*முன்றில் போகா முதிர்வினள் யாயும்*
*பசந்த மேனியோடு படர் அட வருந்தி*
*மருங்கில் கொண்ட பல்குறுமாக்கள்*
*பிசைந்து தின வாடிய முலையள் பெரிது அழிந்து*
*குப்பைக் கீரை கொய்கண் அகைத்த*

*முற்றா இளந்தளிர் கொய்து கொண்டு உப்பின்று*
*நீர் உலையாக ஏற்றி மோர்இன்று*
*அவிழ் பதம் மறந்து பாசடகு மிசைந்து*
*மாசொடு குறைந்த உடுக்கையள் அறம் பழியாத்*
*துவ்வாளாகிய என் வெய்யோளும்*
*என்றாங்கு இருவர் நெஞ்சமும் உவப்ப கானவ*
*கரிப்புனம் மயக்கிய அகன்கண் கொல்லை*
*ஐவனம் வித்தி மையுறக் கவினி*
*ஈனல் செல்லா ஏனற்கு இழுமனக்*
*கருவி வானம் தலைஇ யாங்கும்*
*ஈத்த நின் புகழ் ஏத்தி தொக்க என்*
*பசி தினத் திரங்கிய ஒக்கலும் உவப்ப*
*உயர்ந்து ஏந்து மருப்பின் கொல்களிறு பெறினும்*
*தவிர்ந்து விடுபரிசில் கொள்ளலன் உவந்து நீ*
*இன்புற விடுதி ஆயின் சிறிது*
*குன்றியும் கொள்வல் கூர் வேல் குமண*
*அதற்பட அருளல் வேண்டுவல் விறல்புகழ்*
*வசையில் விழுத்திணைப் பிறந்த*
*இசைமேந் தோன்றல் நிற் பாடிய யானே!*[5]

முதுமை நிலையில் உள்ள பெண் ஒருத்தி கோலினைக் கையில் ஏந்தி நடக்கிறாள். அவள் பசித்துன்பத்தின் காரணமாகத் தன் வாழ்நாள் முடியவில்லையே என்று வருந்தும் அளவிற்கு வறுமை. பல குழந்தைகளைப் பெற்ற தாய் ஒருத்தி தனது குழந்தைக்குப் பால் ஊட்ட நினைத்தாலும் பால் சுரக்க இயலாத அளவுக்கு உடலில் சத்துக் குறைவு. இந்தச் சத்துக் குறைவுக்குக் காரணம் கொடிய வறுமை. குப்பையில் தானாக வளர்ந்து நிற்கும் கீரையை வெறுந்தண்ணீரில்

வேகவைத்து உப்புக் கூடப் போடாமல் தின்னும் அளவிற்கான வறுமை. சோற்றைக் கண்டே பல நாளான வறுமை. அழுக்கடைந்த ஆடையினை அணிந்திருக்கிறாள். இந்த வறுமை நிலை புலவர் பெருஞ்சித்திரனார் அனுபவிக்கும் கொடுமை. ஒரு புலவருக்கே இத்தகைய வறுமை என்றால் சாதாரணக் குடிமக்கள் எவ்வளவு வறுமைத் துன்பத்தில் வாடியிருப்பார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. மேலே காட்டிய இரு பெண்களில் முதிய பெண் பெருஞ்சித்திரனாரின் தாய். இன்னொரு பெண் அவரது மனைவி. அவர்கள் இருவரும் தங்கள் வறுமைக்குக் காரணம் அறக்கடவுளின் அறமற்ற செயல் என்று வருந்துகிறார்கள். அவர்களது வறுமையைப் போக்க விரும்பிய புலவர் பெருஞ்சித்திரனார் வள்ளல் குமணனைத் தேடி வருகிறார். அந்த வறுமைச் சூழலிலும் அந்தப் புலவரின் செம்மாந்த உள்ளத்தினைக் காணமுடிகிறது.

நீ யானையை எனக்குப் பரிசாகத் தந்தாலும் அதனை மகிழ்ச்சி இல்லாமல் தந்தால் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். எனது குடும்பத்தின் வறுமை தீர்வதற்காகக் குன்றிமணி அளவு கொடுப்பதாக இருந்தாலும் அதனை மகிழ்ச்சியோடு கொடுக்கவேண்டும் என்று வேண்டுகிறார். இத்தகைய வறுமைக் கொடுமை இருக்கின்ற நாட்டில் வள்ளல்கள் இல்லை என்றால் மக்களின் வாழ்நிலை மிகவும் கவலைக்கிடமாகிவிடும். இந்தக் கொடுமையினைப் போக்குவதே பேரறம் என்பது புலனாகும்.

இதனைத் திருவள்ளுவர் தமது திருக்குறளில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

*வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்*
*குறியெதிர்ப்பை நீர துடைத்து* [6]

என்னும் குறட்பாவில் ஈகை அறம் விளக்கப்பட்டுள்ளது. மேலும் பசித்துன்பத்தினைப் போக்குவதற்காக ஒருவன் வழங்குகின்ற செல்வமானது எதிர்காலத்திற்கு அவன் சேமித்து வைக்கும் செல்வத்தினைப் போன்றது என்றும் அவர் விளக்கியுள்ளார்.

*அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்*
*பெற்றான் பொருள் வைப்புழி*[7]

என்று குறிப்பிட்டுள்ளார். மேலே குறிப்பிட்ட சங்க இலக்கியப் பாடலும் குறட்பாக்களும் அக்காலத்தில் வறுமையும் அதனால் எழும் பசித்துன்பமும் இருந்தன எனத் தெரிவிக்கின்றன.

*பலருக்கு உதவும் அறம்*

வாழ்க்கையில் நீங்காது நிலைத்து நிற்பவற்றுள் முதன்மையானது புகழ். அந்தப் புகழுக்கு அடிப்படையானது அறம். அறச்செயல்களுள் முதன்மையானது இல்லாதவர்களுக்கு ஈதல் ஆகும். ஆதனுங்கன் என்பான் ஒவ்வொரு நாளும் பலருக்கு உதவும் அறத்தினைச் செய்து வருவதால் அவன் புகழின் மேன்மையை அடைந்தவன் என்று பாடியுள்ளார் கள்ளில் ஆத்திரையனார் என்னும் புலவர்.

*எந்தை வாழி ஆதனுங்க, என்*
*நெஞ்சம் திறப்போர் நிற்காண்குவரே*
*நின் யான் மறப்பின் மறக்கும் காலை*
*என் உயிர் யாக்கையின் பிரியும் பொழுதும்*
*என் யான் மறப்பின் மறக்குவென்–வென்வேல்*
*விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்*

*திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த*
*உலக இடைகழி அறைவாய் நிலைஇய*
*மலர்வாய் மண்டிலத்து அன்ன நாளும்*
*பலர் புரவு எதிர்ந்த அறத்துறை நின்னே!*[6]

மோரியர் என்னும் குடியினர் இந்த நிலம் முழுவதையும் ஆண்டனர். அவர்களின் ஆட்சிச் சக்கரத்திற்கு அப்பாற் பட்ட வெள்ளிமலைக்கு அப்பால் ஆதித்த மண்டலம் உள்ளது. அது இரவு பகல் பாராமல் எல்லோரையும் பாதுகாக்கிறது. அந்த ஆதித்த மண்டலத்தைப் போல் ஆதனுங்கனும் இரவு பகல் பாராமல் எல்லோரையும் பாதுகாக்கிறான். எனவே என்னால் அந்த ஆதுங்கனை மறக்க முடியாது. அப்படி நான் அவனை மறந்துவிட்டேன் என்றால் நான் இறந்துவிட்டேன் என்று பொருள் என்று கூறிய அவர் ஆதுங்கன் மேல் கொண்ட அன்பினைக் காட்டுவதற்கு வேறொன்றையும் குறிப்பிட்டுள்ளார். என் நெஞ்சத்தைப் பிளந்து பார்த்தீர்கள் என்றால் அதற்குள்ளும் ஆதனுங்கனைக் காணமுடியும் என்று ஆழமான அன்பினைக் காட்டியுள்ள அவர் அவனது ஈகைச் செயலைப் பாராட்டிப் பாடியுள்ளார்.

*எல்லோரையும் காக்கும் அறம்*

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறந்தான். அவனுடன் பிசிராந்தையாரும் வடக்கிருந்து உயிர் துறந்தார். அந்தக் காட்சியைக் கண்டவர்கள் நாடுகடந்து அவர்கள் இருவரும் கொண்டிருந்த நட்பின் சிறப்பினை வியந்தனர். அந்தக் கோப்பெருஞ்சோழனுடன் வடக்கிருந்து உயிர் விடுவதற்குப் பொத்தியார் என்னும் புலவரும் விரும்பினார். ஆனால் சோழனோ பொத்தியாரைப் பார்த்து உமக்கு இன்னும் மைந்தன்

பிறக்கவில்லை, எனவே மைந்தன் பிறந்த பின்னர் வந்து எம்முடன் கலந்துகொள்ளும் என்று கூறி அனுப்பி வைத்து விட்டான். இச்செயல் பண்டைத் தமிழரின் வழக்கம் ஆகும். அந்த வழக்கப் படியே புதர்வரைப் பெறாத பொத்தியாரை அவன் அனுப்பிவைத்து விட்டான். அங்கிருந்து சென்ற பொத்தியார் ஒரு மகனைப் பெற்ற பின்னர் வருகிறார். அப்போது கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த இடத்தில் நடுகல் விளங்குகிறது. அந்த நடுகல்லைப் பார்த்து அவர் பாடுகிறார்.

*பாடுநர்க்கு ஈத்த பல் புகழன்னே*
*ஆடுநர்க்கு ஈத்த பேர் அன்பினனே*
*அறவோர் புகழ்ந்த ஆய் கோலன்னே*
*திறவோர் புகழ்ந்த திண் அன்பினனே*
*மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து*
*துகள் அறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்*
*அனையன் என்னாது அத்தக்கோனை*
*நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று*
*பைதல் ஒக்கல் தழீஇ அதனை*
*வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்*
*நனந்தலை உலகம் அரந்தை தூங்க*
*கெடுஇல் நல்லிசை ஆடி*
*நடுகல் ஆயினன் புரவலன் எனவே* [9]

கோப்பெருஞ்சோழனைக் கண்டு பாடுகின்ற பாணர்களுக்குப் பல்வேறு பொருள்களை அவன் வாரி வழங்குவான். ஆடுகின்ற கூத்தர்களுக்கும் அவன் அன்புடன் வழங்கி மகிழ்வான். அறவழியில் நடக்கின்றவர்கள் போற்றிப் புகழும் வண்ணம் செங்கோலாட்சி நடத்தியவன். அந்த அறவோருக்கும் வழங்கும் அன்புடையவன்.

வலிமை உடையவர்களின் வலிமைக்கு ஏற்ப உறுதியான அன்பு கொண்டவன். மகளிரிடம் மென்மையாகவும் வீரர்களிடம் வீரமாகவும் நடந்துகொள்ளும் பண்பாளன். குற்றமற்ற கேள்வி அறிவில் மிக்கோர் சென்றால் அவர்களுடன் அன்பாக உரையாடும் ஆற்றல் பெற்றவன். இவ்வாறு எல்லோருக்கும் வழங்கும் சிறப்புக் கொண்ட கோப்பெருஞ்சோழனை யமன் பறித்துச் சென்றுவிட்டான். என்று போற்றுகின்றார்.

*நிலைத்த புகழுக்கு ஈதல் வேண்டும்*

இந்த உலகத்தில் பிறந்தவர் அனைவரும் இறந்தே ஆகவேண்டும். உயிருடன் இறவாமல் இருப்பவர் ஒருவரும் இல்லை. எனவே ஒருவன் தன் வாழ்நாளில் இயன்றவரை பிறருக்கு உதவி செய்யவேண்டும் என்கிறார் சிறுவெண் தேரையார் என்னும் புலவர்.

ஞாயிற்று அன்ன ஆய்மணி மிடைந்த
மதிஉறழ் ஆரம் மார்பில் புரள
பலிபெறு முரசம் பாசறைச் சிலைப்ப
பொழிலகம் பரந்த --------
---------------------
அணங்கு உருத்தன்ன கணம்கொள் தானை
கூற்றத்து அன்ன மாற்றரு முன்பின்
ஆக்குரல் காண்பின் அந்தணாளர்
நான்மறைக்குறி------
அறம் குறித்தன்று பொருள் ஆகுதலின்
மருள் தீர்ந்து மயக்கு ஒரீஇ
கைபெய்த நீர் கடல் பரப்ப

*ஆம்இருந்த அடை நல்கி*
*சோறு கொடுத்து மிகப் பெரிதும்*
*வீறுசான............ நன்றும்*
*சிறுவெள் என்பின் நெடுவெண் களரின்*
*வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்*
*பகலும் கூவும் அகலுள் ஆங்கண்*
*காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொடு*
*இல்லென்று இல்வயின் பெயர மெல்ல*
*இடம் சிறிது ஒதுங்கல் அஞ்சி*
*உடம்பொடும் சென்மார் உயர்ந்தோர் நாட்டே* [10]

சூரியனைப் போல் ஒளி வீசும் மணிகளைக் கொண்ட குளிர்ந்த ஆரத்தினைக் கழுத்திலே கொண்ட வீரர்கள் போர் செய்து புகழ் பெறுவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். அவர்கள் அறத்தைக் கருத்தில் கொள்ளாமல் புகழ் ஒன்றையே கருத்தில் கொண்டு போர் புரிகின்றனர். அவ்வாறு போர்செய்து வீழ்ந்தவர்களை மேல் உலகத்திற்கு அனுப்பும் பார்ப்பனர்கள் தெளிக்கும் எள்ளும் நீரும் ஆறு போல் ஓடும் அளவிற்கு வீரர்கள் மேல் உலகம் செல்கிறார்கள் என்னும் இப்பாடலில் உலகின் நிலையாமை விளக்கப் பெற்றுள்ளது. இறப்பு என்பது பொதுவானது என்பதனை விளக்கும் வகையில் இந்தப் பாடல் பொதுமை அறத்தினை விளக்குகிறது.

*பாசறையிலும் வழங்கும் வள்ளல்*

கிள்ளி வளவன் சோழர் குடியில் தோன்றியவன். அவன் வறியவர்க்கு வழங்கும் வள்ளன்மை கொண்டவன். அவனது வள்ளல் தன்மைக்கு இடம், பொருள், ஏவல் என்று எதுவும் கிடையாது. அவ்வாறு வழங்கும் அவனது சிறப்பினைப் பின்வரும் பாடல் தெரிவிக்கிறது.

வெள்ளியும் இருவிசும்பு ஏர்தரும் புள்ளும்
உயர்சினைக் குடம்பைக் குரல் தோற்றினவே
பொய்கையும் போதுகண் விழித்தன பையச்
சுடரும் சுருங்கின்று ஒளியே பாடு எழுந்து
இரங்குரல் முரசமொடு வலம்புரி ஆர்ப்ப
இரவுப் புறங் கண்ட காலைத் தோன்றி
எஃகு இருள் அகற்றும் ஏமப் பாசறை
வைகறை அரவம் கேளியர் பலகோள்
செய்தார் மார்ப, எழுமதி துயில் என
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி
நெடுங்கடைத் தோன்றி யேனே அது நயந்து
உள்ளி வந்த பரிசிலன் இவன் என
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கலன் நிறைந்த மணம் நாறு தேறல்
பாம்பு உரித்தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி அன்ன வண்மையின் சொரிந்து
வேனில் அன்ன என்வெப்பு நீங்க
அருங்கலம் நல்கி யோனே என்றும்
செறுவில் பூத்த சேயிதழ்த் தாமரை
அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த
தீயொடு விளங்கும் நாடன் வாய்வாள்
வலம்படு தீவின் பொலம்பூண் வளவன்
எறிதிரைப் பெருங்கடல் இறுதிக் கண் செலினும்
தெறுகதிர்க் கனலி தென்திசைத் தோன்றினும்
என் என்று அஞ்சலம் யாருமே வென்வேல்
அருஞ்சமம் கடக்கும் ஆற்றல் அவன்
திருந்து கழல் நோன்தாள் தண் நிழலேமே [11]

என்னும் பாடலில் பாசறையில் இருக்கும் மன்னன் அதிகாலையில் உணவும் உடையும் பரிசாக வழங்கிய தன்மை விளக்கப் பெற்றுள்ளது.

விடிவெள்ளி வானில் தோன்றுகின்ற அதிகாலை நேரம். பெரிய மரத்தின் கிளைகளிலிருந்து புள்ளினங்கள் ஒலி எழுப்புகின்றன. பொய்கைகளில் தாமரைகள் விரியத் தொடங்கின. மெல்ல கதிரவன் ஒளி கொடுத்தான். அந்த அதிகாலை வேளையில் பாணன் ஒருவன் தனது கிணை என்னும் பறையினை ஒலியெழுப்பி நிற்கிறான். அவனது பறை ஒலியினைக் கேட்டதும் கிள்ளிவளவன் அவன் மேல் கோபம் கொள்ளவில்லை. மாறாக இவன் நம்மை நம்பி வந்த பரிசிலன். இவன் பரிசு இல்லை என்று ஏமாந்து போகக் கூடாது என்று எண்ணி அவனுக்கு ஊன் உணவினையும் பாம்பில் சட்டை போன்ற மென்மையான வெண்மையான பூ வேலைப் பாடமைந்த ஆடைகளையும் கொடுத்தான். அதனைக் கண்ட அந்தப் பாணன் மகிழ்ந்து அவனது போர் ஆற்றலைப் புகழ்ந்து பாடியுள்ளான். தாயங்கண்ணனார் பாடிய இந்தப் பாடலில் ஈகை அறத்துக்கு இடமும் காலமும் இல்லை என்னும் கருத்து விளக்கப் பெற்றுள்ளது.

*நம்பிக்கைக்கு உரிய வள்ளல்*

கிள்ளி வளவன் வள்ளல் என்பது அனைவரும் அறிந்தது. அந்தக் கிள்ளிவளவனைத் தேடிப் பாணர்களும் கூத்தர்களும் பொருநர்களும் செல்வது இயல்பு. அவனிடம் சென்றால் பரிசு கிடைப்பது நிச்சயம் என்னும் நம்பிக்கையுடன் அவர்கள் செல்கின்றனர். அவ்வாறு செல்லும் ஒரு பொருநனுக்கு நம்பிக்கையூட்டி, தாமான் தோன்றிக் கோன் என்னும் வள்ளலிடம் அழைத்துச் செல்லுகிறான் ஒரு பாணன். அந்தத்

தோன்றிக் கோன் அந்தப் பொருநனின் நம்பிக்கைக்கு உரிய வள்ளலாக விளங்கிய தன்மையினை ஐயூர் முடவனார் பாடியுள்ளார்.

*அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்*
*தொடிமாண் உலக்கைப் பரூஉக் குற்று அரிசி*
*காடி வெள்உலைக் கொளீஇ நீழல்*
*ஓங்கு சினை மாவின் தீம்கனி நறும்புளி*
*மோட்டிரு வராஅல் கோட்டுமீன் கொழுங்குறை*
*செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகல்*
*பாதிரி ஊழ்முகை அவிழ்விடுத்து அன்ன*
*மெய்களைந்து இனனோடு விரைஇ*
*மூழ்ப்பப் பெய்த முழு அவிழ்ப் புழுக்கல்*
*அழிகளின் படுநர் களிஅட வைகின்*
*பழஞ்சோறு அயிலும் முழங்குநீர்ப் படப்பை*
*காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்*
*கிள்ளி வளவன் உள்ளி அவற் படர்தும்*
*செல்லேன் செல்லேன் பிறர்முகம் நோக்கேன்*
*நெடுங்கழைத் தூண்டில் விடுமீன் தொடுத்து*
*கிணைமகள் அட்ட பாவல் புளிங்கூழ்*
*பொழுது மறுத்து உண்ணும் உண்டியேன் அழிவுகொண்டு*
*ஒருசிறை இருந்தேன் என்னே! இனியே*
*அறவர் அறவன் மறவர் மறவன்*
*மள்ளர் மள்ளன் தொல்லோர் மருகன்*
*இசையின் கொண்டான் நசைஅமுது உண்கென*
*மீப் படர்ந்து இறந்து வன்கோல் மண்ணி*
*வள்பரிந்து கிடந்த-------மணக்க*
*விசிப்புறுத்து அமைந்த புதுக்காழ்ப் போர்வை*

*அலகின் மாலை ஆர்ப்ப வட்டித்து*
*கடியும் உணவு என்ன கடவுட்கும் தொடேன்*
*கடுந்தேர் அள்ளற்கு அசாவா நோன்சுவற்*
*பகடே அத்தை யான் வேண்டி வந்தது என*
*ஒன்றுயான் பெட்டா அளவை அன்றே*
*ஆன்று விட்டனன் அத்தை விசும்பின்*
*மீன் பூத்து அன்ன உருவப் பல்நிரை*
*ஊர்தியொடு நல்கி யோனே சீர்கொள*
*இழும் என இழிதரும் அருவி*
*வான்தோய் உயர் சிமைத் தோன்றிக் கோவே!*[12]

தோன்றி மலைத் தலைவனைப் புகழ்ந்து பொருநன் ஒருவன் கூறுவதாக அமைந்துள்ள இந்தப் பாடலில் தோன்றிக் கோனை அறவோர்களுள் சிறந்த அறவோன் என்றும் வீரர்களில் சிறந்த வீரன் என்றும் உழவர்களுள் சிறந்த உழவன் என்றும் வள்ளல்களின் வழிவந்தவன் என்றும் போற்றியுள்ளார்.

பொழுது மறுத்து உண்ணும் ஏழ்மை நிலையில் உள்ள பொருநன் ஒருவன் தனது வறுமையைப் போக்கும் வள்ளலை நினைத்துக் காத்திருக்கையில் தோன்றியவன் அந்தத் தோன்றிக் கோன் என்று கூறிய புலவர் அவன் புலவர்களின் நம்பிக்கைக்கு உரியவன் என்றும் பாடியுள்ளார்.

*இளந்திரையனது அற ஆட்சி*

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் இளந்திரையன். அவன் சேரர் குடியிலோ சோழர் குடியிலோ பாண்டியர்

குடியிலோ தோன்றிய பெருமை கொண்டவன் அல்லன். ஆனால் பாணர்க்கு வழங்கும் பண்டைத் தமிழ் மரபில் சற்றும் குறைவில்லாதவன். தொண்டை நாட்டினை ஆண்டுவந்தவன்.

*இருநிலம் கடந்த திருமறு மார்பின்*
*முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்*
*திரைதரு மரபின் உரவோன் உம்பல்*
*மலர்தலை உலகத்து மன்உயிர் காக்கும்*
*முரசு முழங்குதானை மூவருள்ளும்*
*இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்*
*வலம்புரி அன்ன வசை நீங்கு சிறப்பின்*
*அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்*
*பல்வேல் திரையர் படர்குவீர் ஆயின்* [13]

என்னும் அடிகளில் தொண்டைமான் இளந்திரையனின் தொண்டையர் குடிப் பெருமையினையும் அவனது செங்கோல் வழுவா அறநெறி ஆட்சியினையும் உருத்திரங்கண்ணனார் போற்றியுள்ளார். இளந்திரையன் நல்லாட்சி புரிந்து வந்ததால் அவன் நாட்டில் வாழ்வோர் எந்தத் துன்பமும் இல்லாமல் இன்பமாக வாழ்ந்தனர். அதனை,

*அத்தம் செல்வோர் அலறத் தாக்கி*
*கைப்பொருள் வௌவும் களவுஏர் வாழ்க்கைக்*
*கொடியோர் இன்று அவன் கடியுடை வியன்புலம்*
*உருமும் உரறாது அரவும் தப்பா*
*காட்டு மாவும் உறுகண் செய்யா* [14]

என்னும் அடிகளில் தெரிவிக்கின்றன.

வழிச்செல்வோர் தமக்கு எந்தத் துன்பமும் ஏற்படாத வண்ணம் காவல் மிக்கதாக இளந்திரையனது ஆட்சி இருந்துள்ளது என்று அவனது அறவழிப் பட்ட நல்லாட்சியைத் தெரிவித்துள்ளார். இடிகூடத் துன்பம் தராது என்றும் பாம்பு கடிக்காது என்றும் காட்டு விலங்குகளால் எந்தத் துன்பமும் நேராது என்றும் கூறியுள்ளதிலிருந்து மக்கள் எந்த அச்சமும் இன்றி இனிமையாக வாழ்ந்தனர் என அறிந்து கொள்ள முடிகிறது.

*இளந்திரையனது வள்ளல் தன்மை*

இளந்திரையனது நாட்டுக்குச் செல்லுமாறு ஆற்றுப்படுத்திய பாணன் அவனது வள்ளல் தன்மையினைப் பின்வருமாறு கூறுகிறான்.

*நில்லா உலகத்து நிலைமை தூக்கி*
*அந்நிலை அணுகல் வேண்டி நின்அரைப்*
*பாசி அன்ன சிதர்வை நீக்கி*
*ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம்*
*இரும்பேர் ஒக்கலோடு ஒருங்குடன் உடீஇ*
*கொடுவாள் கதுவிய வடுஆழ் நோன்கை*
*வல்லோன் அட்ட பல்ஊன் கொழுங்குறை*
*அரிசெத்து உணங்கிய பெருஞ்செந்நெல்லின்*
*தெரிகொள் அரிசித் திரள்நெடும் புழுக்கல்*
*அருங்கடித் தீம்சுவை அமுதொடு பிறவும்*
*விரும்புடை மரபின் கரப்புடை அடிசில்*
*மீன்பூத்தன்ன வான்கலம் பரப்பி*
*மகமுறை மகமுறை நோக்கி முகன்அமர்ந்து*
*ஆனா விருப்பின் தான்நின்று ஊட்டி* [15]

இந்த உலகம் நிலையில்லாதது. நிலையில்லா இந்த உலகில் நிலைத்து நிற்பது புகழ் ஒன்றுதான் என அறிந்தவன் இளந்திரையன். எனவே பாணர்க்கும் கூத்தர்க்கும் பொருநர்க்கும் அவன் வழங்கி மகிழ்ந்தான். அவன் வழங்கும் கொடையின் ஒருபகுதியாகப் பாணர்க்கு அவன் உணவு வழங்கும்போது அவர்களுக்கு விண்மீன் போன்ற ஒளிபொருந்திய கலத்தில் உணவினை வழங்கினான். அந்த உணவும் நன்கு சமைக்கப்பட்ட முதல்தரமான உணவாக இருக்கிறதா என்று பார்த்து வழங்கினான். மேலும் அவர்கள் உணவு உண்ணும்போது அவர்களின் அருகில் நின்று அவர்கள் மேலும் உண்ணுவதற்கு வழிவகை செய்தான்.

அவர்கள் அணிந்திருந்த அழுக்கடைந்த ஆடைகளை மாற்றிப் புதிய ஆடைகளை அணியச் செய்தான். இது அவன் உணவு படைப்பதற்கு முன்பு வழங்கியது.

அவர்கள் உணவு உண்டபின் பாடினிக்குத் தங்கத் தாமரையும் மாலையும் பரிசாக வழங்கினான். பாணனுக்குத் தேர்முதலானவற்றைப் பரிசாக வழங்கி மகிழ்ந்து அனுப்பும் இயல்பு கொண்டவன் இளந்திரையன் என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் தெரிவித்துள்ளார்.

*ஆடுவண்டு இமிரா அழல் அவிர் தாமரை*
*நீடிரும் பித்தை பொலியச் சூட்டி*
*உரவுக் கடல் முகந்த பருவ வானத்துப்*
*பகற்பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு*
*புனைஇருள் கதுப்பகம் பொலிய பொன்னின்*
*தொடைஅமை மாலை விறலியர் மலைய*

*நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்*
*வளைகண்டன்ன வால்உளைப் புரவி*
*துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி*
*அரித்தேர் நல்கியும் அமையான்* [16]

என்னும் அடிகள் அவன் வழங்கிய கொடைத் தன்மையினை விளக்குகின்றன.

*செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்*
*நல்விருந்து வானத்தவர்க்கு* [17]

என்னும் திருக்குறளுக்கு ஏற்ப விருந்தோம்பல் பண்பில் சிறந்து விளங்கிய இளந்திரையன் கொடைச்சிறப்பினை இயல்பாகக் கொண்டவன் எனலாம்.

பசித்து வந்தவர்க்கு உணவளிப்பதும் இல்லை என்றவர்க்குப் பொருள் வழங்குவதும் பழந்தமிழர் அறச்செயல். அந்த வழிவழி வந்த அறச்செயலைத் தவறாது செய்தவன் இளந்திரையன் என்பது பெறப்படுகிறது.

*அறம் காக்கும் மன்னன்*

அறத்தைக் காக்கின்ற பொறுப்பு அனைவருக்கும் பொதுவானது. இருப்பினும் மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி என்னும் தொடருக்கு ஏற்ப மன்னன் அறத்தைக் காக்கும் எண்ணம் கொண்டவனாக இருக்கவேண்டும் என்று உரைக்கிறது அகநானூறு. மேலும் அவன்

தான் காக்கும் அறத்தைத் தொடர்ந்து காக்கும் திறன் உடையவனாகவும் இருக்கவேண்டும். அவ்வாறு இல்லை என்றால் தொடர்ந்து அவனால் அறத்தினைக் காத்து நல்லாட்சி நல்கிட இயலாது.

*பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ!*
*இரண்டு உயர் விசும்பின் வலன் ஏர்பு வளைஇ*
*போர்ப்பு உறு முரசின் இரங்கி முறைபுரிந்து*
*அறன்நெறி பிழையாத் திறன் அறி மன்னர்*
*அருஞ்சமத்து எதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்*
*கழித்து எறி வாளின் நளிப்பன ஆகி விளங்கும்*
*மின்னுடைக் கருவியை ஆகி* [20]

மேகமானது கடலில் இருந்து ஆவியாகும் நீரினைப் பெற்றுக்கொண்டு வானத்தில் உயர்ந்து அந்த வானத்தை வளைத்து இருளாகக் காட்சியளிக்கிறது. அந்த மேகங்கள் உரசும்போது ஏற்படும் இடிமுழக்கமானது முரசொலி போல் கேட்கிறது. போர்புரியும் போது வீரர்களின் கைவாளினைப் போல் அந்த மேகம் மின்னுகிறது என்று மேகத்தைப் பற்றிக் கூறும் இடத்தில் அறம் காக்கும் மன்னனைப் பற்றி வீரை வெளியன் தித்தனார் பாடியுள்ளார்.

மன்னன் அறநெறி தவறாதவனாகவும் வீரம் நிறைந்தவனாகவும் விளங்கிடவேண்டும். அத்தகைய மன்னன் போர்புரியும் போது அவரது கைவாளின் ஒளியினைப் போல் மின்னல் மின்னுகிறது என்று உவமையில் தெரிவித்திருந்தாலும் மேகம் எவ்வாறு மக்களுக்கு மழையைப் பொழிந்து நன்மை புரிகிறதோ அதைப் போல அறநெறி தவறாமல் இருக்கும் மன்னன் தனது நல்லாட்சியின் வாயிலாக நாட்டு மக்களுக்கு நன்மை புரிகிறான் என்று உணர்த்தியுள்ளார்.

தமிழகத்தில் நிலத்தை ஐந்து பிரிவாகப் பிரித்துள்ளார் தொல்காப்பியர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பவை. இந்த ஐந்து திணையின் கண் கிடைக்கும் பொருள்கள் அனைத்து நிலங்களுக்கும் பொதுவானவை. எனவே அந்தந்த நிலங்களில் வாழ்கிற மக்கள் தங்கள் நிலத்தில் விளையும் பொருள்களைப் பிற நில மக்களுடன் பகிர்ந்து ஏற்றுக் கொள்ளும் மனவியல்பு கொண்டவர்களாக இருந்தால் மக்கள் வாழ்க்கையில் அமைதி நிலவும். அவ்வாறு கரிகாலன் ஆட்சிக் காலத்தில் சோழநாட்டில் அமைதி நிலவியது என்று முடத்தாமக் கண்ணியார் பாடியுள்ளார்.

*தேன்நெய்யோடு கிழங்கு மாறியோர்*
*மீன் நெய்யோடு நறவு மறுகவும்*
*தீங்கரும்போடு அவல் வகுத்தோர்*
*மான்குறையோடு மது மறுகவும்*
*குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்*
*நறும்பூங் கண்ணி குறவர் சூட*
*கானவர் மருதம் பாட அகவர்*
*நீல்நிற முல்லைப் பல்திணை நுவல*
*கானங்கோழி கதிர் குத்த*
*மனைக் கோழி தினைக் கவர*
*வரை மந்தி கழிமூழ்க*
*கழிநாரை வரைஇறுப்ப*
*தண்வரைப்பின் நால்நாடு குழீஇ*
*மண்மருங்கின் மறு இன்றி*
*ஒரு குடையான் ஒன்று கூற*

*பெரிது ஆண்ட பெருங்கேண்மை*
*அறனொடு புணர்ந்த திறன்அறி செங்கோல்*
*அன்னோன் வாழி வென்வேற் குருசில்* [19]

உலகத்தை ஒருகுடைக் கீழ் ஆளும் ஆற்றல் கொண்டவன் கரிகால் வளவன். அவன் அத்தகைய வீரத்தினைப் பெற்றிருந்தாலும் அறந்தவறாமல் நல்லாட்சி புரிந்தான் என்பதனை அறிய முடிகிறது. எனவே மன்னனது ஆட்சி அறநெறி தவறா ஆட்சியாக விளங்குதல் வேண்டும் என்பது தெளிவு. மேலும் கரிகால் பெருவளத்தான் நீதி தவறாதவன் என்பதற்கு அவன் இளமையிலேயே நரைமுடி தரித்து நல்ல நீதி வழங்கிய தன்மை சான்றாக உள்ளது.

*மன்னர் போற்றும் மன்னராட்சி*

சேரர் குடியில் தோன்றியவன் மாந்தரஞ்சேரல் இரும்பொறை. அவனது நல்லாட்சியையும் வீரத்தையும் எடுத்துக் காட்டி இளஞ்சேரல் இரும்பொறையின் நல்லாட்சியையும் வீரத்தையும் புகழ்ந்துள்ளார் பெருங்குன்றூர் கிழார்.

*மீன்வயின் நிற்ப வானம் வாய்ப்ப*
*அச்சற்று ஏமம் ஆகி இருள் தீர்ந்து*
*இன்பம் பெருகத் தோன்றி, தம் துணைத்*
*துறையின் எஞ்சாமை நிறையக் கற்று*
*கழிந்தோர் உடற்றும் கடுந்தூ அஞ்சா*
*ஒளிறுவாள் வய வேந்தர்*
*களிறொடு கலம் தந்து*
*தொன்று மொழிந்து தொழில் கேட்ப*

*அகல் வையத்துப் பகல் ஆற்றி*
*மாயாப் பல்புகழ் வியல் விசும்பு ஊர்தர*
*வாள்வலியுறுத்துச் செம்மை பூஉண்டு*
*அறன் வாழ்த்த நற்கு ஆண்ட*
*விறல் மாந்தரன் விறல் மருக*
*ஈரம் உடைமையின் நீர் ஓரனையை*
*அளப்பு அருமையின் இருவிசும்பு அனையை*
*கொளக் குறைபடாமையின் முந்நீர் அனையை*
*பல்மீன் நாப்பண் திங்கள் போல*
*பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை* [20]

விண்மீன்கள் தத்தம் இடத்தில் இருந்தால் மழைவளம் குன்றாமல் செழிக்கும். மழைவளம் செழித்தால் மக்கள் மகிழ்ச்சியாக வாழ்வார்கள். அவ்வாறு மக்கள் மகிழ்ச்சியாக வாழவும் அண்டை நாட்டார்கள் அனைவரும் ஏவலினைக கேட்டு நிற்கும் நிலையிலும் புகழின் உச்சியில் நல்லாட்சி புரிந்தான் இரும்பொறை. விண்மீன்கள் நடுவே தோன்றும் நிலவினைப் போலப் பல மன்னர்கள் நடுவே மன்னர்க்கு மன்னனாக ஆட்சிபுரிந்தான் அவன். எனவே மக்கள் மகிழ்ச்சியாக வாழவும் பிறமன்னர்கள் போற்றும்படியாகவும் ஆட்சி நடத்துவது அறம் என்பதனை அறிந்து கொள்ளமுடிகிறது.

*அறநெறி தவறாப் பாண்டியன்*

திருவேங்கடத்தின் அருகில் பிற மன்னர்கள் அக்காலத்தில் ஆட்சி செலுத்தியிருக்கிறார்கள். அவர்களை வென்ற பாண்டியன் அவர்களிடமிருந்து யானைகளைக் கைப்பற்றித் தனது பாண்டிய நாட்டிற்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் அறநெறி தவறாமல்

கொற்கையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தியிருக்கிறார்கள் என்று பாடியுள்ளார் மதுரைக் கணக்காயர்.

*வடவயின்*
*வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை*
*மறப் போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்*
*கொற்கை அம்பெருந்துறை முத்தின் அன்ன*
*நகைப் பொலிந்து இயங்கும் எயிறு* [21]

அறநெறிப் படி ஆட்சி செலுத்தும் பாண்டியர்களின் கொற்கை நகரில் முத்து விளைகிறது. அந்த முத்தினைப் போன்ற பற்களைக் கொண்ட தலைவி என்பது உவமை. இந்த உவமையில் பாண்டிய மன்னர்களின் அறம் தவறா ஆட்சி விளக்கம் பெற்றுள்ளது. மன்னனது ஆட்சியானது அறத்தின் மாட்சி கொண்டு விளங்க வேண்டும் என்பதனை இது தெரிவிக்கிறது.

*அமைச்சரின் அறச்செயல்*

பாண்டிய மன்னர்கள் அறநெறி பிழைக்காமல் ஆட்சி நடத்தும் எண்ணம் கொண்டவர்கள். அவர்களது எண்ணத்தை மீறி அறநெறி பிழைத்து விட்டால் தங்கள் உயிரையும் இழக்கத் தயங்க மாட்டார்கள் என்பதற்குச் சிலப்பதிகாரம் தெரிவிக்கும் பாண்டியன் நெடுஞ்செழியன் சாட்சி. அந்தப் பாண்டிய மன்னர்கள் தங்கள் அமைச்சர்களை நியமிக்கும் போதும் அவர்கள் அறநெறிப் படி வாழ்கிறவர்கள்தாமா என ஆய்ந்து அறிந்த பின்னரே நியமிப்பர். அவ்வாறு தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் நியமிக்கப்பட்ட அமைச்சரின் அறநெறிச் சிறப்பினை மதுரைக் காஞ்சி தெரிவித்துள்ளது.

*நறுஞ்சாந்து நீவிய கேழ்கிளர் அகலத்து*
*ஆவுதி மண்ணி அவிர் துகில் முடித்து*
*மா விசும்பு வழங்கும் பெரியோர் போல*
*நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி*
*அன்பும் அறமும் ஒழியாது காத்து*
*பழி ஒரீஇ உயர்ந்து பாய் புகழ் நிறைந்த*
*செம்மை சான்ற காவிதி மாக்களும்*
*அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகி* [22]

என்னும் அடிகளில் காவிதிப் பட்டம் பெற்ற அமைச்சரின் அறநெறிச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

நன்மையையும் தீமையையும் பிரித்து அறிந்து நன்மையை ஏற்று, தீமை புரியாமல் காத்து வாழ்வது அறிவின்பாற்பட்டது. அந்த அறிவுத் துறையில் சிறந்தவர் பாண்டியனின் அமைச்சர். எல்லா உயிர்களிடத்தும் அன்பு கொண்டு வாழ்தல் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது என்றாலும் அமைச்சர் அனைத்துக் குடிமக்களையும் பொதுவானவர்களாகக் கருதி அவர்களிடம் அன்பு பாராட்ட வேண்டும். அறம் நாட்டில் தழைக்க வேண்டும் என்றால் ஆட்சியாளர்கள் நல்லவர்களாக இருக்கவேண்டும். இங்கே ஆட்சியாளர்கள் என்பது மன்னனை மட்டும் குறிக்காமல் அவன் கீழ்ப் பணிபுரியும் அனைவரையும் குறிக்கிறது. எனவே அமைச்சர் முதலானவர்களும் அறநெறி தவறாமல் நடக்க வேண்டும். அவ்வாறு அறநெறியில் மன்னன் ஆட்சி நடத்த எல்லா வகையிலும் துணைபுரியும் அமைச்சர்களைக் கொண்டிருந்தது பாண்டிய நாடு என்பது மாங்குடி மருதனாரால் விளக்கப்பெற்றுள்ளது.

அறமும் செல்வமும் நிறைந்த வாழ்க்கை என்றால் இன்பத்திற்குத் தடை எதுவும் இருக்காது. ஏனெனில் அற நெஞ்சம் கொண்டவர்கள் சேர்க்கும் செல்வம் அறவழிப்பட்ட செல்வம் ஆகும். செல்வத்தை அறவழியில்தான் ஈட்ட வேண்டும். அறம் அல்லாத வழியில் ஈட்டும் செல்வம் நிலைத்த இன்பத்தினைத் தராது என்று திருவள்ளுவர் தெரிவித்துள்ளார்.

*சலத்தால் பொருள் செய்தே மார்த்தல் பசுமட்*
*கலத்துள் நீர் பெய்திரீஇ யற்று* [23]

என்னும் திருக்குறள் தீய வழிகளில் உருவாக்கிய பொருளைப் பாதுகாத்தல் என்பது பச்சைமண் கலத்தில் நீரினை வைத்துக் காப்பது போன்றது ஆகும் என்று தெரிவிக்கிறது. பச்சை மண் கலத்தில் சேமித்து வைக்கும் நீரானது கசிந்து காணாமல் போய்விடும். அதைப் போலத் தீய வழிகளில் சேர்த்த பொருளும் வீணாகப் போய்விடும்.

*அறன் கடைப்படாஅ வாழ்க்கையும் என்றும்*
*பிறன் கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்*
*பொருளின் ஆகும்* [24]

என்னும் அகநானூற்றுப் பாடல் எந்தக் காலத்திலும் அறவழிப் பட்டதாக வாழ்க்கை இருக்கவேண்டும் என்று தெரிவிக்கிறது. அறவழியில் வாழ்வதாகக் கூறிக்கொண்டு பொருளினைச் சேர்க்காமலும் வாழக்கூடாது என்பதை உணர்த்துவதற்காகப் பிறரது வாசலுக்குச் சென்று செல்வத்திற்காக ஏங்கி நிற்காத அளவிற்குத் தேவையான செல்வத்தையும் சேர்க்கவேண்டும் என்கிறது.

வாழ்க்கைக்குப் பொருளும் வேண்டும், அறவழிப்பட்டதாக அந்தப் பொருள் வந்திருக்க வேண்டும் என்று அறவாழ்க்கையின் அடிப்படையினை அகநானூறு தெரிவித்துள்ளது.

*பிறர் துன்பத்திற்கு வருந்தும் அறம்*

மனிதர்கள் ஒருவருக்கொருவர் மகிழ்ச்சியையும் துன்பத்தையும் பகிர்ந்துகொள்ளும் இயல்பு கொண்டவர்கள். அவர்கள் அவ்வாறு செயல்படுவதால் சேர்ந்து வாழும் இயல்பு கொண்டு விளங்குகிறார்கள். அப்படிப் பிறரது துன்பத்திற்கு இரங்கும் தன்மையினை ஐங்குறுநூறு காட்டியுள்ளது.

*வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென*
*காணிய சென்ற மடநடை நாரை*
*கையறுபு இரற்று கானல்அம் புலம்ப*
*துறைவன் வரையும் என்ப*
*அறவன் போலும் அருளுமார் அதுவே* [25]

வெள்ளைக் கொக்கின் குஞ்சு இறந்ததால் அந்தக் கொக்கு வருத்தத்தால் ஆழ்ந்தது. அந்த வருத்தத்தினைப் போக்குவதற்காக நாரை ஒன்று வருகிறது. இஃது அஃறிணை உயிர்களின் இரக்கப் பண்பினைக் காட்டுகிறது. இந்த அஃறிணை உயிர்களின் இரக்கப் பண்பினைப் போல் இல்பரத்தையைத் தேடிச் சென்றுள்ள தலைவன் அவளது துன்பத்தைப்போக்கக் கருதியே சென்றுள்ளான். எனவே அவன் அறமும் அருளும் கொண்டவன் என்று தோழி கூறுகிறாள். இங்கே தலைவன் நற்பண்பு கொண்டவன் என்பது விளக்கப் பெற்றாலும்

பிறரது துன்பத்தினைக் கண்டு பொறுக்க முடியாதவன் என்னும் உயர்ந்த வாழ்க்கைப் பண்பு விளக்கம் பெற்றுள்ள தன்மையினைக் காணமுடிகிறது.

*உற்ற நோய் தீர்த்தல் அறம்*

நோய் கொண்டவனின் நோயினைப் போக்குவது மருத்துவ அறம். அந்த அறச் செயலினை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே போற்றிப் புகழ்ந்துள்ளது நற்றிணை.

*திருந்துகோல் எல்வளை வேண்டி யான் அழவும்*
*அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது*
*மருந்து ஆய்ந்து கொடுத்து அறவோன் போல*
*என் ஐ வாழிய பலவே! பன்னிய*
*மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய*
*தலைப்பிரிவு உண்மை அறிவான் போல*
*நீப்ப நீங்காது வரின்வரை அமைந்து*
*தோள்பழி மறைக்கும் உதவிப்*
*போக்குஇல் பொலந்தொடி செறீஇயோளே* [26]

தலைவி தனது தந்தையைப் பற்றித் தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ள இந்தப் பாடலில் தனது தந்தையின் முன் யோசனையினைப் புகழ்ந்து கூறியுள்ளாள்.

நான் தோள்வளை வேண்டும் என்று என் தந்தையிடம் கேட்டவுடன் அவர் எனக்குத் தங்கத்தால் தோள்வளை செய்து கொடுக்கும் போது கொஞ்சம் சிறிய தோள்வளையினைச் செய்து கொடுத்தது இப்போது பொருத்தம் உடையதாகத் தோன்றுகிறது. நான்

என் தலைவனைவிட்டுப் பிரியும் காலம் நேர்கையில் எனது உடல் மெலிவினால் இந்தத் தோள்வளையானது விழுந்துவிடக் கூடாது என்றுதான் கொஞ்சம் சிறிதாகச் செய்துள்ளார் என்று கூறுகின்றாள் தலைவி. தந்தையின் செயலுக்குத் தலைவி கூறிய உவமையில்தான் மருத்துவ அறம் அமைந்துள்ளது.

நோய் கொண்டவர் கேட்டவற்றை எல்லாம் மருத்துவர் கொடுப்பது இல்லை. நோயாளியின் நோயினை ஆய்ந்து அந்த நோயின் தன்மைக்கு ஏற்றாற் போன்ற உணவினையும் மருந்தினையும் கொடுப்பதே மருத்துவ அறம். அதைப் போன்றே நான் வளை வேண்டும் என்று கேட்டவுடன் பெரிய வளையினைப் போடாமல் சிறிய வளையினை ஆராய்ந்து போட்டுள்ளார் என்று கூறியுள்ளாள் தலைவி. இந்தப் பாடலில் மருத்துவனை அறவோன் என்று குறிப்பிட்டுள்ளார் நற்றங் கொற்றனார் என்னும் புலவர். மருத்துவத் தொழிலை அறத்தொழிலாகக் கருதியதால் அவர் அறவோன் என்று மருத்துவனைக் குறிப்பிட்டுள்ளார் எனலாம்.

*உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்*[27]

என்னும் குறட்பாவில் மருத்துவன் ஒருவன் நோயுற்றிருப்பவன் வலிமையினையும் நோயின் அளவினையும் நோயுற்றிருக்கும் காலத்தையும் அறிந்து மருந்து கொடுப்பான் என்று தெரிவித்துள்ளார் திருவள்ளுவர். இந்தக் குறட்பாவுக்கேற்பவே நற்றங்கொற்றனார் தமது நற்றிணைப் பாடலிலும் மருத்துவனின் செயற்பாட்டினைக் குறிப்பிட்டுள்ளார்.

*நோய்நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்* [38]

என்னும் குறட்பாவும் மருத்துவம் வழங்கும் மருத்துவனின் பண்பினை விளக்குவதாக அமைந்துள்ளது.

*நிலையற்ற செல்வம்*

இந்த உலகத்தில் செல்வம் நிலையானது அல்ல. இளமையும் நிலையானது அல்ல. நிலையில்லாத செல்வத்தைத் தேடுவதற்காக இளமைக் காலத்தை வீணாக்கிப் பொருள் தேடச்செல்லாதீர் என்கிறது நற்றிணைப் பாடல்.

*தேம்படு சிலம்பில் தெள்அறல் தழீஇய*
*துறுகல் அயல தூமணல் அடைகரை*
*அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்*
*பொதும்புதோறு அல்கும் பூங்கண் இருங்குயில்*
*கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு*
*அகறல் ஓம்புமின் அறிவுடையீர்! என*
*கையறத் துறப்போர்க் கழறுவ போல*
*மெய்உற இருந்து மேவர நுவல*
*இன்னாது ஆகிய காலை பொருள்வயின்*
*பிரியல் ஆடவர்க்கு இயல்பு எனின்*
*அரிது மன்றம்ம அறத்தினும் பொருளே ?* [29]

உயர்ந்த மலை அடிவாரத்தின் ஆற்றங்கரையில் அழகிய சோலை. அந்தச் சோலையில் உள்ள மாமரங்களில் மாங்குயில்கள் கூவுகின்றன. அவ்வாறு அவை கூவும் போது என்ன சொல்லிக் கூவுகின்றன தெரியுமா ? சூதாடும் கருவியாகிய கவறு நமது கையைவிட்டுப்

பெயர்வது போல் நிலையற்றது பொருள். இந்த நிலையற்ற பொருளைத் தேட நினைத்து நிலையான காதலை விட்டுப் பிரியாதீர் என்று கூவுகின்றன என்கிறார் அல்லங்கீரனார் என்னும் புலவர்.

உலகில் வாழ்கின்ற ஒவ்வொருவனும் நிலைத்த புகழைப் பெறவேண்டும் என்றால் அறவழியில் வாழ்க்கையினை அமைத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு அமைக்கும் அறவாழ்க்கைக்கு உட்பட்டதுதான் காதல் வாழ்க்கை. அந்தக் காதல் வாழ்க்கையினை இளமைக் காலத்தில் மட்டுமே வாழ முடியும். செல்வம் நிலையில்லாதது போல் இளமையும் நிலையில்லாததுதான். எனவே இளமை இருக்கும் போது செல்வத்தைத் தேடி ஓடாமல் இனிய காதல் செய்வீர் என்னும் கருத்தின் வாயிலாக வாழ்வியல் அறம் எது என்று உணர்த்தியுள்ளார் புலவர்.

உணவு பெருக்கும் அறம்

அரசர்கள் அரசாண்ட நிலையில் மக்களுக்கு எந்தவகையில் உரிமைகள் கொடுத்தனர், எந்த அளவில் மக்களை மதித்தனர் முதலான செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

மக்கள் நலமாக வாழ்வதற்குத் தேவையான வளங்களைப் பெருக்குவது மன்னனின் கடமை என்பதனைப் பின்வரும் புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது.

*நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே*
*உண்டி முதற்றே உணவின் பிண்டம்*
*உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே*

*நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசினோரே*
*வித்தி வான்நோக்கும் புன்புலம் கண் அகன்*
*வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்*
*இறைவன் தாட்கு உதவாதே, அதனால்*
*அடுபோர்ச் செழிய இகழாது வல்லே நீர்நிலை பெருகத்*
*தட்டோர் அம்ம இவண் தட்டோரே*
*தள்ளாதோர் இவண் தள்ளாதோரே!*[30]

உலக உயிர்கள் எதுவும் நீரின்றி வாழ முடியாது. நீரின் உதவி கொண்டே உணவுப் பொருள்கள் பயிராகின்றன. அவ்வாறு பயிராகின்ற உணவினை வழங்கக்கூடியவரை உயிர் கொடுத்தோர் என்கிறோம். இந்த உணவுக்கு அடிப்படையாக இருக்கக் கூடிய நீர்நிலைகளை அமைத்து மக்கள் செழித்து வாழத் துணைபுரிவது மன்னனின் கடமை என்று குடபுலவியனார் தெரிவிக்கிறார்.

தலையாலங்கானம் என்னும் இடத்தில் நடந்த போரில் தனது பகை மன்னர்களை வென்றவன் நெடுஞ்செழியன். அவன் போர் ஆற்றல் மிக்கவன் என்பதால் தொடர்ந்து போர் செய்வதிலேயே காலத்தைக் கழித்து வந்தான். மக்களின் அழிவுக்கு வழிவகுக்கும் போர்த் தொழிலை விடவும் ஏர்த் தொழில் சிறந்தது. அந்த ஏர்த்தொழிலுக்கு அடிப்படையாக அமைவது நீர்நிலைகள். எனவே நீர்நிலைகளைப் பெருக்குவதற்குக் குடபுலவியனார் அறிவுறுத்தியுள்ளார்.

*கொடியோரை ஒழித்து நல்லோரைக் காத்தல்*

நாட்டு மக்கள் சிறப்பாக வாழவேண்டும் என்றால் கொடியவர்களை ஒழிக்கவேண்டும். அவ்வாறு கொடியவர்களை

ஒழித்து மக்களை வாழ்வித்தல மன்னனின் கடமை எனச் சங்க இலக்கியம் தெரிவிக்கிறது..

*கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க்கு அளித்தலும்*
*ஒடியா முறையின் மடிவு இலை ஆகி*
*நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்*
*நெல்விளை கழனிப் படு புள் ஓப்புநர்*
*ஒழி மடல் விறகின் கழி மீன் சுட்டு*
*வெங்கள் தொலைச்சியும் அமையார் தெங்கின்*
*இளநீர் உதிர்க்கும் வளம்மிகு நல்நாடு*
*பெற்றனர் உவக்கும் நின்படை கொள்மாக்கள்*[31]

நல்ல செயல்களைச் செய்தால் நன்மை நிகழும். தீய செயல்களைச் செய்தால் தீமை நிகழும் என்னும் சொல்லில் உண்மை இல்லை என்று சொல்லும் கொடியவர்கள்பால் அன்பு காட்டாமல் நல்லாட்சி புரிதல் வேண்டும். மீனையும் கள்ளையும் உண்ட உன் குடிமக்கள் அதன் பின்னும் இளநீர் உண்ணும் அளவிற்கு வளமான நாட்டினைக் கொண்ட நீ அவர்களின் அமைதியான வாழ்க்கைக்கு வழி வகுத்துத் தருதல் வேண்டும் என்று முதுகண்ணன் சாத்தனார் பாடியுள்ளார்.

*வேண்டியவர் வேண்டாதவர் பார்க்கக் கூடாது*

ஆட்சி செய்யும் மன்னன் தனக்கு வேண்டியவர்களுக்கு ஒரு நீதி, மற்றவர்களுக்கு ஒரு நீதி என்று ஆட்சி செலுத்தக் கூடாது. எல்லோரையும் சமமாகப் பாவித்தல் வேண்டும். அத்தகைய ஆட்சியே அறநெறி தவறா ஆட்சி.

*ஓங்குமலைப் பெருவில் பாம்பு ஞாண் கொளீஇ*
*ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றி*
*பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த*
*கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்*
*பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல*
*வேந்து மேம்பட்ட பூந்தார் மார்ப!*
*கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ் பரிய கலிமாவும்*
*நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சு உடைய புகன் மறவரும்என*
*நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட*
*அறநெறி முதற்றே அரசின் கொற்றம்*
*அதனால் நமர் எனக் கோல் கோடாது*
*பிறர் எனக் குணம் கொல்லாது*
*ஞாயிற்று அன்ன வெந்திறல் ஆண்மையும்*
*திங்கள் அன்ன தண்பெருஞ்சாயலும்*
*வானத்து அன்ன வண்மையும் மூன்றும்*
*உடையை ஆகி இல்லோர் கையற*
*நீ நீடு வாழிய நெடுந்தகை–தாழ்நீர்*
*வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்*
*நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை*
*கடுவளி தொகுப்ப ஈண்டிய*
*வடு ஆழ் எக்கர் மணலினும் பலவே!*[32]

முப்புரம் எரிசெய்தவன் சிவன். அவனது நெற்றியில் உள்ள கண் மற்ற இரு கண்களுக்கும் நடுவில் நாயகமாக உள்ளது. அதைப் போல் சோழர்க்கும் சேரர்க்கும் தலைவனாக விளங்கும் பாண்டியனே!

யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை என்னும் நால்வகைப் படைதான் வெற்றிக்குக் காரணம் என்றாலும் அறநெறிப்பட்ட ஆட்சி நடைபெற வில்லை என்றால் எந்த வெற்றியும் நிலைக்காது.

தீமை செய்தவர் வேண்டியவர் என்பதற்காக அவருக்குத் தண்டனை வழங்காமலும் நமக்கு வேண்டாதவர்களின் பெருமையைப் போற்றாமலும் இருப்பது அறநெறி ஆகாது.

ஞாயிற்றைப் போன்ற வெம்மையான வீரமும் நிலவைப் போன்ற மென்மையான ஈரமும் வான்மழையைப் போன்ற கொடைத் தன்மையும் பெற்று நீண்ட நாள் வாழ்வாயாக என்று மதுரை மருதன் இளநாகனார் பாடியுள்ளார். இந்தப் பாடல் வாயிலாக நேர்மையான அறத்தின் ஆட்சியை வலியுறுத்தியுள்ளார்.

*மக்கள் கடமையும் மன்னன் கடமையும்*

உலகில் தோன்றியவர் ஒவ்வொருவரும் தத்தம் கடமையைச் சரியாகச் செய்வதே சிறந்த வாழ்வியல் அறமாகும். அந்த வகையில் புலவர் பொன்முடியார் ஒவ்வொருவரின் கடமையும் என்ன என்பதனை விளக்கியுள்ளார்.

*ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே*
*சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே*
*வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே*
*நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே*

*ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி*
*களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே!*[93]

நல்ல குழந்தையாக ஒரு குழந்தையைப் பெற்றுக் கொடுக்கும் கடமை தாய்க்குரியது என்றால் அந்தக் குழந்தையைக் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குமாறு செய்வது தந்தைக்குரிய கடமை ஆகும். இளைஞன் ஆனபின் அவன் போர்க் கலைகளைக் கற்றுத் தேர்வதற்குத் தேவையான வேலினை உருவாக்கிக் கொடுத்தல் கொல்லனின் கடமை. சிறந்த வீரனாகப் பயிற்சி முடித்த இளைஞனுக்குப் படையில் பதவி கொடுத்துப் பாதுகாத்தல் மன்னனின் கடமை. இத்தகைய உதவிகளைப் பிறரிடம் பெற்று வளர்ந்த அந்த இளைஞன் போர்க்களத்தில் யானையைக் கொன்று தாய்நாட்டிற்கு வெற்றியைப் பெற்றுத் தருதல் வேண்டும் என்று இந்தப் பாடல் விளக்குகிறது.

*புலவர் போற்றும் மன்னன் ஆட்சி*

சங்க கால மன்னர்கள் தங்கள் ஆட்சியைப் புலவர்கள் பாராட்டுவதைப் பெரிதும் விரும்பினர். எனவே புலவர்களது புகழுரையையும் இடித்துரையையும் உயர்வாகக் கருதினார்கள். அவர்களது புகழ்மொழி தமக்குக் கிடைக்காமல் போவதை இழிவாகக் கருதினார்கள்.

*நகுதக்கனரே நாடு மீக்கூறுநர்*
*இளையன் இவன் என உளையக் கூறி*
*படுமணி இரட்டும் பாஅடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையும் தேரும் மாவும்*

*படைஅமை மறவரும் உடையம் யாம் என்று*
*உறுதுப்பு அஞ்சாது உடல் சினம் செருக்கி*
*சிறுசொல் சொல்லிய சினம்கெழு வேந்தரை*
*அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்கு அகப்படேஎன் ஆயின் பொருந்திய*
*என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது*
*கொடியன் எம் இறை எனக் கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவன் ஆக*
*உலகமொடு நிலைஇய பலர் புகழ் நிலவரை*
*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயா இன்மை யான் உறவே!*[94]

குடிமக்கள் போற்றும் படியாக ஒரு மன்னன் ஆட்சி செய்வதே நல்ல ஆட்சி ஆகும்.பண்டைக் கால மன்னர்கள் கொடுங்கோலன் எங்கள் மன்னன் என்று இழிவாகக் கூறுவதைக் கேட்க விரும்பவில்லை. எனவேதான் பாண்டியன் நெடுஞ்செழியன் தனது வஞ்சின உரையில் குடி பழி தூற்றும் கோலேன் ஆகுக என்று கூறியுள்ளான்.

மேலும் இல்லை என்று இரப்பவர்க்கு வழங்குவதைச் சிறந்த அறமாகக் கருதினர். அவ்வாறு இரப்பவர்க்கு வழங்க முடியாத நிலை வருவதை இழிவாகக் கருதியுள்ளனர். எனவே அதனையும் தனது வஞ்சினத்தில் சேர்த்துள்ளான்.

*இரப்போர்க்கு நாட்டையும் ஈவர்*

இல்லை என்று இரந்து வந்து கேட்கின்றவர்கள் மன்னனின் நாட்டினைக் கேட்டாலும் வழங்கும் வள்ளல்களாக விளங்கினார்கள் சங்க கால மன்னர்கள். அவ்வாறு இல்லாமல் போரினால் நாட்டைக் கைப்பற்ற நினைத்தவர்களை வெற்றி கண்டுள்ளார்கள்.

*மெல்ல வந்து என்நல்லடி பொருந்தி*
*ஈ என இரக்குவர் ஆயின் சீருடை*
*முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்*
*இன்னுயிர் ஆயினும் கொடுக்குவென் இந்நிலத்து*
*ஆற்றல் உடையோர் ஆற்றல் போற்றாது என்*
*உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்*
*துஞ்சுபுலி இடறிய சிதடன் போல*
*உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைக்*
*கழைதின் யானைக் கால் அகப்பட்ட*
*வன்திணி நீள்முறை போலச் சென்று அவண்*
*வருந்தப் போரேஎன் ஆயின் பொருந்திய*
*தீதுஇல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்*
*பல்லிருங் கூந்தல் மகளிர்*
*ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே!* [35]

ஒருவனுக்கு ஒருத்தி என்னும் இல்லறத்தினை உயர்ந்த நல்லறமாகப் போற்றியவர்கள் தமிழர்கள். அத்தகைய நல்லறத்தினை அந்தக் கால மன்னர்களும் போற்றியிருக்கிறார்கள். எனவேதான் சோழன் நலங்கிள்ளி தனது வஞ்சினத்தில் தனது உரிமை மனைவியைப் பிரிந்து பொதுப்பெண்டிருடன் கூடியதால் என் மாலை வாடியதாகப் பிறர் பழி தூற்றட்டும் என்று கூறுகிறான்.

எனது பகைவர்கள் எனது நாட்டினைக் கைப்பற்றுவதற்கு ஓர் எளிய வழி இருக்கிறது. அது என்னவென்றால் அவர்கள் இரவலர்கள் போல் மெல்ல வந்து எனது நாட்டினைப் பெற்றுக் கொள்ளலாம். அவ்வாறு இல்லாமல் போரின் மூலம் எனது நாட்டினைக் கைப்பற்றலாம் என்று எண்ணினால் யானைக் காலில் அகப்பட்ட கரும்பின் முளை போல அவர்களை அழித்து விடுவேன் என்று கூறுகிறான். எனவே அந்தக் காலத்தில் ஈரமும் வீரமும் அறமாகக் கருதப்பட்ட தன்மையினைக் காணமுடிகிறது.

*மன்னனின் பொருள் பங்கீடும் வரி கொள்ளும் தன்மையும்*

மன்னன் தன் நாட்டில் வாழும் மக்கள் அனைவருக்கும் எல்லாம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அவ்வாறு ஏற்பாடு செய்வதற்கு மன்னனுக்குப் பொருள் எங்கிருந்து வருகிறது என்றால் அதுவும் மக்களிடம் இருந்தே வரி என்ற பெயரில் வருகிறது. அந்த வரியினை எவ்வாறு பெறுதல் வேண்டும் என்பதனையும் இங்கே பிசிராந்தையார் பாடல் தெரிவித்துள்ளது.

*காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே*
*மா நிறைவு இல்லதும் பல்நாட்கு ஆகும்*
*நூறு செறு ஆயினும் தமித்துப் புக்கு உணினே*
*வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்*
*அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே*
*கோடி யாத்து நாடு பெரிதும் நந்தும்*
*மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்*
*வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு*

*பரிவு தப எடுக்கும் பிண்டம் நச்சின்*
*யானை புக்க நிலம் போல*
*தானும் உண்ணான் உலகமும் கெடுமே* [36]

வயலில் விளைந்த நெல்லினை அறுவடை செய்து அதனை அரிசியாக்கிச் சமைத்துக் கவளமாக்கி யானைக்குக் கொடுத்தால் ஒரு மா அளவுள்ள நிலத்தில் விளைந்த நெல்கூட அந்த யானைக்குப் பல நாளுக்குரிய உணவு ஆகும். ஆனால் மாறாக நூறு வயல்களில் யானை புகுந்து மேய்ந்தால் ஒரே நாளில் மேய்வதுடன் அல்லாமல் அதன் வாய் புகுவதைக் காட்டிலும் கால் பட்டு அழிவதே மிகுதி ஆகும். அதைப் போல வரி வசூல் செய்யும் மன்னனும் பொருள் வீணாவதைக் கவனத்தில் கொண்டு குறைவான வரியினை விதித்து அதனை நியாயமான முறையில் வசூல் செய்ய வேண்டும். அவ்வாறு இல்லாமல் அறிவில்லாத அமைச்சர் முதலானோரைக் கொண்டு அறநெறியில்லாமல் வரி விதித்து அதனை வசூல் செய்தால் அந்த வரியினால் அவனுக்கும் பயன் கிடைக்காது, மக்களும் துன்பப்படுவர் என்று பாண்டியன் அறிவுடை நம்பி எவ்வாறு மக்களைக் காக்கவேண்டும் என்று அறிவுறுத்தியுள்ளார் புலவர் பிசிராந்தையார்.

*மன்னனாகும் தகுதி யாருக்கு உண்டு ?*

தமிழர் மரபில் ஒரு குடியில் தோன்றிய மூத்தவனுக்கு அரசனாகும் தகுதி உண்டு என்பது யாவரும் அறிந்த உண்மை. ஆனால் அவ்வாறு அரசனாகும் மூத்தவனாகப் பிறந்தவன் கல்வியறிவு இல்லாதவனாக இருந்தால் அவனுக்கு அந்த அரசபதவி கிடைக்காது என்று ஆரியப் படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் பாடியுள்ளான்.

*உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றை நிலை முனையாது கற்றல் நன்றே*
*பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்றுள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்*
*ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்*
*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்*
*வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே!* [37]

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கல்வியை உயர்ந்ததாகக் கருதியிருக்கிறார்கள் தமிழர்கள். அதனால்தான் கல்வி கற்பிக்கும் ஆசிரியருக்குத் தேவைப் படும் உதவிகளைச் செய்தும் மிகுதியான பொருளினைக் கொடுத்தும் வேறு கவனம் இல்லாமல் கல்வியிலேயே கவனமாக இருந்து கற்றிடல் வேண்டும் என்று கூறியுள்ளனர். ஏனெனில் தகுதியின் அடிப்படையில் ஒரு தாய்கூடக் கல்வி அறிவு உள்ள தனது மகனைத் தான் விரும்புவாள். ஒரு குடியில் தோன்றிய பலர் இருக்கையில் அவர்களில் மூத்தவன்பால் அரசு செல்லாமல் கல்வி அறிவுடையவன் இளையவனாக இருந்தாலும் அவனிடமே அரசு செல்லும். மேலும் நான்கு வருணங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள இந்த மக்கள்பிரிவில் உயர்வு தாழ்வு உள்ளது. உயர்குடியில் பிறந்த ஒருவன் கல்வி அறிவு இல்லாதவனாக இருந்து தாழ்ந்த குடியில் பிறந்த ஒருவன் கல்வி அறிவு பெற்றவனாக இருந்தால் அந்த உயர்ந்த குடியில் பிறந்தவனும் இந்தத் தாழ்ந்த குடியில் பிறந்தவனின் சொல்லினைக் கேட்டு நடக்க வேண்டும். அந்த அளவிற்குக் கல்விக்குப் பெருமை உண்டு. எனவேதான்

திருவள்ளுவரும் மன்னன், அமைச்சன் முதலானோர் கல்வி அறிவு பெற்றவர்களாக இருக்கவேண்டும் என்று தெரிவித்துள்ளார்.

*மன்னன் ஆட்சிச் சிறப்பே நாட்டின் சிறப்பு*

நாடு என்பது மக்கள் வாழும் இடம். இந்த இடமானது பல்வேறு தன்மைகளைக் கொண்டு விளங்கும். அந்தத் தன்மைக்கு ஏற்ப நிலத்திற்குச் சிறிது பெருமை உண்டு. என்றாலும் அதையும் தாண்டி மன்னனின் ஆட்சி எங்கே சிறப்பாக இருக்கிறதோ அந்த நாட்டிற்குத் தான் சிறப்பு வந்து சேரும் என்று ஔவையார் பாடியுள்ளார்.

*நாடா கொன்றோ காடா கொன்றோ*
*அவலா கொன்றோ மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே* [38]

நாடானது குறிஞ்சியாகவும் இருக்கலாம், முல்லையாகவும் இருக்கலாம், மருதமாகவும் இருக்கலாம், நெய்தலாகவும் இருக்கலாம். இவற்றில் எந்தப் பிரிவினைக் கொண்டதாக நாடு இருந்தாலும் அதனால் அந்த நாட்டிற்குச் சிறப்பு வந்து சேர்வதில்லை. மன்னனின் ஆட்சி எந்த நிலத்தில் சிறப்பாக இருக்கிறதோ அந்த நாடே சிறந்த நாடாகக் கருதப்படும் என்பது இதனால் பெறப்படுகிறது. எனவே மன்னனின் நல்லாட்சியே நாட்டுக்குச் சிறப்பினைத் தரும் என்பதனை நாம் அறிந்து கொள்ள முடியும்.

இதே கருத்தினை மோசி கீரனாரும் தமது பாடல் வாயிலாகத் தெரிவித்துள்ளார்.

*நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்*
*அதனான் யான் உயிர் என்பது அறிகை*
*வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே* [39]

இந்த உலகில் உள்ள மக்கள் நெல்லினால் கிடைக்கும் அரிசியை உண்டு உயிர் வாழ்கிறார்கள் என்று சொன்னால் அது தவறு. நீரினைக் குடித்து உயிர் வாழ்கிறார்கள் என்றால் அதுவும் தவறு. மன்னனின் ஆட்சிக்கும் ஈரத்திற்கும் வீரத்திற்கும் ஏற்பவே மக்கள் வாழ்க்கையும் அமையும். ஏனெனில் பகை மன்னன் ஒருவன் படை கொண்டு வந்து தாக்கினால் மன்னனுடன் மக்களும் அழிவது திண்ணம். எனவே மன்னன் தன் மக்களைப் பாதுகாக்கும் பொருட்டுப் பெரும் படையினை உருவாக்கிக் கொள்ள வேண்டும். அதுவே வேந்தனின் தலையாய கடமை என்று அவர் பாடியுள்ளார்.

*யாதும் ஊரே யாவரும் கேளிர்*

உலகம் மூன்று பகுதி நீரையும் ஒரு பகுதி பூமிப் பரப்பையும் கொண்டு அமைந்துள்ளது. இந்த உலகில் உள்ள மக்கள் அனைவரும் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழ்தல் வேண்டும். அவ்வாறு வாழ்ந்தால் மக்கள் நலமாக வாழ்வார்கள். மேலும் மக்கள் வாழ்க்கையானது அதன் போக்கில் செல்லும் இயல்பு கொண்டது. ஒருவர் வாழ்க்கையை வேறொருவர் பாழ்படுத்த நினைப்பது பொருந்தாது என்று கணியன் பூங்குன்றனார் பாடியுள்ளார்.

*யாதும் ஊரே யாவரும் கேளிர்*
*தீதும் நன்றும் பிறர்தர வாரா*
*நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன*
*சாதலும் புதுவ தன்றே வாழ்தல்*
*இனிது என மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்*
*இன்னாது என்றலும் இலமே மின்னொடு*
*வானம் தண்துளி தலைஇ ஆனாது*
*கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று*
*நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர்*
*முறைவழிப் படூஉம் என்பது திறவோர்*
*காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்*
*பெரியோரை வியத்தலும் இலமே*
*சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே!* [40]

வானம் மழையைப் பொழிகிறது. அந்த மழை நீரானது மலையிலிருந்து அருவியாகப் பாய்ந்து ஆறாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. அந்த ஆற்று நீரில் செல்லும் தெப்பமானது அந்த ஆற்று நீரின் இழுவிசைக்கு ஏற்ப செல்லும். அதுபோன்றே மனித வாழ்க்கையும் பிறப்புத் தொடங்கி இறப்பு என்ற திசையை நோக்கியே செல்லும். எனவே பெரியவர் என்று யாரையும் போற்றிப் புகழவும் தேவையில்லை. சிறியவர் என்று யாரையும் இகழ்ந்து ஒதுக்குதலும் தேவையில்லை.

பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட இந்த வாழ்க்கையில் ஏற்படும் நன்மையும் தீமையும் பிறரால் நமக்கு வருவதில்லை. நமது செயல்களாலேயே நமக்கு வருகின்றன என்ற எண்ணம் நமக்குத் தோன்றி விட்டால் இந்த உலகில் உள்ள எல்லா ஊரும் சொந்த ஊரே, இந்த உலகில் உள்ள எல்லா மக்களும் சொந்த மக்களே என்னும்

பொதுமைக் கருத்து இந்தப் பாடல் வாயிலாக உலக மக்களுக்கு உணர்த்தப்படுகிறது.

*நல்ல செயல் செய்ய இயலாது எனினும் அல்லது செய்யன்மின்*

எல்லோராலும் எல்லோர்க்கும் எப்போதும் நல்ல செயல்களைச் செய்ய இயலாது. எனவே அவ்வாறு நல்ல செயல்களைச் செய்ய இயலவில்லை என்றாலும் தீய செயல்களையாவது செய்வதைத் தவிர்த்து விடுங்கள் என்று நரி வெரூஉத் தலையார் அறிவுரை பகன்றுள்ளார்.

*பல்சான்றீரே! பல்சான்றீரே!*
*கயல் முள் அன்ன நரை முதிர் திரைகவுள்*
*பயனில் மூப்பின் பல்சான்றீரே*
*கணிச்சிக் கூர்ம்படை கடுந்திறல் ஒருவன்*
*பிணிக்கும் காலை இரங்குவிர் மாதோ*
*நல்லது செய்தல் ஆற்றீராயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்*
*எல்லோரும் உவப்பது அன்றியும்*
*நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே!* [41]

உலக மக்கள் ஒவ்வொருவரும் நரைமுடி தோன்றி இறப்பது உறுதி. அவ்வாறு மூப்பு வந்த காலத்தில் காலன் நம்மை வந்து பிடிக்கும் போது நாம் யாருக்கும் எந்த நல்ல செயலையும் செய்ய வில்லையே என்று வருந்துவீர்கள். எனவே உங்களால் நல்ல செயல்களைச் செய்ய இயல வில்லை என்றால் தீய செயல்களைச் செய்யாதீர்கள். இவ்வாறு

வாழ்வதுதான் எல்லோரும் ஏற்றுக் கொண்டு மகிழும் செயல் ஆகும். மேலும் மற்றவர்களை நல்வழிப் படுத்தும் வழியும் இதுவே ஆகும்.

*இன்பமும் துன்பமும் பொது*

மக்கள் வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் எல்லோர்க்கும் பொதுவானவை ஆகும். நான் மட்டுமே துன்பத்தில் வாடுகிறேன். மற்றவர்கள் எல்லாம் இன்பத்தில் வாழ்கிறார்கள் என்று நினைக்கத் தேவையில்லை. ஏனெனில் இந்த உலகில் இன்பமும் துன்பமும் எல்லாருக்கும் வரும். அவை எப்போது வரும் என்பதனை நம்மால் உணர இயலாது.

*ஓர் இல் நெய்தல் கறங்க ஓர் இல்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப*
*புணர்ந்தோர் பூ அணி அணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப*
*படைத்தோன் மன்ற அப்பண்பிலாளன்*
*இன்னாது அம்ம இவ்வுலகம்*
*இனிய காண்க இதன் இயல்பு உணர்ந்தோரே!*[42]

இந்த உலகில் ஒரு வீட்டில் சாவுப் பறை முழங்குகிறது. அதே நேரம் இன்னொரு வீட்டில் மண முழவு முழங்குகிறது. இது தவிர்க்க முடியாதது. இவ்வாறு ஒருவர் துன்பத்தில் துவளவும் இன்னொருவர் இன்பத்தில் மகிழுமாறும் இந்த உலகத்தினைப் படைத்த இறவன் பண்பில்லாதவன், இந்த உலகம் துன்பம் நிறைந்தது என்று புலம்பி நிற்பதை விடவும் இனியவற்றைக் கண்டு இனிமையாக வாழ்வதே

சிறப்பு என்று வாழ்வியல் அறத்தினை பஃறுடுக்கை நன்கணியார் பாடியுள்ளார்.

*சான்றோர் வாழும் ஊரில் மக்கள் நல்வாழ்வு வாழ்வர்*

வேந்தன் தன் குடிமக்கள் மகிழ்ச்சி அடையும் வகையில் நல்லாட்சி புரிந்தால் மக்கள் நல்வாழ்வு வாழ்வர். அவ்வாறு இல்லை எனில் அவர்களது வாழ்வு நீடிக்காது.

*யாண்டு பல ஆக நரை இல ஆகுதல்*
*யாங்கு ஆகியர் என வினவுதிர் ஆயின்*
*மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பின*
*யான் கண்டனையர் என் இளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை*
*ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!* [43]

கோப்பெருஞ்சோழனிடம் நட்புக் கொண்டிருந்தவர் பிசிராந்தையார். இருவருக்கும் ஏறத்தாழ ஒத்த வயது. பிசிராந்தையார் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்க வந்திருந்தான். அவன் நரைதிரையுடன் காணப்பட்டான். அவனுடன் வடக்கிருக்க வந்திருந்த பிசிராந்தையார் இளமையுடன் காணப்பட்டார். அவ்வாறு கேட்டவர்க்கு அவர் கூறும்போது அவரது குடும்பத்தார் அனைவரும் நல்லவர் என்றும் மன்னன் நல்ல முறையில் அறநெறிப்படி ஆட்சி புரிகிறான் என்றும் நான் வாழும் ஊரில் எல்லோரும் சான்றோர்களாக வாழ்கின்றனர், எனவே எனக்கு மூப்புத் தோன்ற வில்லை. இளமையாகக் காட்சி யளிக்கிறேன் என்று கூறியுள்ளார்.

எனவே இளமைக்குக் காரணம் நல்ல நெறிப்பட்ட கவலை இல்லாத வாழ்வு ஆகும் எனத் தெளியலாம்.

*உண்பது நாழி! உடுப்பவை இரண்டே!*

எவ்வளவு செல்வம் பெற்றவனாக ஒருவன் இருந்தாலும் அத்தனை செல்வத்தினையும் பொருளாக்கி உண்ண முடியாது. அத்தனை செல்வத்தையும் உடையாக்கி உடுத்த முடியாது என்ற உண்மையினை நக்கீரர் புறநானூற்றில் தெரிவித்துள்ளார்.

*தெண்கடல் வளாகம் பொதுமையின்றி*
*வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்*
*நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்*
*கடுமா பார்க்கும் கல்லா ஒருவற்கும்*
*உண்பது நாழி உடுப்பவை இரண்டே*
*பிறவும் எல்லாம் ஓர் ஒக்கும்மே*
*செல்வத்துப் பயனே ஈதல்*
*துய்ப்பேம் எனினே தப்புந பலவே!* [44]

இந்த உலகம் முழுவதையும் ஒரே குடையின் கீழ் ஆட்சி செய்யக் கூடிய மன்னனாக இருந்தாலும் ஒவ்வொரு நாளும் உணவிற்காக வேட்டையாடக்கூடிய ஒருவனாக இருந்தாலும் உண்ணும் உணவில் பெரிய மாற்றம் எதுவும் கிடையாது. அதைப் போன்றே உடுக்கும் உடையும் மேல் ஒன்று, கீழ் ஒன்று என்று இரண்டே ஆகும். எனவே செல்வம் பெற்றவர்கள் அந்தச் செல்வத்தைப் பிறருக்குக் கொடுத்துப் புகழைப் பெற்று வாழ வேண்டும். மாறாக அந்தச் செல்வத்தை எல்லாம் நாமே அனுபவிப்போம் என்று நினைத்தால் அதனால் கேடுதான் வந்து

விளையும் என்று ஈகை அறத்தின் சிறப்பினை நக்கீரர் புலப்படுத்தியுள்ளார்.

*தனக்கென வாழாத் தகைமை*

மனிதன் சேர்ந்து வாழும் இயல்பு கொண்டவன். அவ்வாறு வாழும் போது அவன் தன்னை மட்டும் கருத்தில் கொண்டு தன்னலத்துடன் விளங்கினால் அதனால் அவனுக்கு மகிழ்ச்சி எதுவும் கிடைக்காது. பிறர்நலத்தைப் பேணி வாழ்ந்தால் மட்டுமே மகிழ்ச்சி கிடைக்கும் என்று கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி என்னும் மன்னன் பாடியுள்ளான்.

*உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்*
*அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்*
*தமியர் உண்டலும் இலரே முனிவுஇலர்*
*துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சி*
*புகழ் எனின் உயிரும் கொடுக்குவர் பழி எனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்*
*அன்ன மாட்சி அனையராகி*
*தமக்கு என முயலா நோன்தாள்*
*பிறர்க்கு என முயலுநர் உண்மையானே!* [45]

இந்த உலகம் அந்தரத்தில் நிலையாகச் சுற்றிக் கொண்டிருப்பதன் காரணம் எதுவென்றால் தன்னலம் கருதாமல் பிறர்நலம் கருதி வாழ்கின்ற நல்லவர்கள் இருப்பதால்தான் என்ற உண்மை இந்தப் பாடல் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது.

தேவர் உலகத்தில் இந்திரன் வைத்திருக்கும் அமிர்தமே கிடைத்தாலும் அதனை நாம் மட்டும் உண்டு நலமாக வாழவேண்டும்

என்று நல்லவர்கள் நினைக்க மாட்டார்கள். பிறர்க்கும் பகிர்ந்து கொடுத்து எல்லோரும் நலமாக வாழ வேண்டும் என்றே விரும்புவார்கள். புகழுக்காக உயிரையும் கொடுக்குத் தயங்க மாட்டார்கள். பழி ஏற்படும் என்று தெரிந்தால் இந்த உலகமே கிடைப்பதாக இருந்தாலும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். இத்தகைய நல்லறம் மிக்கவர்களாக மக்கள் வாழ வேண்டும் என்று விரும்பியுள்ளான் இளம்பெருவழுதி.

*விழுப்புண் சிறப்பு*

பண்டைத் தமிழர்கள் வீரத்தின் விளைநிலமாக விளங்கினார்கள். ஆண்மகன் உடலில் ஏற்படும் விழுப்புண்களுக்கு ஏற்பவே அவனைப் பெருமைக்கு உரியவனாகக் கருதினார்கள். விழுப்புண் படாத நாள் எல்லாம் வீண் நாளே என்று கருதும் இயல்பு கொண்டவர்கள் அவர்கள்.

*குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்*
*ஆள் அன்று என்று வாளின் தப்பார்*
*தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய*
*கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்*
*மதுகை இன்றி வயிற்றுத் தீத் தணியத்*
*தாம் இரந்து உண்ணும் அளவை*
*ஈன்மரோ இவ் உலகத்தானே!*[46]

கணைக்கால் இரும்பொறையைச் சோழன் செங்கணான் சிறை பிடித்திருந்தான். ஒரு மன்னனுக்குரிய எந்தத் தகுதியையும் கருதாது இழிவாக நடத்தினான். சிறையிலிருந்த அவன் தண்ணீர் கேட்ட போது

காவலர்கள் காலந்தாழ்த்தினர். அதுகண்டு பொறாது அவன் பாடிய இந்தப் பாடலில் மன்னர் குடியின் பெருமை விளக்கப்பட்டுள்ளது.

ஒரு குழந்தை இறந்து பிறந்தாலும் அல்லது தசைப் பிண்டமே பிறந்தாலும் ஆள் இல்லை என்று விடாமல் வாளால் விழுப்புண் எனக் கருதும் வடுவினை ஏற்படுத்தியே புதைப்பர். விழுப்புண் படாமல் ஓர் ஆண் இறக்கக் கூடாது. அவ்வாறு போர்க்களத்தில் உயிரை விடாமல் நாயைச் சங்கிலியால் பிணிப்பது போலப் பிணித்துச் சிறையில் அடைபட்டுக் கிடக்கும் நான் இந்தத் தகுதி அற்றவர்கள் கையால் காலந்தாழ்த்தித் தரும் சிறிதளவு தண்ணீரை இரந்து உண்ணமாட்டேன் என்று கூறியுள்ளான். கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்னும் கருத்துக்கு ஏற்ப இந்தப் பாடல் தமிழரின் வீரத்தையும் மானத்தையும் அறமாக விளக்கி நிற்பதைக் காணமுடிகிறது. தகுதியில்லாதவர் கையில் இரந்துண்ணும் நிலை வராமல் போர்க்களத்தில் மடிவதே வீரம் என்று கருதிய நிலை இது.

*அதியமானின் ஈரமும் வீரமும்*

ஈரமும் வீரமும் கொண்டவர்கள் பண்டைத் தமிழ் மன்னர்கள். அவர்களில் பலர் வள்ளல்களாகவும் விளங்கினார்கள். தகடூரினை ஆண்ட மன்னன் அதியமான் நெடுமான் அஞ்சி. அவனைப் புகழ்ந்து ஔவையார் பின்வரும் பாடலில் பாடியுள்ளார்.

*ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்*
*நீர்த்துறை படியும் பெருங்களிறு போல*
*இனியை பெரும! எமக்கே மற்று அதன்*
*துன்னருங் கடாஅம் போல*
*இன்னாய் பெரும! நின் ஒன்னாதோர்க்கே!*[47]

யானைக்கு இரண்டு நிலை உண்டு. ஒன்று அதன் சாதுவான நிலை. மற்றொன்று அதன் மதம் பிடித்த நிலை. அது சாதுவாக இருக்கும்போது அதன் முதுகின் மேல் சிறு குழந்தைகளும் ஏறி விளையாடலாம். அதற்கு மதம் பிடித்து விட்டால் எவ்வளவு வலிமை கொண்டோரும் அதன் முன் நிற்க முடியாது. அடித்துக் கொன்று விடும். அத்தகைய வலிமை மிக்க யானையைப் போன்றவன் அதியமான்.

சிறுகுழந்தைகள் யானையை நீராட்டும் போது அது தண்ணீரில் அமைதியாகப் படுத்திருப்பதைப் போல அதியமானும் தன் நாட்டவரிடம் மிகவும் அன்புடையவனாகக் காட்சி அளிக்கிறான்.

மதம் பிடித்த யானை மற்றவர்களையும் பாகனையும் அடித்துக் கொல்வதுபோல் அதியமான் தனது பகைவர்களைப் போர்க்களத்தில் அழித்து ஒழிப்பான் என்று குறிப்பிட்டுள்ளார். இங்கே குடிமக்களைப் பாதுகாக்கும் செயலும் அவர்களைப் பகைவரிடமிருந்து காக்கும் செயலும் நல்லாட்சியாகக் குறிக்கப்பட்டுள்ளன.

*அளவின்றி வழங்குபவன்*

வறியவர்க்கு வழங்கும்போதும் புலவர்க்குக் கொடுக்கும் போதும் அளவின்றுக் கொடுக்கும் இயல்பு கொண்டவன் அதியமான். அவன் பரிசு வழங்குவதற்குக் காலம் நீட்டித்தாலும் அவன் பரிசு வழங்குவது உறுதி என்று ஔவையார் பாடியுள்ளார்.

*ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்*
*பலநாள் பயின்று பலரொடு செல்லினும்*

*தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ*
*இழை அணி யானை இயல்தேர் அஞ்சி*
*அதியமான் பரிசில் பெறூஉம் காலம்*
*நீட்டினும் நீட்டாது ஆயினும் களிறுதன்*
*கோட்டிடை வைத்த கவளம் போலக்*
*கையகத்தது அது பொய் ஆகாதே*
*அருந்த ஏமாந்த நெஞ்சம்*
*வருந்த வேண்டா வாழ்க அவன் தாளே!*[48]

ஒருநாள் சென்றாலும் பலநாள் சென்றாலும் முதல் நாளில் எவ்வளவு அன்பாகப் பழகினானோ அதைப் போன்ற அன்புடன் பழகும் நல்லியல்பு கொண்டவன் அதியமான். அவன் பரிசு வழங்கும் காலம் நீட்டித்தாலும் பரிசு கொடுப்பது உறுதி. யானையின் தந்தத்தின் இடையே வைத்த கவளம் எவ்வாறு கீழே விழாமல் வாய்க்குள்தான் போகுமோ அது போல அவன் பரிசு கொடுப்பதும் உறுதி என்று பாடி அதியமானின் வள்ளல் தன்மையினைத் தெரிவித்துள்ளார்.

*முடியாததை முடியாது எனக் கூறுதல் வேண்டும்*

எல்லோராலும் எல்லாக் காரியத்தையும் எப்போதும் செய்துவிட முடியாது. அவ்வாறு செய்ய முடியாத காலத்திலும் செய்து விடுவேன் என்று தவறான நம்பிக்கையினை ஊட்டுவது தவறு என்னும் செய்தியை ஆவூர் மூலங்கிழார் பாடியுள்ளார்.

*ஒல்லுவது ஒல்லும் என்றலும் யாவர்க்கும்*
*ஒல்லாது இல் என மறுத்தலும் இரண்டும்*
*ஆள்வினை மருங்கின் கேண்மைப் பாலே*

*ஒல்லாது ஒல்லும் என்றலும் ஒல்லுவது*
*இல் என மறுத்தலும் இரண்டும் வல்லே*
*இரப்போர் வாட்டல் அன்றியும் புரப்போர்*
*புகழ் குறைபடூஉம் வாயில் அத்தை*
*அனைத்து ஆகியர் இனி இதுவே எனைத்தும்*
*சேய்த்துக் காணாது கண்டனம் அதனால்*
*நோய் இலராக நின் புதல்வர் யானும்*
*வெயில் என முனியேன் பனி என மடியேன்*
*கல் குயின்றன்ன என் நல்கூர் வளிமறை*
*நாண் அலது இல்லாக் கற்பின் வான் நுதல்*
*மெல்லியல் குறுமகள் உள்ளிச்*
*செல்வல் அத்தை சிறக்க நின் நாளே!* [49]

இரப்பவனுக்குப் பரிசு கொடுக்காமல் காலம் கடத்துவது இரப்பவனுக்குத் துன்பம் தரும் செயல் மட்டும் அல்ல. அது புரவலனின் புகழினைக் குறைக்கும் செயலும் ஆகும். எனவே முடியும் என்றால் முடியும் என்றும் முடியாது என்றால் முடியாது என்றும் வெளிப்படையாகக் கூறுவது சிறந்தது. நீ எனக்குப் பொருள் தரவில்லை என்றாலும் பசியான் வாடியிருக்கும் என் மனைவியை நினைத்து நான் வெயில் என்றும் பனி என்றும் பாராமல் செல்கிறேன். பரிசு கொடாத பாவம் உன் குழந்தைகளைச் சூழாமல் நீ சிறப்பாயாக வாழ்வாயாக என்று சிறந்த அறிநெறியினைப் பாண்டியன் இலவந்திகைத் துஞ்சிய நன்மாறனுக்கு உணர்த்தியுள்ளார் புலவர். வறுமை நிலையிலும் பரிசு கொடாத மன்னனின் குழந்தைகளுக்குக் கூடத் தீங்கு வந்து விடக் கூடாது என்று அஞ்சும் பெருமை மிக்க புலவரின் உள்ளமும் புலனாகின்றது.

கரிகால் பெருவளத்தான் வெண்ணி என்னும் இடத்தில் பகைவர்களுடன் போர்புரிந்தான். அப்போரில் பெருஞ்சேரலாதனின் முதுகில் புறப்புண் பட்டது. அப்புறப்புண்ணுக்கு வெட்கப்பட்டு வடக்கிருந்து உயிர்துறந்தான் அவன். கரிகால் பெருவளத்தானின் வெற்றிப் புகழுக்குச் சற்றும் குறைவில்லாதது புறப்புண் நாணி வடக்கிருந்தது என்று வெண்ணிக் குயத்தியார் பாடியுள்ளார்.

*நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி*
*வளிதொழில் ஆண்ட உரவோன் மருக*
*களியியல் யானைக் கரிகால் வளவ*
*சென்று அமர்க்கடந்த நின் ஆற்றல் தோன்ற*
*வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே!*
*கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
*மிகப் புகழ் உலகம் எய்தி*
*புறப்புண் நாணி வடக்கிருந்தோனே!* [50]

சேரன், சோழன், பாண்டியன் என்னும் மூவேந்தரும் தமிழ்க் குடியினர். இருப்பினும் மூவருக்குள்ளும் பெரும்பாலும் பகைமை உணர்ச்சி காணப்பட்டுள்ளது. இந்தப் பகைமையின் காரணமாக அடிக்கடி போர் நிகழ்ந்துள்ளது. அவ்வாறு வெண்ணிப் பறந்தலை என்ற சோழநாட்டிடத்தில் நடைபெற்ற போரில் பெருஞ்சேரலாதனின் மார்பில் பட்ட வேல் முதுகில் தைத்துவிட்டது. அதனால் ஏற்பட்ட புறப்புண்ணுக்கு நாணிய அவன் வடக்கிருந்து உயிர் துறந்தான். அவனது மறத்தன்மையானது கரிகாலனது மறத்தன்மையை விட உயவர்வானது என்று புறப்புண்ணுக்கு நாணுதல் தமிழர் மரபு எனத் தெரிவித்துள்ளார் வெண்ணிக் குயத்தியார்.

பாணர்கள் வள்ளல்களையும் மன்னர்களையும் சென்று புகழ்ந்து பாடிப் பரிசில் பெறுவதனை மட்டும் நோக்கமாகக் கொண்டவர்கள் அல்லர். கலையினை வளர்க்கும் நோக்கம் கொண்டவர்கள். அவர்களது கலைத்திறனுக்கு ஏற்ப பரிசில் வழங்கும் மக்கள் இல்லாமையால் அவர்கள் வள்ளல்களையும் மன்னர்களையும் நாடிச் சென்றனர். அவ்வாறு சென்று பரிசில் பெறுவதற்கு மன்னனும் வள்ளலும் கிடைக்காமையால் வருந்தி நின்ற பாணன் ஒருவனை வழிப்படுத்துகிறார் ஆலத்தூர் கிழார் என்னும் புலவர்.

*கையது கடன் நிறை யாழே மெய்யது*
*புரவலர் இன்மையின் பசியே அரையது*
*வேற்று இழை நுழைந்த வேர் நனை சிதாஅர்*
*ஓம்பி உடுத்த உயவல் பாண!*
*பூட்கை இல்லோன் யாக்கை போலப்*
*பெரும் புல்லென்ற இரும்பேர் ஒக்கலை*
*வையகம் முழுதுடன் வளைஇ பையென*
*என்னை வினவுதி ஆயின் மன்னர்*
*அடுகளிறு உயவும் கொடிகொள் பாசறை*
*குருதிப் பரப்பின் கோட்டு மா தொலைச்சி*
*புலாக் களம் செய்த கலாஅத் தானையன்*
*பிறங்கு நிலை மாடத்து உறந்தையோனே*
*பொருநர்க்கு ஓக்கிய வேலன் ஒருநிலைப்*
*பகைப்புலம் படர்தலும் உரியன் தகைத் தார்*
*ஒள்ளரி புரையும் உருகெழு பசும்பூண்*

*கிள்ளி வளவன் படர்குவை ஆயின்*
*நெடுங்கடை நிற்றலும் இலையே கடும்பகல்*
*தேர்வீசு இருக்கை ஆர நோக்கி*
*நீ அவன் கண்ட பின்றை பூவின்*
*ஆடு வண்டு இமிராத் தாமரை*
*சூடாயாதல் அதனினும் இலையே!* [51]

ஆடலையும் பாடலையும் வளர்க்கும் பாணர்களின் நிலை சங்க காலத்தில் உயர்ந்தும் உள்ளது. சில நேரங்களில் மிகவும் தாழ்ந்தும் உள்ளது. அவ்வாறு தாழ்ந்த நிலையில் இருந்த பாணன் ஒருவனைக் காட்சிப்படுத்தியுள்ளார் புலவர்.

கையில் அழகிய யாழ். வயிற்றில் பசி. அரையில் கிழிந்து தைத்த ஆடை. வியர்வை மணம் வீசும் அந்த ஆடையினை விரும்பி அணிந்து தன்னைப் புரக்கும் புரவலன் இல்லாமல் வருந்தி நிற்கிறான் பாணன். அந்தப் பாணனைப் பார்த்து, கிள்ளி வளவனின் பெருமையைத் தெரிவித்துள்ளார் ஆலத்தூர் கிழார்.

இந்தப் பாடலில் வளவன் பரிசு வழங்கும் திறம் காட்டப்பட்டுள்ளது. இப்போது எங்கே செல்வது என்று தெரியாமல் தடுமாறி நிற்கும் பாணனே! நீ கிள்ளி வளவனின் வாயிலில் சென்று நிற்கத் தேவையில்லை. பகல் முழுவதும் இரவலர்க்கு வழங்கும் தன்மை கொண்ட கிள்ளி வளவன் உன்னை உடனே அழைத்துப் பரிசில் தருவது உறுதி. தங்கத் தாமரையினை நீ பெறுவது திண்ணம் என்று நம்பிக்கை இல்லாமல் நின்ற பாணனுக்கு நம்பிக்கை ஊட்டி அனுப்பினார் அந்தப் புலவர்.

*ஒருவருக்கு ஒருவர் சண்டை போடுதல்*

மனிதன் தோன்றிய காலத்திலிருந்தே ஒருவருக்கு ஒருவர் பகைத்துக் கொள்ளும் இயல்பு இருக்கிறது. எனவே பகைவரை அழிப்பதற்கு வருந்தத் தேவை இல்லை என்று பாடியுள்ளார் இடைக்குன்றூர் கிழார்.

*ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்*
*புதுவது அன்று இவ்வுலகத்து இயற்கை*
*இன்றின் ஊங்கோ கேளலம் திரள் அரை*
*மன்ற வேம்பின் மாச்சினை ஒண்தளிர்*
*நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து*
*செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி*
*ஒலியல் மாலையொடு பொலியச் சூடி*
*பாடு இன் தெண்கிணை கறங்க காண் தக*
*நாடுகெழு திருவின் பசும்பூண் செழியன்*
*பீடும் செம்மலும் அறியார் கூடி*
*பொருதும் என்று தன்தலை வந்த*
*புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க*
*ஒருதான் ஆகிப் பொருது களத்து அடலே!*[52]

பாண்டியன் நெடுஞ்செழியன் இளையோன் என்று போர்புரிய வந்த ஏழு மன்னர்களையும் தலையாலங்கானம் என்னும் இடத்தில் தடுத்துப் போர்புரிந்து அழித்தான் நெடுஞ்செழியன். இவ்வாறு மன்னர்கள் தமக்குள் போர்புரிந்து கொள்வது புதிய செயல் அல்ல. இயல்பானது தான். எனினும் ஒருவனே தனித்து நின்று ஏழு மன்னர்களை அழிப்பது புதுமையானது ஆகும் என்று பாண்டியன்

நெடுஞ்செழியனின் போர் ஆற்றலைப் புகழ்ந்து பாடியுள்ள இந்தப் பாடலில் போர் அறத்தை மீறிய பகை மன்னர்களின் செயல் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஒருவனை ஒருவன் எதிர்த்தல் மரபு. ஒருவனை ஏழுபேர் கூடி எதிர்த்தல் என்பது போர் அறத்திற்கு மாறானது.

பகை மன்னர்கள் ஏழு பேரையும் அழித்துவிட்டு அவன் தான் பெரிதாக எதனையும் சாதிக்காதவன் போல மிகவும் அமைதியாகக் காட்சி அளிக்கிறான் அந்தச் சிறுவன் என்று பின்வரும் பாடல் தெரிவிக்கிறது.

*கிண்கிணி களைந்த கால் ஒண்கழல் தொட்டு*
*குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண்தளிர்*
*நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து*
*குறுந்தொடி கழித்த கைச் சாபம் பற்றி*
*நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்*
*யார்கொல் ? வாழ்க அவன் கண்ணி, தார்பூண்டு*
*தாலி களைந்தன்றும் இலனே பால்விட்டு*
*அயினியும் இன்று அயின்றனனே வயின் வயின்*
*உடன்று மேல் வந்த வம்ப மள்ளரை*
*வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே அவரை*
*அழுந்தப் பற்றி அகல் விசும்பு ஆர்ப்பு எழ*
*கவிழ்ந்து நிலம் சேர அட்டதை*
*மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினும் இலனே!*[53]

இந்தப் பாண்டியன் சிறுவன். இவனது காலின் அணியப் பெற்றிருந்த கிண்கிணி இப்போதுதான் களையப் பெற்றுள்ளது. அவனது குடுமி இப்போதுதான் கத்திரிக்கப்பெற்று அதில் வேப்பம்பூவும்

உழிஞைப் பூவும் சூட்டப்பெற்றுள்ளன. தனது கையில் வளைந்த வில்லினைத் தாங்கியபடி தேரின் வளைந்த முன்பகுதியில் நிற்கும் இவனது கழுத்தில் அணிந்திருக்கும் ஐம்படைத் தாலி இன்னும் அகற்றப்படவில்லை. இன்றும் பால் கலந்த உணவினை உண்ணும் அளவிற்குச் சிறியவன். இந்த இளமை கொண்ட இவன் போர்க்களத்தில் தொடர்ந்து போரிட்டுத் தாக்க வந்த வீரர்களைப் பற்றி இழுத்து ஆகாயத்திற்குத் தூக்கிப் பின்னர் நிலத்தில் அறைந்து கொன்றான். இந்த வீரச் செயலை நினைத்து அவன் பெரிதும் மகிழ்ச்சியும் காட்டவில்லை. இதனை இயல்பான செயல் என்று கருதி நிற்கும் அளவிற்கு வீரத்தினைக் கொண்டவன் என்று இடைக்குன்றூர் கிழார் பாடியுள்ளார்.

*வீரன் தோன்றுமிடம் போர்க்களம்*

காதலும் வீரமும் இரண்டு கண்கள் தமிழர்க்கு என்றாலும் வீரத்தினைக் கொஞ்சம் உயர்வாகக் கருதியவர்கள் அவர்கள். எனவே ஒரு தாய் தன் மகன் எங்கே என்று கேட்டவளிடம் எந்த மறு சிந்தனையும் இன்றி அவன் போர்க்களத்தில் இருப்பான் என்று மிகவும் இயல்பாகக் கூறுகிறாள். இந்தப் பகுதியில் வீரனின் வீரத்துடன் அந்தத் தாயின் வீரமும் காட்டப்பட்டுள்ளது.

*சிற்றில் நல்தூண் பற்றி நின்மகன்*
*யாண்டு உளனோ என வினவுதி என்மகன்*
*யாண்டு உளன் ஆயினும் அறியேன் ஓரும்*
*புலி சேர்ந்து போகிய கல் அளை போல*
*ஈன்ற வயிறோ இதுவே*
*தோன்றுவன் மாதோ போர்க்களந்தானே!* [54]

எங்கள் வீட்டில் உள்ள தூணைப் பற்றிக் கொண்டு என்மகன் எங்கே என்று நீ கேட்கின்றாய். அவன் எங்கே இருப்பான் என்று எனக்குத் தெரியாது. புலி தங்கிச் சென்ற கல்குகை போல அவனை ஈன்ற வயிறு இதுதான். புலி போன்ற வீரத்தினைக் கொண்ட அந்த என் மகன் போர்க்களத்தில்தான் இருப்பான் என்று பெருமிதத்தோடு பாடுகிறாள் காவல் பெண்டு. தாய் நாட்டுக்காக நடைபெறும் போரில் தன்னைக் கேட்காமலேயே தன்மகன் கலந்து கொள்வான். அத்தகைய வீரம் நிறைந்தவன் அவன். எனவேதான் புலியினை உவமையாக்கிப் பாடியுள்ளாள்.

*வரையாது வழங்கும் வள்ளல்*

எனக்கு ஏதாவது கொடு என்று ஒருவன் இரக்கும் நிலைக்கு வந்து விட்டான் என்றால் அது கொடியது. அவ்வாறு ஒருவன் தன் நிலையிலிருந்து இறங்கிவந்து கேட்கும்போது கொடுக்காமல் இருப்பது அதனைவிடக் கொடியது என்று கழைதின் யானையார் பாடியுள்ளார்.

*ஈ என இரத்தல் இழிந்தன்று அதனெதிர்*
*ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று*
*கொள் எனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்*
*கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று*
*தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்*
*உண்ணார் ஆகுப நீர் வேட்டோரே*
*ஆவும் மாவும் சென்று உண கலங்கி*
*சேறொடு பட்ட சிறுமைத்து ஆயினும்*
*உண்ணீர் மருங்கின் அதர் பல ஆகும்*

*புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை*
*உள்ளிச் சென்றோர் பழியலர் அதனால்*
*புலவேன் வாழியர் ஓரி விசும்பில்*
*கருவி வானம் போல*
*வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே!* [55]

ஓரியிடம் பரிசில் பெறவேண்டிச் சென்று பரிசு பெற இயலவில்லை என்றாலும் ஓரியைப் பழிக்க மாட்டார்கள். அவர்கள் புறப்பட்டு வந்த பொழுதினையும் நிமித்தம் கூறிய பறவையையும் மட்டுமே பழிப்பர். அந்த அளவிற்குப் பலன் எதிர்பார்க்காது மழைபெய்யும் வானத்தைப் போல அளவின்றிக் கொடுப்பவன் ஓரி.

தெளிந்த நீர்ப்பரப்பினைக் கொண்டது கடல். எனினும் நீர்வேட்கை கொண்டவர்களால் அந்த நீரினை உண்ண இயலாது. அதற்கு மாறாக பசுவும் விலங்குகளும் தண்ணீர் குடித்துக் கலங்கிய சிறிதளவு நீர் கொண்டது என்றாலும் அந்த நீரினைக் குடிக்க முடியும். அதைப் போலப் பலவகையான செல்வத்தைக் கொண்டிருப்பவர்கள் ஈயும் எண்ணம் இல்லாதிருந்தால் அந்தச் செல்வத்தால் எந்தப் பயனும் இல்லை. அதற்கு மாறாக ஓரியிடம் இருக்கும் சிறிதளவு செல்வம் கூட இரப்பவர்க்குப் பயன் தரவல்லது என உணர்த்தியுள்ளார்.

*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறு*

புலவர்கள் கற்றறிந்தவர்கள். அவர்களுக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு உண்டு. எனவே பரிசில் பெறுவதற்கு உரியவன் என்று ஓர் இடம் மட்டுமே உள்ளது எனக் கருதிவிட முடியாது. அகன்ற இந்த உலகில் வள்ளல் தன்மை கொண்டவர்கள் நிறைய பேர்

இருக்கிறார்கள் என்னும் உண்மை பின்வரும் பாடல் வாயிலாக விளக்கப்பெற்றுள்ளது.

*வாயிலோயே! வாயிலோயே!*
*வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தி தாம்*
*உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து*
*வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கைப்*
*பரிசிலர்க்கு அடையா வாயிலோயே!*
*கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி*
*தன் அறியலன் கொல்? என் அறியலன் கொல்?*
*அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென*
*வறுந்தலை உலகமும் அன்றே அதனால்*
*காவினம் கலனே சுருக்கினெம் கலப்பை*
*மரம்கொல் தச்சன் கைவல் சிறாஅர்*
*மழுவுடைக் காட்டகத்து அற்றே*
*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே!* [56]

வாயிற் காவலனே, வள்ளல்களைப் போற்றிப் புகழ்ந்து பொருள் பெற்றுச் செல்லும் இயல்பு கொண்ட எம் போன்ற பரிசில் வாழ்க்கை கொண்டவர்களுக்கு வாயிற்கதவுகளை அடைக்காத வாயில் காவலனே! அதியமான் நெடுமான் அஞ்சி எனது பெருமையையும் அவனது குலப் பெருமையையும் அறியாமல் எனக்குப் பொருள் வழங்காமல் காலம் கடத்துகிறான். இந்த உலகில் அதியமானை விட அறிவும் புகழும் கொண்டவர்கள் வேறு எவரும் இல்லை என்று அவன் நினைக்கின்றான். தச்சர்களின் மக்கள் கோடரியுடன் காட்டுக்கு மரம் வெட்ட எந்தத் திசை நோக்கிச் சென்றாலும் அவர்க்கு மரம் கிடைக்கும். அதைப் போல நான் எந்தத் திசைக்குச் சென்றாலும் அங்கே இருக்கும்

வள்ளலைப் பாடிப் பொருள் பெற்றுக் கொள்வேன் என்று ஔவையார் புலவரின் அறிவுச் செருக்கினை வெளிப்படுத்தியுள்ளார்.

*சான்றோர் சான்றோருடன் சேர்வர்*

நட்பு என்பதும் உறவு என்பதும் அறிவுத் திறத்திற்கு ஏற்பவே அமையும். அறிவுடையவர்கள் அறிவுடையவர்களை நண்பர்களாகக் கொள்வார்கள். அதைப் போல் சான்றோர்கள் சான்றோர்களிடம் நட்புக் கொள்வர்.

*பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய*
*மா மலை பயந்த காமரு மணியும்*
*இடைப்படச் சேய ஆயினும் தொடை புணர்ந்து*
*அருவிலை நன்கலம் அமைக்கும் காலை*
*ஒருவழித் தோன்றியாங்கு என்றும் சான்றோர்*
*சான்றோர் பாலர் ஆப*
*சாலார் சாலார் பாலர் ஆகுபவே!* [57]

பொன்னும் பவளமும் முத்தும் மணியும் ஒரே இடத்தில் கிடைப்பவை அல்ல. பொன் மண்ணுக்குள்ளும் பவளமும் முத்தும் நீருக்குள்ளும் மணி மலையிலும் கிடைக்கும். இவ்வாறு இவை வேறு வேறான இடங்களில் கிடைத்தாலும் அழகிய மாலையில் ஒன்றாகின்றன. அதுபோலச் சான்றோர் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் சான்றோருடன் தொடர்பு கொள்வர் என்று கண்ணகனார் என்னும் புலவர் பாடியுள்ளார். இந்தப் பாடல் வாயிலாக அறிவுத் திறம் மிக்கோர் அறிவுத் திறம் மிக்கோரைச் சேர்வர் என்னும் கருத்து உணர்த்தப் பெற்றுள்ளது.

*உலகளாவிய அறப்புகழ்*

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் இறந்துபட்டான். வள்ளலாக விளங்கிய அவனை அடக்கம் செய்வதற்கு ஈமக்கலம் புனைந்தான் ஒருவன். அவனிடம் கிள்ளிவளவனது புகழ் விளங்கும்படியாகப் பாடுகிறார் ஐயூர் முடவனார்.

*கலம் செய் கோவே கலம் செய் கோவே*
*இருள் திணிந்தன்ன குரூஉத் திரள் பரூஉப் புகை*
*அகல் இரு விசும்பின் ஊன்றும் சூளை*
*நனந்தலை மூதூர்க் கலம் செய் கோவே*
*அளியை நீயே யாங்கு ஆகுவை கொல்*
*நிலவரை சூட்டிய நீள் நெடுந்தானைப்*
*புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை*
*விரிகதிர் ஞாயிறு விசும்பு இவர்ந்தன்ன*
*சேண் விளங்கு சிறப்பின் செம்பியர் மருகன்*
*கொடி நுடங்கு யானை நெடுமாவளவன்*
*தேவர் உலகம் எய்தினன் ஆதலின்*
*அன்னோன் கவிக்கும் கண்அகன் தாழி*
*வனைத்ல் வேட்டனை ஆயின் எனையதூஉம்*
*இருநிலம் திகிரியா பெருமலை*
*மண்ணா வனைதல் ஒல்லுமோ நினக்கே!*[58]

தனது வள்ளல் தன்மையினால் உலகளாவிய புகழைக் கொண்ட பெரியவன் கிள்ளிவளவன். அவனுக்கு உன்னால் எப்படி ஈமக்கலன் செய்ய முடியும். அப்படி நீ செய்ய நினைத்தால் இந்தப் பெரிய

உலகினைச் சக்கரமாகவும் மலையை மண்ணாகவும் கொண்டுதான் பெரிய பானையைச் செய்யமுடியும். எனவே உன்னால் செய்ய இயலாத ஈமக்கலனைச் செய்ய முயன்றுள்ள நீ இரங்கத் தக்கவன் என்று அந்தக் கலம் செய்பவனை என்னுவதுபோல் கிள்ளிவளவனின் ஈகைப் புகழைப் போற்றிப் பாடியுள்ளார்.

உலகம் புகழும் புகழினைக் கிள்ளிவளவன் கொண்டது போல் அதியமானும் வானளாவிய புகழ் கொண்டுள்ளான் என்று அவனது ஈமச்சடங்கின் போது ஔவையார் பாடியுள்ளார்.

*எறிபுனக் குறவன் குறையல் அன்ன*
*கரி புற விறகின் ஈம ஒள் அழல்*
*குறுகினும் குறுகுக, குறுகாது சென்று*
*விசும்புற நீளினும் நீள்க–பசுங்கதிர்த்*
*திங்கள் அன்ன வெண்குடை*
*ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே!*[59]

அதியமானின் உடல் எரியூட்டப்படுவதற்காக விறகுகள் அடுக்கப்பட்டுள்ளது. அதில் நெருப்புப் பற்றவைக்கப்பட்டு எரிகிறது. இந்த நெருப்பு எரிந்து அதியமானின் உடலை அழித்தாலும் அழிக்காவிட்டாலும் எனக்குக் கவலை இல்லை. நிலவு போன்ற தண்ணிய கொற்றக் குடையினைக் கொண்டு நல்லாட்சி புரிந்த அதியமானின் புகழ் உடம்பு சூரியனைப் போல் நிலைத்து நிற்கும் என்று பாடுகிறார். இங்கும் அதியமானின் வள்ளல் தன்மை இரங்கற்பா வடிவம் தாங்கி வந்துள்ளது.

முந்தைய பாடலில் கிள்ளிவளவனின் உடல் புதைக்கப்பட்டது. இந்தப் பாடலில் அதியமானின் உடல் எரிக்கப்பட்டது. எனவே

புதைத்தலும் எரித்தலும் தமிழர்தம் வழக்கமாக இருந்திருக்கிறது என அறிய முடிகிறது.

அதியமானின் வள்ளல்தன்மையினை நினைத்து மீண்டும் ஔவையார் பாடியுள்ளார்.

*சிறிய கள் பெறினே எமக்கு ஈயும் மன்னே*
*பெரியகள் பெறினே*
*யாம் பாட தாம் மகிழ்ந்து உண்ணும் மன்னே*
*சிறு சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே*
*பெருஞ்சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே*
*என்பொடு தடிபடு வழி எல்லாம் எமக்கு ஈயும் மன்னே*
*அம்பொடு வேல் நுழை வழி எல்லாம் தான் நிற்கும் மன்னே*
*நரந்தம் நாறும் தன் கையால்*
*புலவு நாறும் என் தலை தைவரும் மன்னே*
*அருந்தலை இரும்பாணர் அகல் மண்டைத் துளை உரீஇ*
*இரப்போர் கையுளும் போகி*
*புரப்போர் புன்கண் பாவை சோர*
*அம் சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்*
*சென்று வீழ்ந்தன்று அவன்*
*அருநிறத்து இயங்கிய வேலே*
*ஆசு ஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ*
*இனி பாடுநரும் இல்லை பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும் இல்லை*
*பனித்துறைப் பகன்றை நறைக் கொள் மாமலர்*
*சூடாது வைகியாங்கு பிறர்க்கு ஒன்று*
*வீயாது வீயும் உயிர் தவப் பலவே!*[60]

கள் கொஞ்சம் கிடைத்தால் அதை எமக்குக் கொடுத்துவிடுவான். மிகுதியான கள் கிடைத்தால் நாங்கள் குடித்துப் பாடும் போது எஞ்சிய கள்ளினை அவன் குடிப்பான். சிறிதளவு உணவு என்றாலும் பெரிதளவு உணவு என்றாலும் எல்லோருடைய கலத்திலும் பகிர்ந்து வழங்கும் இயல்பு கொண்டவன். எலும்பும் தசையுமான ஊனினை எல்லாம் நாங்கள் உண்ணும் படியாகத் தந்துவிட்டு அவன் பெரிய போர்க்களத்தில் தனித்த வீரனாக நிற்கும் இயல்பு கொண்டவன். அவனது மார்பில் தைத்த வேலானது பாணரின் கலத்தினைத் துளைத்து இரப்போரின் கையைத் துளைத்துப் பாடும் புலவரின் நாவினைத் துளைத்துவிட்டது. இனி போற்றிப் பாடும் புலவர்களும் இல்லை. அந்தப் புலவர்களுக்கு வழங்கும் வள்ளல்களும் இல்லை என்று அதியமானை விஞ்சும் அளவிற்கு வள்ளல் யாரும் இல்லை என்று வள்ளல்தன்மையினைப் போற்றிப் பாடியுள்ளார்.

இதைப்போன்ற இரங்கல் பாடல் ஒன்றினைக் குடவாயில் கீரத்தனார் ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்துபட்ட வேளையில் பாடியுள்ளார்.

பெருஞ்சாத்தனை இழந்து புலவர் வாடிக் கொண்டிருந்த வேளையில் முல்லைப் பூப் பூத்திருந்தது. அதனைக் கண்டு புலவர் வருந்திப் பாடியுள்ளார்.

*இளையோர் சூடார் வளையோர் கொய்யார்*
*நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கி*
*பாணன் சூடான் பாடினி அணியாள்*
*ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த*

*வல்வேல் சாத்தன் மாய்ந்த பின்றை*
*முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே!*[61]

இளமைத் தன்மை பொருந்திய வீரர்கள் முல்லைப் பூவே உன்னைச் சூடமாட்டார்கள். வளையல் அணிந்த பெண்களும் உன்னைத் தலையில் சூடுவதற்காகக் கொய்ய மாட்டார்கள். உன்னைப் பறித்துத் தொடுத்து, பாணன் தனது யாழினில் சூட்ட மாட்டான். பாடினியும் உன்னை அணிய மாட்டாள். ஏன் தெரியுமா? பல போர்க்களங்களில் தனது ஆண்மை வெளிப்படும்படியாகப் போர் புரிந்த சாத்தன் இறந்த பின் இங்கு எவரும் சூட மாட்டார்கள் என்று தெரிந்த பிறகும் முல்லையே நீ ஏன் பூத்தாய்? என்று தனது துன்பத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

*இயல் தொகுப்பு*

போருக்கு என்று ஓர் அறம் பண்டைக் காலத்தில் பின்பற்றப் பட்டுள்ளது. பசு,பார்ப்பனர், பெண்கள், புதல்வரைப் பெறாதவர்கள் முதலானவர்களைப் போர்க்களத்திலிருந்து போகச் செய்தபின் போர் புரிந்துள்ளனர்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் ஈரமும் அறச்செயலும் கொண்டு விளங்கியிருக்கின்றனர். வறுமை நிலை கண்டு இரங்கிப் பொருள்களைக் கொடுத்துள்ளனர். புலவர்க்கும் பாணர்க்கும் பொருள்களை வழங்கியுள்ளனர். இதன் வாயிலாக இலக்கியம், பாடல், ஆடல் முதலான கலைகளைப் போற்றியுள்ளனர்.

நோய் தீர்க்கும் மருத்துவத் தொழிலும் அறத்தொழிலாகப் போற்றப்படுட்டுள்ளது.

செல்வம் நிலையற்றது எனக் கருதி நிலைத்த புகழினைப் பெறுவதற்குப் பிறருக்கு வழங்கியிருக்கிறார்கள்.

கொடியவர்களை ஒழித்து நல்லவர்களைக் காத்தல் அறமாகக் கருதப்பட்டுள்ளது. வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு இல்லாமல் அறவழியில் நடந்துள்ளனர்.

இரப்பவர்களுக்கு நாட்டையும் ஈயும் ஈகைக் குணம் கொண்டு அந்தக் கால மன்னர்கள் விளங்கியிருக்கிறார்கள்.

யாதும் ஊரே என்னும் பொதுமை நோக்கம் கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள். நல்ல செயல் செய்ய இயலவில்லை என்றாலும் தீயவை செய்யாமல் வாழ்ந்திருக்கிறார்கள்.

இன்பமும் துன்பமும் உலகத்து இயற்கை என்று கருதி வாழ்ந்திருக்கிறார்கள். சான்றோர் சான்றோருடன் இணங்கி வாழ்ந்திருக்கிறார்கள்.

எவ்வளவு செல்வம் இருந்தாலும் உண்பது நாழி, உடுப்பவை இரண்டே என்ற தன்னிறைவு இருந்திருக்கிறது. தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் பண்பு கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள்.

விழுப்புண் படுவதை உயர்ந்த பயனாகக் கருதியிருக்கிறார்கள். போர்க்களத்தில் உயிர் துறப்பதையே போர் அறமாகக் கருதியிருக்கிறார்கள். வீரச் சாவினைப் போற்றியிருக்கிறார்கள்.

ஆண்களுக்கு இணையாகப் பெண்கள் போர்க்களம் சென்று போர்புரிய வில்லை என்றாலும் வீரத்தில் சிறந்து விளங்கியிருக்கிறார்கள். வள்ளல்கள் போற்றப்பட்டிருக்கிறார்கள். அந்த வள்ளல்கள் இறந்த போது அவர்களுக்காக வருந்திப் பாடியிருக்கிறார்கள். வீரம், ஈரம், ஈகை, புகழ் ஆகியவற்றுடன் சிறந்த போர் அறத்தினைப் பொதுமை அறமாகக் கருதியிருக்கிறார்கள்.

# சான்றெண் விளக்கம்

1. புறநானூறு : பா.9
2. மேலது : பா.20
3. மேலது : பா.31
4. மணிமேகலை : பாத்திரம் பெற்ற காதை, அடி95–96
5. புறநானூறு : பா.159
6. திருக்குறள் : பா.221
7. மேலது : பா.226
8. புறநானூறு : பா.175
9. மேலது : பா.221
10. மேலது : பா.362
11. மேலது : பா.397
12. மேலது : பா.399
13. பெரும்பாணாற்றுப்படை: அடி 29–37
14. மேலது : அடி 39–43
15. மேலது : அடி 466–479
16. மேலது : அடி 481–490
17. திருக்குறள் : பா.86
18. அகநானூறு: பா.188
19. பொருநராற்றுப்படை : அடி 216–231
20. பதிற்றுப்பத்து : பா.90
21. அகநானூறு: பா.27
22. மதுரைக்காஞ்சி : அடி 493–500

23. திருக்குறள் : பா.660
24. அகநானூறு: பா.155
25. ஐங்குறுநூறு : பா.152
26. நற்றிணை : பா.136
27. திருக்குறள் : பா.949
28. மேலது : பா.948
29. நற்றிணை : பா.243
30. புறநானூறு : பா.18
31. மேலது : பா.29
32. மேலது : பா.55
33. மேலது : பா.312
34. மேலது : பா.72
35. மேலது : பா.73
36. மேலது : பா.184
37. மேலது : பா.183
38. மேலது : பா.187
39. மேலது : பா.186
40. மேலது : பா.192
41. மேலது : பா.195
42. மேலது : பா.194
43. மேலது : பா.191
44. மேலது : பா.189
45. மேலது : பா.182
46. மேலது : பா.74
47. மேலது : பா.94
48. மேலது : பா.101
49. மேலது : பா.196

50. மேலது : பா.66
51. மேலது : பா.69
52. மேலது : பா.76
53. மேலது : பா.77
54. மேலது : பா.86
55. மேலது : பா.204
56. மேலது : பா.206
57. மேலது : பா.218
58. மேலது : பா.228
59. மேலது : பா.231
60. மேலது : பா.235
61. மேலது : பா.242

# சங்க இலக்கியத்தில் இல்லறம்

சங்க காலத்தில் தமிழர்களின் குடும்ப வாழ்வு உயர்ந்த நிலையில் இருந்தது. அவர்களது இல்லற வாழ்க்கையானது முதன்மையான இடத்தினை வகித்தது. அவர்களது வாழ்க்கையே அறவாழ்க்கையாக அமைத்துக் கொண்டனர். இல்லறத்திற்கு உயர்ந்த இடத்தினை வழங்கியிருந்த அவர்கள் துறவினையும் மதித்தனர். எனினும் திருமணம் ஆகாமலேயே துறவற நிலைக்குச் செல்வதனை அவர்கள் பெரிதாக மதிக்கவில்லை.

குடும்பம் என்பது சமூகத்தின் ஓர் அங்கம். இந்தக் குடும்பம் என்ற அமைப்பு மக்களைக் கட்டுப்படுத்தியும் நெறிப்படுத்தியும் சமூக வாழ்வுக்குத் துணைபுரிந்தது.

"குழந்தைப் பேறு மற்றும் குழந்தை வளர்ப்பை வழங்குவதற்காகவே ஏற்படுத்தப்பட்ட ஒரு வரம்பிற்கு உட்பட்ட நிரந்தரமான பாலின உறவுக் குழுவே குடும்பம்"[1] என மெக்ஐவர் குறிப்பிடுகிறார். இவரது கருத்துப்படி பாலின உறவு முதன்மைப்படுத்தப்பட்டாலும் சமூக நிலையில் குழப்பம் ஏற்படாமல் இது தடுக்கிறது என்பதனை உணர முடிகிறது.

குடும்பம் என்ற சொல்லுக்குக் கழகத் தமிழகராதி, " உறவு; ஒரு குடியில் உள்ளார்; மனைவி; வீடு; சமுசாரம்; உறவினர்; குலம்; குடி; இனத்தார்"[2] எனத் தெரிவித்துள்ளது.

குடும்பம் என்ற சொல்லுக்குத் தமிழ்– தமிழ் அகரமுதலி, " சமுசாரம், உறவினர், குலம், மனைவி"[3] ஆகிய பொருள்களைத் தந்துள்ளது. எனவே குடும்பம் என்ற சொல் இல்லறத்தினை முதன்மையாகக் கொண்டுள்ளது எனலாம். குடும்ப அமைப்பானது சிறப்பான வாழ்க்கைக்கு வழிவகுக்கின்ற காரணத்தினால் குடும்ப வாழ்க்கையானது பண்டைக்காலத்தில் செம்மையாக இருந்துள்ளது.

குடும்ப ஒழுகலாறுகளான காதல், கற்பு, கணவன்–மனைவி–மக்கள் உறவுமுறைகள், பணியாளர்கள் முதலானவை எப்படி இருந்தன என்பதனை ஆய்வதன் வாயிலாக இல்லற வாழ்வினை ஓரளவு அறியலாம்.

*காதல்*

கணவன், மனைவி என்னும் உறவின் தொடக்கமான காதலில் இருவரும் இணைந்து இரண்டறக் கலந்ததனை,

*யாயும் ஞாயும் யாராகியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர் ?*
*யானும் நீயும் எவ்வழி அறிதும் ?*
*செம்புலப் பெயல் நீர்போல*
*அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே!*[4]

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

இல்லறத்தில் காதலை எவ்வாறு மதித்துப் போற்றினர் என்பதனை, “ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்திற்குப் பின்னர் அவ்விருவம் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப் படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருள். ஆதலின் அகம் என்றனர்”[5]

எனத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் நச்சினார்க்கினியர் விளக்கம் தந்துள்ளார்.

காதல் என்பதற்கு,

“ அன்பு, அவா, ஆவல், ஒரு பாடல், கொலை, காமநோய்”[6]

மு. வரதராசனார் காதல் என்பதற்கு,

“ மக்கள் வாழ்க்கை மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவற்றின் வாழ்வு மட்டுமன்று, இவையுமாய் இவற்றிற்கு அப்பாலுமாய் உணர்ந்து, அறிந்து மனத்தால் வாழும் வாழ்க்கையுமாகும். இந்த மனம் பண்படுமிடம் காதல் வாழ்க்கை; இந்த மனம் பயன்படுமிடம் பொது வாழ்க்கை; இந்த மனம் வாழுமிடமே தனி வாழ்க்கை”[7]

எனப் பொருள விளக்கம் தருகிறார்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் காதலில் சம உரிமை உண்டு. அதனை அன்புறு காமம் (நற்றிணை 389) என நற்றிணை விளக்கம்

தருகிறது. அன்பால் உள்ளம் கலத்தலும் விருப்பத்தால் ஒன்றி வாழ்தலும் சிறப்பெனக் கருதப்பட்டது. அன்பு கலந்த ஆர்வத்துடன் கூடிய பார்வையை உடையவளாகப் பெண் இருந்ததை,

*"........................................................................அன்பு கலந்து*
*ஆர்வம் சிறந்த சாயல்*
*இரும்பல் கூந்தல், திருந்திழை ஊரே"*[8]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

'காமம் கலந்த காதல்' (அகம் 268) என்னும் பேயனாரின் தொடரில் காமம், காதல் ஆகிய இரண்டு சொற்களும் இடம்பெற்றுள்ளன.

பொருளால் வறுமை ஏற்படினும் அன்பில் பொருந்தி வாழும் வாழ்க்கையே வாழ்க்கை எனக் கொள்ளப்பட்டது. உள்ளத்தாலும் உடலாலும் ஒன்றிணைந்த வாழ்வின் அருமையினை,

*ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும் ஒன்றினார்*
*வாழ்க்கையே வாழ்க்கை*[9]

எனக் கலித்தொகைப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

*காழ்விரி கலையாரம் மீவரும் இளமுலை*
*போய்திடைப் படாமல் முயங்கிய*[10]

என்னும் பாடல் அடிகள் காதல் முயக்கத்தினை உணர்த்துகின்றன.

*பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன*
*நீடுறை மகன்றிற் புணர்ச்சி போலப்*
*பிரிவரிதாகிய தண்டாக் காமமொடு*[10] *அ*

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் தண்டாக் காமம் என்னும் நீங்காக் காமத்தினை உணர்த்துகின்றன.

சங்க இலக்கியம் காட்டும் முயக்கம் என்பது உடலின் இணைப்பை வெளிப்படையாக உணர்த்தாமல் உள்ளத்தின் இணைப்பினை உணர்த்துகின்றன எனலாம். ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் உயிர் போன்றவர்கள். அவர்களிடைத் தோன்றும் உறவும் உயிரின் ஒன்றுதலே போன்றது எனலாம்.

தொல்காப்பியர், கணவன் மனைவி ஆகிய இருவரும் குடும்பத்தில் எவ்வாறு ஒழுகவேண்டும் என்பதனை,

*கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்*
*மெல்லியற் பொறையும் நிறையும் வில்லிதின்*
*விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்*
*பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்*[11]

என்ற பொருளதிகார நூற்பாவின் வழியாக விளக்குகிறார்.

கணவன் மனைவி ஆகிய இருவருக்கும் இருக்கின்ற கடமைகளை,

*வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்*
*மனையுறை மகளிர்க் காடவர் உயிரென*
*நமக்குரைத் தோரும் தாமே* [12]

எனக் குறுந்தொகைப் பாடல் சுட்டுகிறது. இதே கருத்தினை,

*மனைக்கு விளக்காகிய வாணுதல் கணவன்*
*முனைக்கு வரம்பாகிய வென்வேல் நெடுந்தகை* [13]

என்ற புறநானூற்றுப் பாடலில் கிழவனும் கிழத்தியும் கடைப்பிடித்து வாழ்ந்த வாழ்வியல் கோட்பாட்டினை விளக்குகிறது.

தலைவன்மீது தலைவி கொண்ட காதல் அளவிடற்கரியது. உயிரினும் மேலானதாகக் காதல் கருதப்பட்டதனை

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரளவின்றே **(குறு.3)***

என்னும் குறுந்~~கொளை~~தொகைப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

*கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே **(ஐங். 184)***

என ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகளும் காதலினை உயிரினும் மேலாகத் தெரிவிக்கின்றன. பதுமனாரின் குறுந்தொகைத் தலைவன் இவ்வுலகமும் மறுவுலகமும் சேர்த்துக் கருதினாலும் அன்புத் தலைவியொடு வாழும் இன்பத்திற்கு ஈடாகாது எனத் தனது காதலை,

*விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்*
*அரிதுபெறு சிறப்பிற் புத்தேழ் நாடும்*
*இரண்டும் தூக்கிற் சீர் சாலாவே*
*பூப்போல் உண்கண் பொன்போல் மேனி*
*மாண்வரி அல்குல் குறுமகள்*
*தோள்மாறு படூஉம் வைகலோ நமக்கே!* [14]

என்ற பாடலின் வாயிலாக வெளிப்படுத்துகிறான்.

காமம் இயல்பானது, இயற்கையானது, கண்டிக்கத் தக்கதன்று அஞ்சி நடக்கத் தக்கது அன்று. இதனையே

*காமம் காமமென்ப காமம்*
*அணங்கும் பிணியும் அன்றே நுணுங்கிக்*
*கருத்தலும் தணித்தலும் இன்றே யானை*
*குளகுமென் நாள் மதம் போலப்*
*பாணியும் உடைத்தது காணுநர்ப் பெறினே* [15]

என்னும் குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது. மிளைப் பெருங் கந்தனார் இயற்றிய இந்தக் குறுந்தொகைப் பாடலில் காமம் இழிவானது அன்று என்று உணர்த்தியிருப்பதுடன் அது எத்தகையது என்பதனையும் தெளிவுபடுத்தியுள்ளார். அதிமதுரத் தழைகளைத் தின்ற யானையினது மதர்த்த நிலையினைப் போன்றது காமத்தின் நிலை என உணர்த்தியுள்ளார்.

உடலால் கூடி வாழ்வதனை விடவும் உள்ளத்தால் கூடி வாழ்வதுதான் வாழ்க்கை. அத்தகைய வாழ்க்கையே விரும்பப்பட்டது.

ஒருநாள் பிரிந்து வாழ்தல் என்பதும் நீக்க முடியாத பெருந்துன்பமாகக் கருதப்பட்டதை,

*மணங் கமழ் கானல் இயைந் தறம் கேண்மை*
*ஒருநாள் பிரியினும் உய்வரிது* [16]

என்ற உலோச்சனார் பாடல் விளக்குகிறது.

சிறு குடி ஆந்தையார் தமது பாடலில் தலைவியின்மேல் கொண்ட காதல் காரணமாகத் தலைவன் பிரிதல் அறியாதவன் என்பதனை உணர்த்தியுள்ளார்.

---------------------
*மணத்தலும் தணத்தலும் இலமே*
*பிரியின் வாழ்தல் அதனினும் இலமே* [17]

என்னும் பாடல் பிரிந்தபின் வாழ்க்கை இல்லை என்ற உண்மையையும் உணர்த்தி நிற்கிறது.

உடம்பொடு உயிர் கொண்டுள்ள தொடர்பினைப் போன்றது நட்பு; அந்த நட்பில் உயிர் வாழ்தலைப் போன்றது காதல், பிரிவு என்பது காதலைப் போன்றது என்பதனை,

*---------------யாக்கைக்கு*
*உயிரி யைந்தன்ன நட்பின் அவ்வுயிர்*
*வாழ்தல் அன்ன காதல்*
*சாதல் அன்ன பிரிவரியோளே* [18]

என்னும் அகநானூற்றுப் பாடல் தலைவியானவள் பிரிவினை இறத்தலுக்கு ஒப்பாகக் கருதுபவள் எனத் தெரிவிக்கிறது. தலைவன் தலைவியின் உள்ளப் புணர்ச்சியினைக் காட்டும் வகையில் இப்பிறப்பு ஒழிந்து மறுபிறப்பு எடுக்கும் போதும் நீயே எனக்குக் கணவனாக வேண்டும் எனத் தலைவி விரும்புவதை

*இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீரா கியரென் கணவன்*
*யானாகிய நின் நெஞ்சு நேர்பவளே* [19]

என்று அம்மூவனார் பாடல் சுட்டுகிறது.

மேலும் காதல் என்ற சொல் அன்பு, விருப்பம் என்னும் பொருள்களிலும் வழங்குகிறது. மகள் மகன் தோழி கணவன் செவிலியர் ஆகிய உறவினர்களிடையே அறியப்படும் அன்பும் காதல் என்பதாகக் குறிக்கப்படுவதனை,

*கல்கெழு குறவர் காதல் மடமகள் (நற்.333)*

*கருங்கல் எயிற்றி காதல் மகன் (புறம். 181)*

*காக்கம் வம்மோ காதலம் தோழி (புறம் 281)*

*தாம் வேண்டும் காதல் கணவர் (பரிபா. 10)*

*காதல் செவிலியர் (குறு. 229)*

என்னும் பாடல் அடிகள் வாயிலாக அறிய முடிகிறது.

தலைவனோடு அமைந்த தொடர்பு எந்நிலையாயினும் கெடாத நிலைப்பாடு உடையதெனத் தலைவி நம்புவதையே

*நிலம் புடைபெயரினும் நீர் தீப் பிறழினும்*
*இலங்கு திரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்*[20]

என்ற குறுந்தொகைப் பாடல் தெரிவிக்கிறது. எனவே இயற்கைப் பெருங்கேடுகள் நேரிடினும் நேரலாம். ஆனால் தலைவனும் தலைவியும் கொண்ட அன்பின் தன்மை மாறாது என்றும் அதுவே அனைத்தினும் மேம்பட்டது என்றும் அறிய முடிகிறது. எனவே காதல் என்பதற்கு முதன்மை கொடுத்தும் அதற்கு ஒழுக்கம் உயிர்நாடியாகச் செயல்பட்டதும் சங்க இலக்கியங்கள் காட்டும் காதல் வாழ்வாக நாம் கருதலாம்.

*கற்பு*

தமிழகத்தில் குடும்ப வாழ்க்கையில் மக்கள் பின்பற்றிவரும் ஒழுகலாறுகளுள் கற்பும் ஒன்று. கற்புத் தொடர்பான செய்திகளை இங்கே காண்போம். குடும்பத்தில் கற்பு என்னும் ஒழுக்கம் எவ்வாறு பின்பற்றப்படவேண்டும் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் விளக்கம் அளித்துள்ளன.

கற்பென்பது அகத்திணைக் குறியீடு. அதிலும் இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணைக்கே

சிறப்புரிமை உடைய சொல். தொல்காப்பியம் கற்பினை இருவகைக் கைகோள்களில் ஒன்றாகக் கருதுகிறது. (தொல்.1442,1443). மேலும் கற்புக்குப் பின்வருமாறு விளக்கமும் தருகிறது.

*கற்பெனப் படுவது கரமொடு புணரக்*
*கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே* [21]

அதாவது கொள்ளுதற்குரிய மரபினை உடைய தலைமகன் கொடுத்தற்குரிய மரபினை உடையோர் தலைமகளைக் கொடுக்க முறையோடு கொள்வது கற்பெனப்படும். கற்பு என்னும் ஒழுக்கமானது தலைவியை மணந்தபின் நிகழும் மலிவு, புலவி, ஊடல், உணர், பிரிவு என்னும் காதல் செய்திகளை உள்ளடக்கியதெனத் (தொல்.1443) விளக்கம் அளிக்கிறார்.

கற்பு என்பதற்குக் கலைக்களஞ்சியத்தில் கல்வி, தியானம், உறுதியாக இருத்தல் என்பதாகப் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது. கற்பு என்பதற்குக் கழகத் தமிழ் அகராதியில் கல்வி, கற்பனை, நீதிநெறி, மகளிர் நிறை, மதிலுள் மேடை,முல்லைக் கொடி, முறைமை, விதி, பதிவிரதா தர்மம், களவுக் கூட்டத்துத் தலைவன் தலைவியை முறைப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம், மகளிர் கற்பு [22]

என்று பொருள் கூறப்பட்டுள்ளது.

கற்பு என்னும் திண்மையைப் பெற்ற பெண்ணைக் காட்டிலும் பெருமையானதாகக் கருதப்படுவது வேறு இல்லை என்பதனை,

*பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பெனும்*
*திண்மையுண் டாகப் பெறின்* [23]

என்னும் குறளில் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். கற்பு என்பது மனம் தொடர்பானது. கற்பெனப்படுவது மறை பிறர் அறியாமை24 என்றும் சரோஜினி குறிப்பிட்டுள்ளார்.

கற்பு என்பது ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் பொதுவில் வைக்கப்பட வேண்டும். ஒருபாலர் மீது மட்டும் கற்பைத் திணிப்பது மனிதச் செயல் அன்று என்பதை,

*கற்பு நிலை என்று சொல்லவந்தார் இரு*
*கட்சிக்கும் அதைப் பொதுவில் வைப்போம்*

என்ற பாடல் வழியாகப் பாரதியாரும்,

*ஆண்எல்லாம் கற்பை விட்டுத் தவறு செய்தால்*
*அப்போது பெண்மையும் கற்பழிந்திடாதோ*

என்ற பாடலின் மூலம் பாரதிதாசனும் குறிப்பிட்டுள்ளனர். ஆகவே கற்பு மனித வாழ்க்கையில் ஆண், பெண் இருவருக்குமே இருக்கவேண்டிய ஒழுக்கம் ஆகும். அவ்வாறு கற்பொழுக்கத்தினைப் பொதுவினைக் கொண்டுவரும்போதுதான் சமநீதி, சமஉரிமை, சமூகநீதி என்பன காப்பாற்றப்படும்.

பெண்களுக்கு மட்டும் கற்பு என்பதனை நாம் முன்வைத்தல் கூடாது. ஆண்களுக்கும் அவ்வொழுக்கம் கட்டாயமாக்கப்பட வேண்டும் என்பதனை

“சமத்துவமற்ற உரிமைகளையும் சந்தர்ப்பங்களையும் வழங்குவதில் இந்து மதம் முன்னே நிற்கிறது. இந்து மதத்தில் பெண் தெய்வங்கள் எல்லோருமே கற்புக்கரசிகள்” [25]

எனக் கவிஞர் குழந்தை அவர்கள் குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் கடவுள்களில் கூடப் பெண்தெய்வங்களுக்கு மட்டும் நாம் கற்பைப் போதிப்பது தவறு என்றும் தெரிவித்துள்ளார். குடும்பத் தலைவியின் கற்பானது கடவுள் கற்பு என்னும் புனிதத்தன்மை நோக்கிப் பயணப்பட்டதை அகநானூறு அறிவிக்கிறது. கற்பொடு வாழ்ந்த பெண்கள் மனைக்கு விளக்காகவும் குடிக்குப் பெருமையாகவும் போற்றப்பட்டனர்.

*கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய*
*புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பின்*
*நன்னீராட்டி....*[26]

என்று அகநானூற்றுப் பாடல் தெரிவித்துள்ளது.

மேலும் மனைக்கு விளக்காயினாள் (ஐங்.405) மனைவி அவளின் கற்பு வாழ்க்கை தெய்வத் தன்மை பொருந்தியது என்னும் கருத்தில் கடவுள் கற்பு என்னும் தொடர் அமைந்துள்ளது.

பெண்கள் கற்புடன் ஒழுகுதலானது அவளுக்கு மட்டும் பெருமை சேர்க்காது. அவளுடைய கணவனுக்கும் பெருமை சேர்ப்பதாகிறது. எனவே தான் ஆணினுடைய பெருமையினைப் பேசும்போது இனிய பெண்ணின் பெருமைக்கு உரிய கணவன் என்னும் கருத்தினை

*மனைக்கு விளக்காய் வாணுதல் கணவன் (புறம்.314)*

*பாவை யன்ன நல்லோள் கணவன் (பதி.61)*

*சேணறு நறுநுதல் சேயிழை கணவ (பதி.65)*

*ஆன்றோள் கணவ சான்றோன் புரவல (பதி.55)*

என்னும் சங்க இலக்கிய அடிகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

நல்ல மனைவியின் பெருமைக்குக் கற்பு என்பதோடு கூடுதலாக அறம், சாயல், நாணம் ஆகியவற்றையும் பெண் பெற்றிருக்க வேண்டும் என்பதனை, ' ஆறிய கற்பின் அடங்கிய சாயல்' (பதி.16) என்னும் அடி நமக்கு உணர்த்துகிறது. மேலும் சினக்க வேண்டிய நேரத்துச் சினவாமையுடன் இருப்பதே ஆறிய கற்பாகும்.கற்பின் வன்மையால் மென்மைப் பண்பு விரவி நிற்றல் என்பதே ஆறிய கற்பு என்னும் அடிப்படைக் கருத்தாகும்.

மென்மைத் தன்மைகளின் தொகுப்பு சாயலாகும். ஆவூர் நிலக்கிழார் நாணத்தைக் கற்புக்கு இன்றியமையாததாகக் கருதவதை 'நாணது இல்லாக் கற்பின் வாணுதல்'(புறம் 196) என்ற தொடரின் வாயிலாகக் காணமுடிகிறது.

நள்ளிரவின் கண் விருந்தினர் வரினும் உபசரிப்பதே கற்புடைப் பெண்டிரின் தன்மை என்பதனை,

*அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்*
*முல்லை சான்ற கற்பின்*
*மெல்லியற் குறுமகள் உறைவின் ஊரே* [27]

என்ற பாடலில் இடைக்காடனார் குறிப்பிட்டுள்ளார்.

திருமணம் போன்ற மங்கல நிகழ்ச்சிகளுக்குக் குடும்பப் பெண்களே தலைமையேற்றனர். குழந்தைகளைப் பெற்றெடுத்த மகளிர் நால்வர் கூடி, திருமணம் நிகழ்த்தியதை,

*புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று*
*வாலிழை மகளிர் நால்வர் கூடிக்*
*கற்பினின் வழாஅ நற்பல உதவிப்*
*பெற்றோர் பெட்கும் பிணைய ஆக* [28]

என்னும் அகநூனாற்றுப் பாடல் இதனைத் தெளிவுபடுத்தியுள்ளது.

அருந்ததியினைப் போன்று கற்பினை உடையவள், கிண்கிணி அணிந்த புதல்வனுக்குத் தாய், விருந்தினரை உபசரிக்கும் தன்மையினையும் உடையவள் என்று கற்புடைய குடும்பத் தலைவியை,

*பெருஞ்சின வேந்த னருந்தொழில் தணியின்*
*விருந்து நனி பெறுதலும் உரியள் மாதோ*
*இருண்டு தோன்று விசும்பின் உயர் நிலை உலகத்து*
*அருந்ததி அனைய கற்பின்*
*குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே* [29]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் அடையாளம் காட்டுகிறது.

கற்புடைய பெண்கள் தங்கள் கணவனுடன் துயில் கொண்டு அதிகாலையில் எழுந்து தங்கள் கால்சிலம்பு ஓசை எழத் தங்கள் வீட்டுக்கடமைகளைச் செய்யும் செய்தியை,

*கள்ளோர் களிநொடை நுவல இல்லோர்*
*நயந்த காதலர் கவவுப் பிணித்துஞ்சிப்*
*புலர்ந்து விரி விடியல் எய்த விரும்பிக்*
*கண்பொர எறிக்கும் மின்னுக் கொடிபுரைய*
*ஒண்பொன் அவிரிழை தெழிப்ப இயலித்*
*திண் சுடர் நல்லில் கதவங் கலைய* [30]

என்னும் அடிகள் வாயிலாக மாங்குடி மருதனார் தெரிவிக்கின்றார்.

மேலும் அந்தணர் இல்லத்தில் கற்புடைய பெண்கள் இரவலர்களுக்கும் விருந்தினர்களுக்கும் விருந்தோம்பும் செய்தியைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார், ' சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல்' (பொரு.302)

என்ற பாடலின் மூலம் அறிவிக்கின்றார். முல்லை மாறினும் மெல்லியளாகக் கற்புடைப் பெண்கள் மதிக்கப்பட்டதனை, ' முல்லை சான்ற கற்பின் மெல்லியள்' (சிறு 30) என்று குறிப்பிடுகின்றது சிறுபாணாற்றுப்படை. குற்றம் இல்லாத கற்புக்கரசியாகிய தெய்வானையின் கணவனாகிய முருகப்பெருமான்,

*மறுவில் கற்பின் வாணுதல் கணவன்*[31]

என நக்கீரர் தம்முடைய திருமுருகாற்றுப்படையில் தெரிவித்துள்ளார்.

இதன்மூலம் ஆணின் அடையாளத் தன்மை அவனுடைய இல்லாளை அடிப்படையாகக் கொண்டமைகிறது என்ற கருத்துத் தெளிவடைகின்றது.

தொழில் காரணமாகத் தலைவன் பிரிந்து செல்கின்றான். அவன் எந்நேரத்தில் வந்தாலும் அவனை முகமலர்ச்சியோடு வரவேற்று உபசரிக்கும் குடும்பத் தலைவியின் பண்பினை, 'கடவுள் கற்பினவள் எதிர்பேணி' **(குறு252)** என்ற பாடல் காட்டுகிறது.

நீரில் வாழும் மகன்றில் பறவையானது ஒரு சிறு குறுக்கீடு நேர்ந்தாலும் வாழாது. அப்பறவை போன்ற தன்மையுடைய ஒருத்தி தன் தலைவன் பிரிந்து விட்டால் வாழ மாட்டாள் என்பதாக,

*நிலைஇய கற்பினாள் நீர் நீப்பின் வாழாதாள்*
*வடமீன்போல் தொழுதேத்தும் வயங்கிய கற்பினள்* [32]

என்னும் கலித்தொகப் பாடல் அடிகள் அமைந்துள்ளன.

சங்க இலக்கியங்களில் கற்பு என்னும் சொல் பல்வேறு பொருண்மைகளில் எடுத்தாளப் பெற்றுள்ளது. மேலும் கற்பு பெண்ணுக்கு மட்டுமே உரியது என்ற வகையில் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. இருப்பினும் மனைவி ஆனவள் குடும்ப வாழ்க்கையில் முதன்மை வாய்ந்தவளாகக் கருதப்பட்டாள்.

குடும்ப, சமூக முன்னேற்றம் என்பது பெண்ணை மையமாகக் கொண்டே நடைபெற்றது என்றால் அது மிகையில்லை. கணவன் பெற்றோர் உறவினர் ஆகிய அனைவரும் இல்லாளை மையமாகக்

கொண்டே மதிக்கப்பட்டனர். கணவன் சமூகத்தில் தலைநிமிர்ந்து நடப்பதற்கு அவனுடைய துணைவியானவள் ஒழுக்கமுடையவளாக இருக்கவேண்டும் என்பது மறைமுகச் சட்டமாக இருந்தது. எனவே பெண்ணுக்குக் கற்பு என்பது அளவுக்கு அதிகமாக வற்புறுத்தப்பட்டது. கற்பு வாழ்க்கையே நல் வாழ்க்கை என்பதையே சங்க இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

*இல்லறம்*

தமிழரின் வாழ்க்கை விளக்கமாகக் காலக் கண்ணாடியாக வரலாற்றுப் பேழையாக வைப்பு நிதியாக விளங்கும் சங்கப் பனுவல்கள் சங்க காலத் தமிழ்மக்களின் மனையற வாழ்வினை மாண்புற விளக்கி நிற்கும் பெற்றியினை உடயவை. தன்னுயிர் போல மன்னுயிரை நினைத்து மற்றவர்க்கு இயற்ற அளவு உதவுவதே அறம். திருவள்ளுவர் இல்லறம் என்பது என்ன என்பதற்கு விளக்கம் அளித்துள்ளார். மேலும் அவர், ' மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்' எனச் சுட்டுவதன் மூலம் ஒருவன் தன் மனத்தில் எள்ளளவும் குற்றம் இல்லாதவனாய் இருத்தலே அறம் என்று அறத்திற்கு அவர் தரும் விளக்கம் நோக்கத்தக்கது ஆகும்.

மேலும் பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு, அறம் என்ற சொல் தமிழ் இலக்கியத்தில்,

" ஒழுக்கம், வழக்கம், நீதி, கடமை, புண்ணியம், ஈகை, அறக்கடவுள், சமயம்"[33]

என்னும் எட்டு வகையான பொருள்களில் வழங்கப்படுவதாகக் குறிப்பிடுகிறார். மேலும் கழகத் தமிழ்கராதி இல்லறம் என்பதற்கு இல்வாழ்க்கை எனப் பொருள் தருகின்றது.

புலவர் செந்துறை முத்து அவர்கள் இல்லறம் பற்றிக் குறிப்பிடும்போது,

" இல்லறமே துறவறத்தின் வாயிலாக அமைந்துள்ளது. இல்லறம் மக்களின் அறக்கல்விக்குரிய பயிற்சிச் சாலை எனல் பொருந்தும். இல்லறம் காணாதவர் உலகின் அறம் பேணல் இயலாது என உறுதியாகக் கூறலாம்"[34] என விளக்கம் தருவது குறிப்பிடத் தக்கது ஆகும்.

மனையறம் பற்றி வள்ளுவர் குறிப்பிடுவதை இங்குக் காண்போம். மனையறம் ஒருவனால் வழுவாது ஆற்றப்படுமாயின் வானோராலும் போற்றப்படும் பெருமையினை அடைவான் என்பதை,

*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும் (குறள்50)*

எனத் திருவள்ளுவர் தெரிவித்துள்ளார்.

மேலும் வாழ்க்கைத் துணைநலம் என்னும் ஓர் அதிகாரம் வள்ளுவரால் வகுக்கப்பட்டதன் நோக்கமே மனைமாட்சி மிக்க மனையறத்தினை ஒருவன் மாண்புற நடத்தினால் மட்டுமே வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் பெற்றியினைப் பெறுவான் என்பதை உணர்த்துவதன் பொருட்டாகும்.

கணவன் மனைவி என்னும் உறவு திடீரென்று ஒருநாளில் ஏற்படுவது அன்று. அது பல பிறவிகளிலும் தொடர்ந்து வருவது என்று கருதினர். முன் பிறவிகளில் கணவன் மனைவியாக வாழ்ந்தவர்களே ஊழின் வலிமையால் மீண்டும் கூடுகின்றனர். இப்பிறவி ஒழிந்து மறுபிறவி எடுத்தபோதும் நீயே என் கணவராக இருக்கவேண்டும். உன்னைத் தவிர வேறு ஒருவனை என் மனம் நாடாது என்று வாழ்ந்த சங்க இலக்கியத் தலைவியை நாம் கண்டிருக்கிறோம்.

கற்பு நெறி மாறாமல் இல்வாழ்க்கையில் சிறந்து விளங்கும் தலைவியின் பெருமையினைத் திருவள்ளுவர்,

*தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் மழை* [35]

என்று போற்றிப் புகழ்ந்துள்ளார்.

குடும்பத்தில் கணவன் மனைவியைக் காப்பாற்றும் முறைமையினை அஃறிணை உயிர்களின் அன்பு வாழ்க்கை வழியே உணர்த்தியுள்ளதை,

*துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப் பிடியூட்டிப்*
*பின்னுண்ணும் களிறெனவும் உரைத்தனரே*
*இன்னிழல் இன்மையின் வருந்திய மடப்பிணைக்குத்*
*தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்தனரே* [36]

என்னும் கலித்தொகை அடிகள் உணர்த்துகின்றன.

மனைவி தன் கணவனையே உயிராகக் கொண்டு வாழ்ந்தாள். அவனுடைய நலனைத் தன் நலமெனக் கருதினாள். கணவன் வீடு வறுமையுற்றதாயினும் தான் பிறந்த வீட்டை எண்ணாது பெருமையோடு வாழ்ந்தாள். தன்னுடைய வீட்டுத் தோட்டத்தில் தழைகள் வீழ்ந்து அழுகி நாற்றம் எடுக்கும் நீர்நிலைகள் உண்டு. அதிலுள்ள நீரை மான்கள் கலக்கிக் குடித்து விட்ட நிலையில் எஞ்சியுள்ள நீரையே அவளும் உண்கிறாள். இருப்பினும் அந்நீரானது தன் தாய்வீட்டில் தான் உண்ட கலந்த பாலினும் சுவையாக இருக்கிறது எனக் குறிப்பிடுவதனை,

*அன்னாய் வாழி வேண் டன்னை நம் படப்பை*
*தேன்மயங்கு பாலினும் அவர் நாட்டு*
*உவலைக் கூவற் கீழ*
*மானுண் டெஞ்சிய கலுழி நீரே (ஐங்.203)*

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

தன்னை மறந்த கணவனின் குடும்பம் வறுமையுற்றது. நீரோடு கிடக்கும் எளிய கஞ்சியைப் பொழுது மாறி உண்ணும் காலத்திலும் 'அமிழ்தம் போன்ற பாற்சோற்றைப் பொற்கிண்ணத்தில் இட்டு உண்க எனச் செவிலியர் பூங்கோல் கொண்டு ஓச்சவும் பந்தலில் ஓடி மறுப்பவள்' தன் தந்தையின் பெருஞ்செல்வத்தை நினையாதிருக்கின்றாள் எனக் காணமுடிகிறது.

கணவன் சில நேரங்களில் தவறு செய்தாலும் அவனை வெறுத்தல் மனைவியின் இயல்பன்று. அன்பினால் அவனைத் திருத்த முயல்வதே பெண்ணின் கடமையாகும். அவ்வாறு கணவன்

பரத்தையின் உறவு கொண்டு வந்தபோதும் மனைவி அவனை வெறுத்து ஒதுக்கவில்லை. உழவன் வேரோடு பிடுங்கி வரப்பில் எறிந்தாலும் மீண்டும் பூக்கும் நெய்தல் பூப்போலக் கணவன் இன்னா செய்யினும் அவனை மறக்காத மனைவியைக் குறுந்தொகை (109) காட்டுகிறது.

பெண்கள் கணவனைத் தெய்வமெனக் கருதினர். அவர்களது இயல்புக்கு ஏற்பவே வாழ்க்கை நடத்தினர். இருப்பினும் தலைவனைத் திருத்தவும் செய்தனர். புலவர்கள் பெண்ணுக்கு அறிவுரை கூறுவது போல் பாடல்கள் இருப்பினும் அவை ஆண்களுக்கான அறிவுரைகளாகவே இருந்தன என்பதனை,

*தாய் உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு*
*அன்னாய் செயினும் இனிது தலையளிப்பினும்*
*நின்வரைப் பினள் என் தோழி* [37]

என்னும் நற்றிணை அடிகள் தெரிவிக்கின்றன.

பூதப்பாண்டியன் வஞ்சினம் கூறுகையில், 'பேரமர் உண்கண் இவளினும் பிரிக'(புறம் 71) என்றான். எனவே மனைவியைப் பிரிதல் பெரும்பாலும் தவறு என்று கருதிய தன்மையினைக் காணமுடிகிறது. பேகன் தனது மனைவியைத் துறந்து வாழ்ந்தபோது சான்றோர் உலகம் கொதித்தெழுந்து அவனை நல்வழிப் படுத்தியதையும் காணமுடிகிறது.

இல்லற வாழ்வின் பயனாகக் கணவனும் மனைவியும் விருந்தோம்பலையும் சுற்றம் தழுவுதலையும் வறியோர் துயர் துடைத்தலையும் தம் தலையாய கடமைகளாகக் கருதினர். இந்தக் கடமைகளை ஆற்றுவதற்குப் பொருள் இன்றியமையதது. எனவே

பொருள் ஈட்டுவதற்குக் கணவன் தன் மனைவியைப் பிரிந்து நீண்ட தூரம் சென்றான். அப்பிரிவினைத் தாங்கி யிருந்தாள் தலைவி. மனைவியைப் பிரிவது கொடுமையான ஒன்றுதான். ஆனால் நாட்டோர் வறுமையினையும் உறவினரின் துன்பத்தினையும் பகைவரின் செல்த்தினையும் கண்டு மனம் வருந்தாமல் வாழ முடிகிறது.

மனைவியைப் பிரியாது ஒரு பதியில் வாழலாம். ஆனால் பிறர் துன்பம் கண்டு துவண்டு போகும் உள்ளம் உடையார்க்கு அவ்வாறு வாழ இயலாது. பிறர் துன்பத்தினைத் துடைத்தல் கடமை என்ற உணர்வு அவர்க்குப் பிரிவுத் தீயை அளித்தது. எனவே வெளிநாடு சென்றான் என்னும் கருத்தினை அகநானூற்றின் **246**ஆம் பாடல் தெரிவிக்கின்றது.

இல்லை என்று வருவார்க்கு இல்லை என்று கூறாத மனத்தினை உடையவர் தமிழர் என்பதனை

*இல்லோர்க்கு இல்லென இவையது கரத்தல்*
*வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்*
*பொருளே காதலர் காதல்*
*அருளே காதலர் என்றி நீயே* [38]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் காட்டுகின்றன.

இல்லறத்தின் பயனைக் கூறவந்த தொல்காப்பியர்,

*காமம் சான்ற கடைக்கோட் காலை*
*ஏமம் சான்ற மக்களொடு துவன்றி*
*அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்*
*சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே* [39]

என்னும் நூற்பாவில் வாழ்க்கையின் பயன் என்னவென்றால் அது சிறந்ததைப் பெறுதல் என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆநிரைகளின் பால்வளம் பெருகவேண்டும், எருமைகள் பெருகவேண்டும், தலைவன் தன்னைவிட்டுப் பரத்தையோடு கூடாமல் தன்னிடமே கூடியிருக்கவேண்டும் என்பதாக இறைவனைத் தலைவி வேண்டுவதை,

*வாழி யாதன் வாழி யவினி*
*பால்பல ஊறுக பகடு பல சிறக்க*
*என வேட்டோளே யாயே யாமே*
*வித்திய உழவர் நெல்லொடு பெயரும்*
*பூக்கஞலூரன் நன்மனை*
*வாழ்க்கை பொலிக வென வேட்டேமே!*[40]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில் காணமுடிகிறது. எனவே தலைவியின் வேட்கையானது குடும்பம் சிறக்க வேண்டும் என்பதாகும். இதன் வாயிலாகச் சங்க கால இல்லறச் சிறப்பினை உணரலாம்.

பரத்தைமை ஒழுக்கம் கைக்கொண்டவளும் குடும்ப வாழ்க்கைக்குத் துன்பம் விளைவிக்காமல் தலைவன் ஒருவனைப் பார்த்து என்னுடன் தொடர்பில்லாமல் இருந்தாலும் நீ, உன்னுடைய மனைவியுடம் சிறக்க வாழ்ந்தால் மட்டும் போதும் என்று கூறுவதை,

*வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குரல்*
*நீள் வயல் நண்ணி இமிழும் ஊர*

*எம் இவண் நல்குடி அரிது*
*நும்மனை மடந்தையொடு தலைப் பெய்தீமே!*[41]

என்ற பாடல் அடிகள் குடும்பப் பாங்குடன் பரத்தையின் வாழ்க்கையும் எண்ணமும் இருந்ததைத் தெரிவிக்கின்றன.

தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் ஒருவன் பரத்தையருடன் சில காலம் கூடி இன்பத்தை நுகர்ந்துவிட்டு வீட்டிற்கு வருகிறான். அவ்வாறு வந்த அவன் தன் மகனை எடுத்து அணைத்துக் கொள்கிறான். அச்செயலைக் கண்ட தலைவியானவள் மேலும் அவன் மீது கோபப்படுகிறாள். அவனுடைய செயலைக் கடிந்துரைத்ததை,

------------------------

*பிறைவனப் புற்ற மாசறு திருநுதல்*
*நாறிடும் கதுப்பினெம் காதலி வேறுணர்ந்து*
*வேரூஉ மான்பிணையின் ஒரீஇ*
*யாரையோ என்று இகந்து நின் றதுவே!*[42]

என்ற நற்றிணைப் பாடலில் மதுரை ஒலைக்கடையத்தார் நல்வெள்ளையார் தெரிவித்துள்ளதை நாம் காணலாம்.

தலைவி பிறந்து வளர்ந்த இடம் செழிப்பான மனை. தலைவியின் வீட்டிற்குத் தெரியாத வண்ணம் தலைவன் அவளை மணந்து கொள்கிறான். அவளுடன் இல்லறத்திலும் ஈடுபடுகிறான். பொருள் தேடுதல் பொருட்டு அவன் பிரிந்து செல்ல நினைக்கிறான். அதனைக் கண்ட தோழி, அவனைத் தடுத்து நிறுத்தும் செயலினை,

*நோகோ யானே நெகிழ்ந்தன வளையே*
*செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை*

*விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்*
*பிண்ட நெல்லின் தாய்மனை ஒழிய............* [43]

என்னும் சாத்தந்தையாரின் நற்றிணைப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

பெண்ணுக்குக் கணவன் வீட்டில் கிடைக்கின்ற குறைந்த உணவாக இருந்தாலும் அதுவே மகிழ்ச்சி கொடுத்திருக்கிறது. இதுவே இல்லறச் சிறப்பாக விளங்கியிருக்கிறது. இத்தகைய போதுமென்ற மனம் இல்லாளுக்கு இருந்தால் மட்டுமே இல்வாழ்க்கை இன்பமுடையதாக விளங்கும். பெற்றோர் வீட்டினையும் கணவன் வீட்டினையும் ஒப்பிட்டுப் பார்க்கும் மனநிலை கொண்டவளாகப் பெண் இருந்தால் அந்த இல்லறத்தில் இன்பம் என்பது எட்டிக்காயாகத் தான் இருக்கும் எனலாம். எனவே தான் திருவள்ளுவர்,

*இல்லதுஎன் இல்லவள் மாண்பானால் உள்ளதுஎன்*
*இல்லவள மாணாக் கடை* [44]

என உணர்த்தியுள்ளார்.

குடும்பம் என்கிற அமைப்பானது வாழ்க்கையின் சிறந்த அம்சம் எனலாம். குடும்பத்தில் கணவன், மனைவி, பிள்ளைகள், உறவினர்கள் ஆகிய அனைவரும் ஒன்றுகூடி வாழ்க்கையைச் செம்மையுடன் வாழ்ந்து காட்டினர். அவரவர் பணிகளைச் செவ்வனே செய்து குடும்ப அமைப்பினை வெற்றிபெறச் செய்ததன் வாயிலாகச் சமூக அமைப்பினையும் நாடு என்னும் அமைப்பினையும் வெற்றிபெறச் செய்தனர் எனலாம்.

*மக்கட்பேறு*

கணவனும் மனைவியும் இணைந்த மனையற வாழ்க்கையில் முக்கியக் கடமைகளுள் ஒன்று நல்ல மக்கட்பேற்றினைப் பெறுதல் ஆகும். அன்றைய தமிழ்ச் சமூகத்தில் அறிவார்ந்த மக்களைப் பெறுதல் பெரும்பேறாகக் கருதப்பட்டது. எனவே அவர்கள் அறிவாண்மை மிக்க சான்றோனாகத் திகழத் தக்க நல்ல மக்களைப் பெற்றெடுத்து இன்புற்றனர். அவ்வாறு இன்புற்றிருந்த மக்களின் உணர்வுகளின் பதிவுகளைச் சங்க இலக்கியத்தில் காணலாம்.

" குடும்பத்தின் சிறப்புகளுள் ஒன்றான மக்கட்பேறு என்பது பிறக்கின்ற குழந்தையின் மேல் தாய் தந்தையருக்கான உரிமை எந்த அளவில் அறவாழ்வியலுக்கு உட்பட்டதாக இருக்கவேண்டும் என்பதனை வெளிப்படுத்துவதாகும். குழந்தைகளுக்கு அறவாழ்வின் தகுதியை உருவாக்கித் தன்னலம் கருதாது குழந்தையின் நலனைப் போற்றுவது மக்கட்பேறு" [45]

என அற இயல் எடுத்துரைக்கிறது.

மக்கட்பேறு என்பது ஒருவர் செய்யும் நல்வினை, தீவினைக்கேற்ப அமையும் என்பதனைப் பின்வரும் திருக்குறள் எடுத்தியம்புகிறது.

*தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்*
*தத்தம் வினையான் வரும்* [46]

என்னும் குறட்பா வரிகளால் பெற்றோரின் வினைப்பயன் பிள்ளைகளைச் சேரும் என்பதனைத் தெளிவுபடுத்தி நிற்கிறது.

மேலும் மனிதர் தம்முடைய குழந்தைகளைத் தமது அருமையான உடைமையாகக் கருதினர்.

*--------------------------------*
*நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்*
*இலங்கு நகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்*
*புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்தவ்வரித்*
*திதலை அல்குல் முதுபெண்டாகி*
*--------------------------------*[47]

என்ற பாடலில் நெய்யோடு வெண்கடுகு விளங்கக் கிடந்தாளாகிய மனைவி, புதல்வனை ஈன்றதனால் இளையவள், குறுமகள் என்னும் பெயர்நீங்கி முதுபெண்டு என்னும் பெயரினைப் பெற்றாள் எனக் கூறப்பட்டுள்ளது.

மகனைப் பெற்றெடுத்த மனையறப் பெண் தன்னுடைய குழந்தைக்குப் பாலூட்டி வளர்த்ததை,

*புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை*
*முலைவாய் உறுக்கும் கை* [48]

என்ற பாடல் அடிகள் காட்டுகின்றன.

குழந்தை அழுதபோது புலி வருகிறது, புலி வருகிறது எனப் புலி வருகை கூறி அச்சுறுத்தியும் வளர்த்தனர். அக்குழந்தையின் அழுகையினை நிறுத்துதற்குத் தாயானவள் இரவு நேரத்தில் வெண்ணிலாவின் வருகையினைக் காட்டியும் தன் குழந்தையின்

அழுகுரலை நிறுத்தினாள் என்பதை ‘அழக்கண்டு மறப்புலி உரைத்து மதியும் காட்டியும்’ என்னும் அடி உணர்த்துகிறது.

தன்னுடைய புதல்வனுக்குக் கிண்கிணி என்னும் அணிகலனையும் புலிப்பல்லால் ஆன தாலியையும் கட்டி மகிழ்ந்ததை

*கடவுள் சான்ற கற்பின் சேயிழை*
*மடவோன் பயந்த மணியிருள் அவ்வாய்க்*
*கிண் கிணிப் புதல்வன் பொலிக என்றேத்தி* [49]

என்றும் ‘புலிப் பல் தாலி புதல்வர்ப் புல்லி’ 50 என்ற அடியினில் குழந்தையினைப் பாசத்துடன் அரவணைத்து வளர்த்ததை அறியமுடிகிறது. இவ்வாறு வளர்க்கப்பெற்ற குழந்தை குறு குறுவென நடந்து சென்று தனது சிறுகை நீட்டி, பாத்திரத்தில் கிடந்த உணவினைத் தரையில் இட்டும் பிசைந்தும் தோண்டியும் வாயினாற் கவ்வியும் கையினால் துழாவியும் நெய் கலந்த அச்சோற்றினை உடம்பெல்லாம் சிதறியும் தன் பெற்றோரை மகிழ்ச்சியால் மயக்கியதை

*குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்*
*நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்*
*மயக்குறு மக்களை இல்லோர்க்குப்*
*பயக்குறை இல்லை தாம் வாழும் நாளே* [51]

என்னும் பாடல் அடிகள் உணர்த்தி நிற்கின்றன.

அறிவார்ந்த மக்களைப் பெறுதல் என்பதே பெறும் பேறாக வள்ளுவர் குறிக்கின்றார். அக்கருத்தையே அகநானூற்றுப் பாடலும் வலியுறுத்துவதை,

*இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமைப் பயனும் மறுவின்றி எய்துப*
*செறுநரும் விழையும் செயிர்தீர்க் காட்சி*
*சிறுவர்ப் பயந்த செம்மலோர் எல்லாம்*
*வாயே ஆகுதல் வாய்ந்தனம் தோழி* [52]

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

கணவன் மனைவியருக்கு இடையே படுத்துறங்கும் குழந்தையை மறியிடைப் படுத்த மான்பிணை போல என்று உவமைப்படுத்தியுள்ளார் பேயனார்.

தாய் அன்பின் உறைவிடமாக இருப்பினும் வீரத்தின் விளைநிலமாகவும் அவளே இருந்தாள் (புறம்80) என்பதை நாம் அறிகிறோம்.

மனைவிக்குப் பிள்ளைப் பேறு காலம் வந்துவிட்டது. அவளுக்கு உதவியாக இருக்கவேண்டும் என்பதற்காக வெளியூர் சென்றிருந்த கணவன் வீட்டிற்கு வரும் செய்தியைப் புறநானூற்றுப் பாடல் ஒன்று நமக்குப் புலப்படுத்துகிறது. ஆகவே கணவன், மனைவிக்கு மனஉறுதி தருவதையும் அவள் துன்பப்படும் காலத்தில் அவளுக்கு ஆறுதலாக இருந்ததையும் நாம் அறியலாம்.

பரத்தை ஒருத்தி தன்னுடன் கூடிய தலைவனின் மகனைப் பார்த்து அவனைத் தன் மகனாக எண்ணி மனம் உருகுவதை,

*களவு உடம்படுநரின் கவிழ்ந்து நிலம் கிளையா*
*நாணி நின்றோள் நிலைகண்டு யானும்*
*பேணினென் அல்லனோ மகிழ்ந ? வாத்து*
*அணங்கு அடுங்கடவுள் அமன்மேனாள் நின்*
*மகன் தாய் ஆதல் புரவது ஆங்கு எனவே* [53]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் வாயிலாக அறியலாம். அவள் மக்கள் பேற்றினைப் பெறாதவள் என்பதனையும் நாம் காணமுடிகிறது. கணவனாக இல்லாத தலைவனின் மகனைத் தன்மகனாக நினைக்கின்ற தன்மையினைப் பரத்தை ஒருத்தி பெற்றிருந்தாள் என்பது மக்கட்பேற்றின் சிறப்பினை நமக்கு உணர்த்துகிறது.

தலைவி தன் கணவனைப் பார்த்து எனக்குப் புதல்வன் பிறந்த பிறகுதான் இல்லிற்கு வரவேண்டும். அதுவரையில் வினைமேற் செல்வாயாக என்று கணவனைக் கேட்டுக் கொண்டாள். அதன்படியே அவள் பேச்சிற்கு இணங்கி வினையினை முடித்து, புதல்வன் பிறந்த செய்தியினைக் கேட்டு, தலைவன் இல்லிற்கு வருவதை

*அழல் அவர் வயங்கிழைப் பொலிந்த மேனி*
*நிழலினும் போகா நின் வெய்யோள் பயந்த*
*புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வா என* [54]

என்ற மாரி பொத்தியார் பாடல் அடிகளின் வாயிலாக அறியலாம். இதன்மூலம் பிள்ளை பெற்ற காலத்தில் அவளுக்குப் பணி செய்யவரும் தலைவனை நாம் காணமுடிகிறது.

மக்கட் பேறு பற்றிய சிறப்பான செய்திகள் சங்க இலக்கியம் முழுவதும் காணப்படுகிறது. பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி முதலான நூல்களில் பல அடிகளில் இந்த மக்கட் பேற்றின் பெருமை உணர்த்தப்பட்டுள்ளது.

*இல்லற நிர்வாகம்*

சங்க காலத் தமிழ் மக்கள் தங்கள் இல்லற வாழ்க்கைக்கு முதன்மை கொடுத்து வாழ்ந்து வந்தனர். குடும்பத்தில் உள்ள மனைவி மக்கள் பிள்ளைகள் பணியாள் ஆகியோர் தலைவனுக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர் என்பதனைச் சங்க இலக்கியம் தெரிவிக்கிறது.

இல்லற நிர்வாகத்தில் தலைவனுடைய பங்கு தலைவியின் பங்கு பிள்ளைகளின் பங்கு பணியாளர்களின் பங்கு ஆகியவை பற்றி அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

குடும்ப நிர்வாகம் என்பதற்கு, " குடும்பத்தின் அமைப்பின் அடிப்படையில் குடும்பம் தந்தை உரிமைக் குடும்பம் என்றும் தாய் உரிமைக் குடும்பம் என்று இரு வகைகளாகப் பிரிக்கலாம். தந்தை உரிமைக் குடும்பத்தில் குடும்பத் தலைவன் எல்லா அதிகாரங்களையும் கொண்டிருக்கிறான். அவனே குடும்பத்தின் நிர்வாகத்தினையும் நடத்துகிறான். குடும்பத்தில் உள்ளவர்கள் அவனுக்கு அடங்கி நடக்கின்றனர். குடும்பத்தின் முக்கியமான சடங்குகளை அவனே முன்னின்று நடத்துகிறான்"[55] என்பது சமூகவியல் அறிஞரின் கருத்தாகும்.

மேலும் கழகத் தமிழகராதி குடும்ப நிர்வாகம் என்பதற்குப் "பொறுப்பு, பராமரிப்பு, மேற்பார்வை நடப்பிக்கை, பொருள் கொள்ளும் முறை, முடி, உறுதி, நிலைமை" முதலான விளக்கங்களை அளித்துள்ளது.

ஒரு குடும்பத்தில் தாயின் கடமை பிள்ளையைப் பெற்றெடுப்பது. தந்தையின் கடமை மக்களைச் சான்றோன் ஆக்குவது. கொல்லனின் கடமை வேல் வடித்துக் கொடுப்பது. வேந்தனின் கடமை அவனுக்குப் போர்க்களத்தில் முதன்மை வழங்குவது என இவர்களின் கடமைகளைப் புறநானூற்றில் பொன்முடியார் தெரிவித்துள்ளார். இது குடும்ப நிர்வாகத்தில் ஒவ்வொருவரின் கடமைகளையும் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

குடும்ப நிர்வாகத்திற்கு அடிப்படை இனிமையான சொற்களைப் பேசுவது. இனிமையான சொற்களைப் பேசும் நிர்வாகியால் எந்தப் பணியையும் யாரிடமும் பெறமுடியும். பெண் இல்லத்தரசியாக இருந்து நிர்வகிக்கும்போது இனிமையான சொற்கள் துணைபுரிகின்றன.

*அல்லவை தேய அறம் பெருகும் நல்லவை*
*நாடி இனிய சொலின்*[56]

என்னும் குறட்பா இனிய சொல்லினால் அறம் பெருகும் என்று பொதுப்படையாகச் சொல்லியிருந்தாலும் அது இல்லறத்தைக் குறித்து வந்துள்ளது எனலாம்.

குடும்பத்தில் உள்ள தாய், தந்தை, தமையன் முதலான யாருக்கும் தெரியாத வகையில் ஒருவனுடன் தொடர்பு கொள்கிறாள். அந்தச்செய்தி அவர்களுக்குத் தெரியவருகிறது. தன்மகளைத் தன்

இல்லத்திலேயே அடைத்து வைக்கின்றனர் என்பதனை,

*வெறுத்த ஏஎர் வேய்புரை பணைத்தோள்*
*நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு*
*இவளும் இனையள் ஆயின் தந்தை*
*அருங்கடிக் காவலர் சேர்பதன் ஒன்றிக்*
*கங்குல் வருதலும் உரியை பைம்புதல்* [57]

என்னும் அகநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

ஒரு தலைவன் தன் குடும்பத்தில் உள்ளவர்கள் அனைவரையும் விட்டு, பொருள் தேடுவதற்காகச் சென்று வருகிறான். குடும்ப நிர்வாகத்தைத் தன் மனைவியிடம் ஒப்படைக்கிறான். வெளியூர்க்கண் தலைவன் தன் குடும்ப நிர்வாகத்தைப் பற்றி நினைப்பதை,

---------------------------

*உள்ளிளேன் அல்லனோ யானே உள்ளிய*
*வினைமுடித் தன்ன இனியோள்*
*மனைமாண் சுடரொடு படர்பொழுது எனவே* [58]

என்னும் நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கிறது.

பொய்கை உள்ள இடத்திற்குத் தாயும் மகளும் மலர் பறிக்கச் சென்றனர். மலர்களைப் பறித்த களைப்பால் முதலில் மகள் உறங்குகின்றாள. பிறகு அன்னை உறங்குகின்றாள். தன் கணவன் இல்லாத போது பாதுகாப்பிற்காகத் தலைவியே பொறுப்பேற்றுத் தனது மகளைப் பாதுகாத்து வந்தாள் என்பதனை,

*மலர்ந்த பொய்கைப் பைக்குற்று அழுக்க*
*அயர்ந்த ஆயம் கண்இனிது படீஇயர்*
*அன்னையும் சிறிது தணிந்து உயிரினள் இன்நீர்த்*
*தடங்கடல் வாயில் உண்டு சில்நீர் என*
*மயிலடி இலைய மாக்குரல் நொச்சி*
*மனைநடு மௌவலொடு ஊழ் முகை அவிழ*
*கார் எதிர்ந்தன்றால் காலை காதலர்*
*தவச் சேய் நாட்டர் ஆயினும் மிகப்பேர்*
*அன்பினர் வாழி தோழி– நன்புகழ்*
*உலப்பு இன்று பெறினும் தவிரலர்*
*கேட்டிசின் அல்லனோ விசும்பின் தகவே ?*59

என்னும் நற்றிணைப் பாடல் வாயிலாக அறிய முடிகிறது.

இம்மையில் ஒருவற்குச் சிறந்தது புகழ், இல்லறம், இன்ப வாழ்க்கை. மறுமைக்கு இன்பம் தருவது கொடை. இப்படிப்பட்ட கூறுகள் குடும்பத் தலைவனுக்கு இருந்தால் தான் குடும்ப நிர்வாகம் சிறப்பாக இருக்கும் என்பதனை,

*இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்*
*அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வு ஈன்ம்*
*------------------------------* 60

எனச் சுட்டுகிறது நற்றிணை.

குடும்ப வாழ்க்கையிலிருந்து ஒரு தலைவன் வீட்டில் உள்ள அனைவரையும் பிரிந்து சென்று அங்குள்ள பரத்தையருடன் கூடி மகிழ்ந்து மீண்டும் தன் வீட்டிற்குத் திரும்புகிறான். தன் கணவன்

பார்த்ததைப் பார்த்து மனைவி கண் கலங்குகிறாள் என்பதனை,

*குரும்பை மணிப்பூண் பெருஞ் செங் கிண்கிணிப்*
*பாலார் துவர் வாய் பைம்பூண் புதல்வன்*
*மாலைக் கட்டில் மார்பு ஊர்பஉ இழிய*
*அவ்வெயி றொழுகிய அவ்வாய் மாண் நகைச்*
*செயர்தீர் கொள்கைநம் உயிர் வெங் காதலி*
*------------------------------*[61]

என்னும் நற்றிணைப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு தலைவன் வீட்டை விட்டுப் பிரிந்து குடும்ப நிர்வாகம் செய்யாமல் இருந்ததனையும் காணமுடிகிறது.

தாயை விட்டு மகள் வேறொருவனுடன் சென்று விடுகிறாள். அதனை அறிந்த தாய் எனக்கு இருந்தது ஒரே மகள். வேறு மக்கள் எனக்கு இல்லை. அவளை விட்டுப் பிரிந்து நானும் என் குடும்பத்தில் உள்ளவர்களும் எவ்வாறு ஆற்றியிருப்போம் என்பதனை,

*ஒரு மகள் உடையேன் மன்னே அவளும்*
*செருமிகு மொய்ம்பின் கூர்வேல் காளையொடு*
*பெருமலை அருஞ்சுரம் நெருநல் சென்றனள்*
*இனியே தாங்கு நின் அவலம் என்றீர் அது மற்று*
*யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடையீரே!*
*உள்ளின் உள்ளம் வேமே ஒண்கண்*
*மணிவாழ் பாவை நடை கற்றன்ன என்*
*அணி இயல் குறுமகள் ஆடிய*
*மணி ஏர் நொச்சியும் தெற்றியும் கண்டே*[62]

என்னும் நற்றிணைப் பாடல் வாயிலாக உடன்போக்குச் சென்ற தலைவியினை நினைந்து வருந்திய தாயின் நிலைமையினைக் காணமுடிகிறது. இந்தப் பாடல் வாயிலாகத் தாய் தன் நிர்வாகத்தினைச் செய்யமுடியாமல் தவிப்பெய்திப் புலம்பிய தன்மையினைக் காணமுடிகிறது.

ஒரு வீட்டில் தன்மகள் தவறு செய்துவிட்டாள். அதை அறிந்த அன்னையானவள் குடும்பச் சுமையினைத் தான் ஏற்றுக் கொண்டு தன் மகளை அடிக்கும் காட்சியை,

*சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி*
*மூக்கின் உச்சி சுட்டுவிரல் சேர்த்தி*
*மறுகில் பெண்டி அம்பல் தூற்ற*
*சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப* [63]

என்னும் பாடல் அடிகள் வாயிலாகக் குடும்பத் தலைவனுக்கு உள்ள பொறுப்பினைத் தலைவி எடுத்துக் கொண்டு தன் மகளைக் கண்டித்த தன்மையைக் காணமுடிகிறது.

இவ்வளவு நேரமாகியும் ஏன் வீட்டிற்கு வரவில்லை என்று மனைவி, தன் தலைவனைக் கேட்கிறாள். ஆனால் தலைவனோ பரத்தையுடன் கூடி மகிழ்ந்து மீண்டு வருகிறான். ஆனால் தன் மனத்தில் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசுகிறான். நான் நம் குடும்ப நிர்வாகம் நன்றாக இருக்க இறைவனிடன் வேண்டுதற்குச் சென்றிருந்தேன் என்று கூறுவதனை,

*ஈன்றும் கடைஇய மென்தோளாய் கேட்டினையாயின்*
*உடனுறை வாழ்க்கைக்கு உதவி உறையும் கடவுள்கண்*
*தங்கினேன்* [64]

என்னும் கலித்தொகை அடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு குடும்பத்தில் கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துக் குடும்ப நிர்வாகத்தினைப் பொறுப்பேற்று நடத்தினர் என்பதனை அறியலாம்.

*குடும்பம் – கணவன்*

சங்க இலக்கியத்தில் மனைவியுடன் கணவன் ஒற்றுமையாக வாழ்ந்து வந்த தன்மையினைக் காணமுடிகிறது. அவர்கள் தங்கள் கடமைகளை உணர்ந்திருந்தனர். சங்க இலக்கியம் காட்டும் குடும்பத்தில் கணவன் எவ்வாறு தனது கடமைகளை ஆற்றினான் என்பதனைக் காண்போம்.

கழகத் தமிழ் அகராதி கணவன் என்பதற்கு, கொழுநன் எனப் பொருள் விளக்கம் தருகிறது. [65]

குடும்பத் தலைவன் என்ற வகையில் அவனுக்கு இருக்கும் கடமைகள் பல. நல்ல கணவனாக மனைவியைப் பேணுதல், மக்களைச் சான்றோராக்குதல், பொருள் தேடி உற்றார் உறவினரை அன்புடன் பாதுகாத்தல், வயதான தம் பெற்றோரைப் போற்றுதல் ஆகியவை கணவனின் கடமைகள் ஆகும்.

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றி நின்ற துணை* [66]

என்ற குறட்பாவின் வாயிலாகக் கணவனின் கடமைகளைத் தெரிவித்துள்ளார்.

இல்லறத்தில் சிறப்புடன் வாழும் தலைவன் பிற அறநிலைகளில் நிற்பவர்க்கும் நன்மை பயக்கும் வழிகளில் உறுதியான உதவியாளன் ஆவான்.

பிற மூன்று அறநிலைகளாவன: கல்வி நிலை, மனைத்தவ நிலை, துறவு நிலை. இவற்றை வடநூலார் பிரம்மச்சரியம் வானப் பிரஸ்தம், சந்நியாசம் என்பர். இவை போன்ற செயற்பாடுகளில் தலைவன் ஈடுபட்டு, தன்னுடைய குடும்ப வாழ்க்கையைக் கடக்கவேண்டும் என்பதைத் திருக்குறள் இல்லறவியல் என்ற அதிகாரத்தில் எடுத்து விளக்குகிறது.

கணவன் எவ்வாறு அழைக்கப்படுகிறான் என்பதற்கு, "தலைவி, மனைவி, இல்லாள் என்னும் பெயர்கள் இல்லறத்தில் பெண்ணியம் பெற்றுள்ள உயர்வினையும் மதிப்பினையும் எடுத்துக்காட்டுவன வாகும். கணவனை மனைவன் என்றோ இல்லான் என்றோ அழைக்கும் மரபு இல்லை"67 என்று விளக்கும் தந்துள்ளார் சி. இலக்குவனார். எனவே குடும்ப வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் ஆண்மகன் தலைவன் என்றே அழைக்கப் படுகிறான்.

*செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ!* [68]

என்னும் புறநானூற்றுத் தொடரில் கணவன் என்னும் சொல் அண்மை விளியாகிக் கணவ என வந்துள்ளதனைக் காணமுடிகிறது.

ஆண்மகனை வெற்றி வேலினைக் கைக்கொண்டவனாகவும் வீரத்தை உடையவனாகவும் ஒளி பொருந்திய குளிர்ந்த கண்களைக் கொண்ட கற்புக்கரசியின் கணவன் என்றும் புறநானூற்றுப் பாடல் தெரிவிப்பதை,

*மனைக்கு விளக்காகிய வாணுதல் கணவன்* [69]

என்னும் அடிகள் வாயிலாகக் காணலாம்.

தலைவன் ஒருவன் வினை மேற்கொள்ளச் சென்றுவிடுகிறான். சென்ற இடத்தில் அவனுக்கு வீட்டு நினைவு வந்து விடுகிறது. கொடிய பாலைவனத்தில் இருக்கும் போது வீட்டு நினைவு வந்ததனால் தொடர்ந்து பொருள் தேடச் செல்வதா அல்லது தனது மனைவியைக் காண்பதற்காக வீட்டிற்குச் செல்வதா? ஏதேனும் ஒரு முடிவினை எடுக்குமாறு தனது நெஞ்சிடம் அவனே கேட்கிறான். இந்தப் பொருண்மையினைப் பின்வரும் நற்றிணைப் பாடல்

*பசியட முடங்கிய பைங்கட் செந்நாய்*
*மாயா வேட்டம் போகிய கணவன்*
*பொய்யா மரபின் பிணவு நினைந்து இரங்கும்*
*விருந்தின் வெண்காட்டு வருந்துதும் யாமே!* [70]

எனத் தெரிவிக்கிறது. இதிலிருந்து பொருள் தேடச் சென்ற இடத்திலும் இல்லத்து நினைவு கணவனை வாட்டியதைக் காணமுடிகிறது.

தலைவன் தலைவியைவிட்டுப் பிரிந்து சென்றிருந்த வேளையில் தலைவி இல்லக் கடமைகளைக் குறைவில்லாமல் நிகழ்த்தினாள் என்பதனை,

*கணவன் உவப்பப் புதல்வர்ப் பயந்து*
*பணைத்து ஏந்து இளமுலை அமுதம் ஊறப்*
*புலவுப் புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு*
*வளமனை மகளிர் குளிர் அயர* [71]

என்னும் மதுரைக் காஞ்சி அடிகள் காட்டுகின்றன.

ஆண்மகன், தலைவியை மணம் முடிக்க மடல் ஏறினான். பின்னர் பெண்வீட்டார் தலைவியைத் திருமணம் செய்து கொடுக்க இசைவு தெரித்ததால் திருமணம் புரிந்து கொண்டான். அவ்வாறு திருமணம் செய்தவன் மனைவியுடன் அத்தெரு வழியாக மீண்டும் தலைவியின் வீட்டுக்குச் சென்று வருகிறான். இதன் மூலம் தலைவன், கணவன் என்ற உயர்நிலையினைப் பெற்றுச் செம்மாந்து செல்வதனை,

*அமிழ்து பொதி அஞ்ச வந்த*
*வார்ந்திலங்கு வை எயிற்றுச் சின்மொழி அரிவையைப்*
*பெறுகதில் அம்ம யானே! பெற்றாங்கு*
*அறிகதில் அம்ம இவ்வூரே மறுகில்*
*நல்லோள் கணவன் இவனெனப்*
*பல்லோர் கூற யாம் நாணுகம் சிறிதே* [72]

என்னும் தொல்கபிலர் இயற்றிய குறுந்தொகைப் பாடல் தெரிவிக்கிறது.

தலைவன் பரத்தையிடம் இன்பத்தை நுகர்ந்து விட்டுத் தன் வீட்டிற்கு வருகிறான். தன் கணவனை மனைவி முகம் சுழிக்காமல் ஏற்றுக் கொள்கிறாள். இதற்குக் காரணம் கணவன் எவ்வளவு தவறுகள் செய்தாலும் அதனைச் சகித்துக் கொள்ளும் தன்மை மனைவிக்கு

இருந்தது என்பதனைக் குறுந்தொகை (49) எடுத்துரைக்கிறது.

மேலும் கணவன் எப்படி அழைக்கப்பெற்றான் என்பதனையும் அவனது இல்லறக் கடமைகள் என்னென்ன என்பதனையும் அவனுடைய செயல் எவ்வாறு இருந்தது என்பதனையும்

*அறம் பாடின்றே ஆயிழை கணவ (புறம். 34)*

*கணவன் ஓம்பும் கானலஞ் சேர்ப்பன் (அகம். 160)*

*ஒருங்கீர் ஓதிக் கொடுங்குழைக் கணவ (பதி.4)*

முதலான பாடல் அடிகள் கணவனின் பெருமைகளைத் தெரிவிக்கின்றன. ஆயிழை கணவ முதலான தொடர்கள் வாயிலாக மனைவியால் கணவனும் கணவனால் மனைவியும் அறியப் பட்ட தன்மையினையும் காணமுடிகிறது.

சங்க காலத் தலை மக்கள் மனைவி மக்களுடனும் குடும்ப உறுப்பினருடனும் வாழ்ந்து காட்டினர். கடமைகளையும் பொறுப்புகளையும் ஒழுங்கான முறையில் நடத்தினர். குறிப்பாகக் கணவனுக்கு மனைவியும் மனைவிக்குக் கணவனும் பொறுப்புணர்ந்து கட்டுப் பட்டு வாழ்ந்தனர். கணவன் தனது குடும்பப் பொறுப்பில் எள்ளளவும் குறைவில்லாமல் வாழ்க்கை நடத்தி, குடும்பத்திற்குத் துணை நின்றான் என்பதைச் சங்க இலக்கியம் தெரிவிக்கிறது.

சங்க கால மக்கள் உயர்ந்த கொள்கையுடன் இல்வாழ்க்கையில் ஈடுபட்டனர். கணவனுக்கு மனைவி கட்டுப் பட்டவளாக இல்லத்தின் தலைவியாக விளங்கினாள். சிறு ஊடல் வந்தாலும் அவ்வூடல் நீடித்து நிற்பதில்லை. அது போன்ற தன்மையினையும் உயர்ந்த பண்பினையும் கொண்டவர்கள் சங்க கால மக்கள். சங்க காலத் தலைவி விட்டுக் கொடுக்கும் பண்பு கொண்டிருந்தாலும் அடிமையாக நடந்து கொள்ளவில்லை என்பதனையும் காணமுடிகிறது. கணவன் தவறு செய்த வேளைகளில் அவனை நல்வழிப் படுத்தியிருக்கிறாள். மக்களைப் பெற்றெடுத்துக் குடும்பம் வளர்ச்சி அடைய உதவியிருக்கிறாள். சமூகத்தில் பிற குடும்ப உறுப்பினர்களுடன் பாசத்துடனும் மகிழ்ச்சியுடனும் பழகினாள். குடும்பத்தில் ஏற்படும் சிக்கல்களை அமைதியாக எதிர்கொண்டு அந்தச் சிக்கல்களுக்குத் தலைவனுடன் இணைந்து தீர்வு கண்டிருக்கிறாள். தன் குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களுக்கும் தன்னை மணம் முடித்த மணாளனுக்கும் கட்டுப்பட்டுத் தமது இல்லற வாழ்வில் இன்புற்றுத் திளைத்தாள் என்பதனைக் காணமுடிகிறது. இவ்வாறு குடும்பத்தில் இருந்த மனைவியின் பண்புகள் பணிகள் முதலானவற்றைக் காண்போம்.

சமூகத்தில் மனைவியின் பங்கினைப் பற்றி சமூகவியல் அறிஞரான மெக் ஐவர், “தாயாட்சிக் குடும்பத்தில் பெண் தலைமையில் அதிகாரம் செய்யப்படுகிறது. ஆண் அவளுக்கு அடி பணிந்திருந்திருக்கிறான். அவள் சொத்தின் உரிமைதாரர் ஆகிறாள். மேலும் குடும்பத்தை நிர்வகிக்கிறாள்.’ என்கிறார். பசோபென் என்னும் அறிஞர், ‘பழங்காலத்தில் மனிதன் குழப்பமான நிலையில் வாழ்ந்தான். மேலும் அப்போது குடும்பம், தாயாட்சிக் குடும்பமாக இருந்தது’ என்கிறார்.

மோர்கன் அவர்கள், 'குடும்பம் குழப்ப நிலையிலிருந்து பல கட்டங்களாக விருத்தியடைந்து மேன்மையான ஒரு துணைக் குடும்பமாக உயர்ந்துள்ளது' என்று கூறியுள்ளார். தாயாட்சிக் குடும்பம் வளர்ச்சியின் ஒரு நிலையாகும்'' 73 என அறிய முடிகிறது.

எனவே சமூகத்தில் ஆண்கள் தலைமைத் தன்மை பெறுவதற்கு முன்னர் அவர்களது மனைவியர் தமது குடும்ப வாழ்க்கையினை முன்னின்று நடத்துபவர்களாக இருந்தனர் என்பது தெளிவாகிறது.

இல்லறத்தில் மனைவியின் பங்கு எவ்வாறு இருந்தது என்பதனை,

*ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்*
*தாமே செல்லும் தாயரும் உளரே* [74]

என்னும் தொல்காப்பிய நூற்பா வாயிலாக அறிய முடிகிறது. உடன் போக்குச் சென்ற மகளின் பாதுகாப்பினைக் கருத்திற்கொண்டு அந்தத் தாய் நிலையிலிருந்த மனைவி சென்றுள்ளாள் எனலாம். பேரூரின் தெருவிலும் செல்வதற்கு அரிய பாலை வழியிலும் உடன் போக்கில் சென்ற தலைவியை மீட்கத் தாமே சென்ற தாயரும் இருந்துள்ளனர் என்பதனையும் அறியமுடிகிறது. குடும்பவாழ்வில் கணவனுக்கு இணையாக மனைவியானவள் கடமைகளை மேற்கொண்டாள் என்பதனைத் தெளிவாக உணரமுடிகிறது.

பெண்கள் இல்லற வாழ்வில் ஈடுபட்டுக் குடும்பத்தை எவ்வாறு வழிநடத்திச் செல்லவேண்டும் என்பதனையும் மற்றவர்க்கு அவள் எடுத்துக்காட்டாக இருக்கவேண்டும் என்பதனையும் பாரதியார்,

*வாழ்க மனைவியாங் கவிதைத் தலைவி*
*தினமும் இவ்வுலகில் சிறியே நிகழும்*
*பலபல பொருளிலாப் பாழ்படு செய்தியை*
*வாழ்க்கைப் பாலையில்  வளர்பல முட்கள் போல்*
*பேதை உலகைப் பேதமைப்படுத்தும்*
*வெறுங்கதைத்திரளை வெள்ளறிவுடைய*
*மாயா சக்தியின் மகளே*
*மனைக்கண் வாழ்வினை வகுப்பாய்* [75]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இல்லறத்தைக் கணவன் எவ்வாறு வழிநடத்த வேண்டும் எனக் குறிப்பிட்ட வள்ளுவர் வாழ்க்கைத் துணைநலம் என்னும் அதிகாரத்தினையும் படைத்துள்ளார்.

*மனைத்தக்க மாண்புடையள் ஆகித் தற்கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை*[76]

என்ற குறளில் இல்லத்திற்குரிய உயர்ந்த பண்புடையவளாய்க் கணவனது வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்து வாழ்கின்றவள் இல்வாழ்க்கைக்குச் சிறந்த துணையாவாள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

தலைவி தனக்குத் திருமணம் நடந்த பின்பு தனது இல்லற வாழ்விலே ஈடுபடுகின்றாள். அவள் மனைவி என்னும் பெயரையும் பொறுப்பையும் பெறுகிறாள். அவள் வீட்டில் சமையல் செய்து தனது கணவனுக்குப் பரிமாறுவதை,

*துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்*
*தகரம் நாறும் தண்ணறுங் கதுப்பிற்*
*புதுமண மகடூஉ அயினிய கடி நகர்*
*பல்கோட் தடுப்பிற் பாலுலை இரீஇ* [77]

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

மலர்கள் நெருங்கிய மயிர்ச்சாந்து மணக்கின்ற தண்ணிய நறிய கூந்தலுடைய மணமகள் புதுமனையில் பல புடைகளுடைய அடுக்களையில் பால் உலை வைத்துச் சமைத்துத் தன்கணவனுக்கு அளித்தாள் என்ற செய்தி கூறப்படுகிறது.

மனையறத்தில் ஈடுபட்ட பின்னர் தன் கணவனைச் சுவையுணவின் வகையால் மகிழ்விக்கும் கடமைகொண்டு வாழ்ந்தாள். சுவை மிக்க உணவினைச் சமைத்துத் தன் கணவனை உண்ணச் செய்வதிலும் கணவன் அதனை உண்டு மகிழ்வதைக் கண்டு தான் உவத்தலிலும் மனைவி மகிழ்ச்சி கொண்டிருந்தாள் என்பன அறியப்படுகின்றன.

மனைவி அன்போடு புளிக்குழம்பு தயாரித்துக் கணவனுக்கு உணவளித்ததை,

*முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்*
*கழுவுறு கலிங்கம் கழாஅத் துடீஇக்*
*குவளை உண்கண் குய்ப்புகை கமழத்*
*தான் துழன்று அட்ட தீம்புளிப்பாகர்*

*இனிதெனக் கணவன் உண்டலின்*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே* [78]

என்னும் குறுந்தொகைப் பாடல் தெரிவிக்கின்றது.

அடுக்களையில் அலுவல் மிகுதியால் நழுவிய தனது ஆடையினைத் தயிர் பிசைந்த கையினால் விரைந்து இறுக உடுத்திக் கொண்டு தாழிப்பின் நறும்புகை தன்கண்ணில் படிந்து மணம் கமழ நன்றாகத் துழாவிச் சமைத்த புளிக்குழம்பினைத் தன் கணவன் மிகவும் சுவை உடையது என்று விரும்பு உண்பதைக் கண்டு மனைவி மகிழ்ச்சி அடைந்தாள். இதன் வாயிலாகக் கணவனின் மகிழ்ச்சியையே தனது மகிழ்ச்சியாக மனைவி கொண்டிருந்தமை புலப்படுகிறது.

மனையற மனைவி ஒருத்தி தன் இல்லத்திற்கு இரவுக் காலத்தே வந்த விருந்தினர்க்குச் சமைக்கும் பொழுது அதில் நெய் விட்டுச் சமைத்துக் கொழுவிய தசையை உடைய இறைச்சியினைச் சமைத்ததை,
'எல்லி வந்த நல்லிசை விருந்துழந்து அட்ட' என்னும் நற்றிணையின் நாற்பத்தொன்றாம் பாடல் அடி தெரிவித்துள்ளது. மேலும்

*---- இல்லுறை நல்விருந்து அயர்தல்*
*ஒல்லுவதும் பெறுநீ நல்குவதல் பெறினே* [79]

என்னும் அகநானூற்று அடிகள் தம் இல்லத்திற்கு வந்த விருந்தினர்களை நன்முறையில் உபசரித்தாள் என்பதனைத் தெரிவிக்கின்றன.

இல்லத்திற்குப் பெருமை சேர்ப்பதில் மனைவியின் கடமைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. குடும்பம் சிறப்புற்று விளங்க வேண்டும் என்று எண்ணிய மனைவி மாலைக்காலத்திலே மனைக்கு மாட்சி தரும் விளக்கினை ஏற்றி வைத்தாள் என்பதனை,

---------------------------

*சுரன் முதல் வந்த உரன் மாய் மாலை*
*உள்ளினென் அல்லனோ யானே உள்ளிய*
*வினை முடித்தன்ன இனியோள்*
*மனைமாண் சுடரொடு படர்பொழுது எனவே* [80]

என்னும் நற்றிணை அடிகள் உணர்த்துகின்றன.

கணவன் வினைமேற்சென்று மீண்டு வருகிறான். மனைவி தன் வீட்டில் விளக்கேற்றி விட்டு, தன் கணவனை வரவேற்று மகிழ்கிறாள். கண்ணாடியின் முன்னால் நின்று தன்னை ஒப்பனை செய்துகொள்கிறாள் என்னும் செய்திகளைப் பரிபாடல் காட்டுகிறது.

*மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமும்*
*தேசும் ஒளியும் திகழ நோக்கி*

என்னும் அடிகளும்

*நிழல் காண் மண்டிலம் நோக்கி*
*அழல் புனை அவிர் இழை திருத்துவாள் குறிப்பும்* [81]

என்னும் அடிகளும் பெண்கள் ஒப்பனை செய்து கொள்ளும் தன்மையைக் காட்டுகின்றன.

ஒப்பனை செய்து கொள்ளும் மனைவி தன் கூந்தலில் நெய் தடவிச் சீவிப் பின்னிக் கொள்வதையும் கூந்தலில் சாந்தினைப் பூசிக் கொள்வதையும் கூந்தலில் மலர் சூடிக் கொள்வதனையும் பழக்கமாகக் கொண்டிருந்தாள் என்பதனை,

*நெய்யிடை நீனிற மணிஒளி விட்டன்ன*

என்னும் பரிபாடலின் இருபத்தோராம் பாடலிலும்

*ஐவகைக் கார்கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும்*

என்னும் பரிபாடலின் பதினைந்தாம் பாடலிலும்

*கண்ணேர் இதழ தண்ணறுங் குவளைக்*
*குறுந்தொடர் அடைச்சிய நறும்பல் கூழை*

என்னும் அகநானூற்று முந்நூற்று ஐம்பத்தெட்டாம் பாடலிலும் காணலாம்.

ஐந்து வகையான பின்னல்களைப் பெண்கள் தங்கள் கூந்தலில் பின்னினார்கள். அக்காலத்திலேயே இல்லத்தரசிகள் கத்திரிக்கோல் வைத்துத் தமது கூந்தலைக் கத்திரித்து அழகுபடுத்திக் கொண்டனர் என்பதும் அறியப்படுகிறது.

மனைவி தனது கணவனையே கண்கண்ட தெய்வமாக வணங்கினாள். அதனால் அவனும் மனைவிக்குப் பிழைபுரியாது நல்ல நெறியில் வாழ்ந்து வந்தான். கணவனுக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்த மனைவி தாய்மைப் பண்பிலும் பொறுமை நலத்திலும் சிறப்புற்று விளங்கியதை,

*யாயாகியனே மாஅ யோளே*
*மடைமாண் செப்பிற் தமிய வைகிய*
*பெய்யாப் பூவின் மெய்சாயினளே*
*பாசடை நிவந்த கணைக் கால் நெய்தல்*
*இனமீன் இருங்கழி ஓதை மல்குதொறும்*
*கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்*
*தண்ணந் துறைவன் கொடுமை*
*நம்முன் நாணிக் கரப்பாடும்மே* [82]

என்னும் குறுந்தொகைப் பாடலில் கயமனார் தெரிவித்துள்ளார்.

கணவனும் மனைவியும் செல்வம் இழந்து வறியவராகி நிற்கின்றனர். உணவுக்கும் பஞ்சமாக இருக்கின்ற வேளையில் தலைவியின் தந்தை மகளின் வறுமையினை உணர்ந்து பொருள் அனுப்பி வைக்கிறார். தலைவி அதை ஏற்க மறுத்துத் திருப்பி அனுப்பியதை,

*கொண்ட கொழுநன் குடி வறன் உற்றெனக்*
*கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்*
*ஒழுகுநீர் நுணங்கு அறல் போலப்*
*பொழுது மறுத்து உண்ணும் சிறுமதுகையளே* [83]

என்னும் நற்றிணைப் பாடல் தெரிவிக்கின்றது. இதன் மூலம் மனைவியானவள் கணவன் வீட்டு வறுமையை ஏற்று வாழ்ந்துள்ளாள் என்பதனையும் கணவன் உழைப்பில் வாழவே விரும்பியிருக்கிறாள் என்பதனையும் அறிய முடிகிறது. மனைவி பொருள் மீது பேராசை வைக்காமல் வாழ்ந்துள்ளாள் என்பதனையும் இந்தப் பாடல் உணர்த்தி நிற்கிறது.

*மக்கள்*

இல்லற வாழ்க்கையில் கணவனும் மனைவியும் ஈடுபட்டு, காதல் கற்பு போன்ற ஒழுக்கங்களை மேற்கொண்டு மக்கட் பேற்றினைப் பெறுகின்றனர். மக்களைப் பெற்றெடுத்ததன் மூலம் அவர்கள் தாய் தந்தையர் எனப் பெருமை பெற்றனர். பெற்றோருக்கும் குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களுக்கும் எவ்வாறு பேரும் புகழும் கிடைத்தன என்பதனைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

குழந்தைகள் சமூகத்தில் எத்தகைய இடத்தினைப் பெற்றிருந்தனர் என்பதனையும் அவர்களின் கடமைகளைப் பற்றியும் காண்போம்.

மக்கள் பெருக்கம் சமூகத்திற்கு ஒரு காரணியாகும். முந்தைய காலத்தினைக் காணும் போது தற்போது ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் தொகை அதிகரித்துக் கொண்டே வருகிறது. கிராமங்களில் உள்ள மக்கள் நகரங்களை நோக்கிச் செல்கிறார்கள். அதனால் நகரத்தில் வசிக்கப் போதிய இடம் இல்லாமையால் நெருக்கடி ஏற்படுகிறது. கிராமங்களில் விவசாயத் தொழில் பாதிப்படைகிறது. கூட்டுக் குடும்பம் தனிக்குடும்பம் ஆகிறது என்பன போன்ற கருத்துகளைச் சமூகவியலார் தெரிவித்திருந்தாலும் மக்கட்செல்வத்தினைச் சிறந்த செல்வமாக

அனைவரும் கருதுகின்றனர். அளவுக்கு அதிகமான குழந்தைப் பேற்றினை மட்டுமே தடுக்க நினைக்கின்றோமே அல்லாமல் குழந்தைப் பேற்றினையே தடுக்க நினைப்பதில்லை.

மனிதர்கள் தங்கள் குழந்தைகளைத் தங்கள் உடைமை என்று கருதினர். மக்கட்செல்வத்தின் சிறப்பினைத் திருக்குறள்,

*பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை அறிவறிந்த*
*மக்கட் பேறு அல்லபிற* [84]

என்று சிறப்பிக்கிறது.

"நாடு மக்களால் உருவானது. மக்களே நாட்டின் செல்வம். மக்களின்றேல் நாடு ஏது. மக்களின் சிறப்பே நாட்டின் சிறப்பு"85

என்று சி. இலக்குவனார் விளக்கமளித்துள்ளார். தாய் தன் மகனைப் பெற்றெடுத்து ஆளாக்கி அவளுடைய மடப்பத்தினைக் கண்டு நற்றாயும் செவிலித்தாயும் மகிழ்கின்றனர். அவளுக்குத் திருமணம் செய்து வைத்து அவள் கணவனோடு மகிழ்ந்து வாழ்வதைக் காண அவர்கள் விரும்பினர். ஆனால் தலைவியோ தனது காதல் தலைவனுடன் உடன்போக்காகச் சென்றுவிட்டாள். பல்வேறு விழாக்கள் நடைபெறும் தங்கள் இல்லத்தில் மகளின் திருமண விழாவினை நடத்திட இயலவில்லையே என்று ஏங்கும் தாயை,

*என்மகள் பெருமடம் யான் பாராட்டத்*
*தாய் தன் செம்மல் கண்டு கடன் இறுப்ப*

*முழவு முகம் புலரா விழவுடை வியன் நகர்*
*மணன் இடையாக் கொள்ளான்* [86]

என்னும் அகநானூற்றுப் பாடல் காட்டுகிறது.

உடன் போக்கில் சென்ற மகளைத் தாய் தேடிச் செல்வதைப் பாலைக்கலி உணர்த்துகிறது.

*எறித்தரு கதிர் தாங்கி ஏந்திய குடை நீழல்*
*உறி தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்*
*நெறிப்படச் சுவல் அசைஇ வேறு ஒரா நெஞ்சத்து*
*குறிப்பு ஏவல் செயல்மாலைக் கொளை நடை அந்தணீர்*
*வெவ்விடைச் செலல் மாலை ஒழுக்கத்தீர் இவ்விடை*
*என்மகள் ஒருத்தியும் பிறர் மகன் ஒருவனும்*
*தம்முள்ளே புணர்ந்ததாம் அறி புணர்ச்சியர்*
*அன்னார் இருவரைக் காணீரோ பெரும!*
*காணேம் அல்லேம் கண்டனம் கடத்திடை*
*ஆண் எழில் அண்ணலோடு அருஞ்சுரம் முன்னிய*
*மாண்இழை மடவரல் தாயர் நீர்* [87]

என்னும் அடிகளில் மகளைத் தேடிச்சென்ற நற்றாயும் செவிலித்தாயும் பார்ப்பனர்களிடம் அவர்களைப் பற்றிக் கேட்டதையும் அவர்கள் பதில் கூறியதையும் காணமுடிகிறது.

பரந்த பெருஞ்சிறப்பினை உடைய தன் தந்தையின் பெயரை உடைய மகன் புன்முறுவலுடன் இனிய தேர் உருட்டி வீதியில் விளையாடுவதைக் கண்டு பெற்றோர்கள் மகிழ்ந்தனர். அவ்வாறு

மகிழும் பெற்றோரைப் பின்வரும் ஐங்குறுநூற்றுப் பாடலில் காணமுடிகிறது.

*புணர்ந்த காதலியின் புதல்வன் தலையும்*
*அமர்ந்த உள்ளம் பெரிது ஆகின்றே*
*அகன்பெருஞ் சிறப்பின் தந்தை பெயரன்*
*முறுவலின் இன்னகை பயிற்றி*
*சிறுதேர் உருட்டும் தளர்நடை கண்டே!*[88]

என்னும் பாடலில் தனது மகனைத் தனது தந்தையின் பெயரன் என்றும் சிறப்பித்திருப்பதனைக் காணமுடிகிறது. எனவே மக்கட் செல்வம் என்பது வழி வழியாகத் தோன்றிச் சிறப்பினைப் பெறுவது என அறியலாம்.

தமிழ்க்குடியில் பிறந்த மகன் கிண்கிணி என்று சொல்லப்பட்ட அணியினை அணிந்துகொண்டு சிவந்த வாயினையும் உடையவனாகத் தோற்றம் அளித்ததை நற்றிணைப் பாடல் காட்டுகிறது.

இளம் பருவத்துக் குழந்தை தன் தந்தைக்கு வான்சோறு கொண்டு சென்ற செய்தியை,

*அல்லி உணவின் மனைவியொடு இனிய*
*புல்லென் தலையால் வளங்கெழு திருநகர்*
*வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்*
*முனித்தலைப் புதல்வர் தந்தை*
*தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னை*[89]

என்ற புறநானூற்று அடிகள் உணர்த்துகின்றன.

உறவு முறை என்பது தனது இல்லத்திலுள்ள உறுப்பினர்களான தாத்தா, பாட்டி, அப்பா, அம்மா, அண்ணன், அண்ணி, அக்கா, தம்பி, தங்கை, மாமா, மாமி, மருமகன், மருமகள், பெரியப்பா, பெரியம்மா, சித்தப்பா, சித்தி, மைத்துனர், மைத்துனி ஆகியோரைக் குறிக்கும்.

“உறவு முறை என்பது நெருங்கிய அல்லது அந்நிய குருதி அல்லது திருமண அடிப்படையில் ஏற்படுத்தப்பட்ட உறவே ஆகும். குருதி அல்லது திருமணப் பிணைப்பினால் ஒரு சமூகமாக மக்களைப் பிணைப்பதை உறவு முறை என்கிறோம். மானிட வியல் அகராதிப் படி உறவுமுறை அமைப்பு, மரபணுக்களின் பிணைப்பின் அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டுச் சமுதாயத்தால் அங்கீகரிக்கப்பட்ட தொடர்புகளை உள்ளடக்கியதாகும்.”90 எனச் சமூகவியலார் விளக்கம் தருகின்றனர்.

“ உறவு என்பது ஒருவனுடைய தேவையை அடிப்படையாகவைத்தே இன்று நடைபெறுகிறது. தன் தேவையை விடப் பிறரது தேவைக்கு உதவுவதே உறவின் பணி என்ற காலம் தமிழகத்தில் இருந்தது. இருவரது தேவைகளுக்காக உறவு நடைபெற்று வந்த காலம் ஒன்று உண்டு. அறிவின் முதிர்ச்சியால் ஏற்பட்ட விபத்து இன்றைய உறவின்கண் காணப்படும் செயல்கள் என்றால் மிகையாகா”[91] என்று உறவு முறை பற்றித் தெரிவித்துள்ள கருத்துத் தற்காலத்தினை எடுத்தியம்புகிறது.

“திருமணம்–குடும்பம்–உறவின் அடிப்படை–தாய் தலைமை உறவு, பொதுமைப்படுத்தப்பட்ட உறவு, வயது வழி உறவு, பால்வழி உறவு, பதவி வழி உறவு, மனப்பக்குவ வழி, உறவு, பொருளாதார நிலை

வழி உறவு'' [92] என்று ஆய்வாளர் ரேவதி குறிப்பிட்டுள்ளார்.

மேலும் கழகத் தமிழ் அகராதி உறவு என்பதற்கு, " சம்பந்தம், ஐக்கியம், உற்ற சமயம், நண்பு, சினேகம், சுற்றம், சேர்க்கை''93 என்ற விளக்கத்தினைத் தெரிவிக்கிறது. மேலும் உறவுமுறை பற்றி, "உறவுமுறை இரத்தக் கலப்பாலும் பெற்றோர்கள் வழியாலும் மண உறவினாலும் ஒரே குழுவினர் ஒரே இடத்தில் வாழும் தன்மையாலும் அமைகிறது. இவ்வுறவு முறை சாதி என்னும் அடிப்படையில் அமையும்''94 என்று பார்வதி என்பார் தெரிவித்துள்ளார்.

முனைவர் ம. நடராசன்,

" கணவன் – மனைவி உறவு
மாமியார் – மருமகள் உறவு
மாமனார் – மருமகள் உறவு
மகன் – தந்தை உறவு
மகள் – தந்தை உறவு
மகன் – தாய் உறவு
மகள் – தாய் உறவு'' [95]

எனப் பல்வேறு வகையான உறவு முறையினைக் குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியத்தின் உறவின் பொருள் வேறுபட்ட விரிந்த நிலையில் அமைந்துள்ளது. எனினும் ஒருவர் மற்றவரை உடன் உறைந்தோ அன்றி அவ்வப்போது பார்த்தோ உரையாடியும் பழகவும் கூடிய வாய்ப்பினால் பெறும் உயிர்ப்பையும் உணர்வையும் உறவு எனச் சுட்டலாம்.

திருமணம், குடும்பம், சமுதாயம் முதலானவை உறவு முறைக்கு அடிப்படையாக அமைகின்றன. இந்தக் கூறுகள் இல்லை என்றால் உறவு முறை ஏற்படுவதற்கு வாய்ப்பு இருக்காது.

*------------------ நளிகடல்*
*திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்*
*பல்மீன் கூட்டம் என் ஐயர் காட்டிய*
*எந்தையும் செல்லுமார் இரவே அந்தில்*
*அணங்குடைப் பனித்துறை கைத் தொழுது ஏத்தி*
*யாயும் ஆயமொடு அயரும் நீயும்*[96]

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகளில் தமையனைக் குறிக்கும் ஐயர் என்னும் சொல்லும் தந்தையைக் குறிக்கும் எந்தை என்னும் சொல்லும் தாயைக்குறிக்கும் யாய் என்னும் சொல்லும் இடம்பெற்றிருப்பதனைக் காணமுடிகிறது.

*நாடுபல இறந்த நன்னராட்டிக்கு*
*ஆயமும் அணி இழந்து அழுங்கின்ற, தாயும்*
*இன்தோள் தாராய் இறீஇயர் என் உயிர் என*
*கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்*
*தடவுநிலை நொச்சி வரிநிழல் இசைஇத்*
*தாழி குவளை வாடு மலர் சூட்டித்*
*தருமணல் கிடந்த பாவை என்*
*அருமை மகளே என முயங்கினாள் அழுமே* [97]

இந்தப் பாடலில் தன்னைப் பிரிந்து சென்ற மகளை நினைத்துத் தாய் அழுகிறாள். இதில் தாய்க்கும் மகளுக்கும் உள்ள உறவு நிலையும்

பாசப் பிணைப்பும் விளக்கம் பெறுகின்றன. தலைவிக்கும் செவிலித்தாய்க்கும் உள்ள உறவு முறையினை,

கணவன், மனைவி, குழந்தை என்னும் முக்கோண உறவுக்குட்பட்ட தொடர்பினை,

*நெருநல் ஆடினை புனலே இன்றுவந்து*
*ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்*
*மாசில் கற்பின் புதல்வன் தாய் என*
*மாயப் பொய் மொழி* [98]

என்னும் அகநானூற்று அடிகளில் மகனை முதன்மைப்படுத்தி, புதல்வன் தாய் என்று தலைவன் கூறுவதனைக் காணமுடிகிறது.

*அணிநடை எருமை ஆடிய அள்ளல்*
*மண்ணிற நெய்தல் ஆம்பலொடு கலிக்கும்*
*கழனி ஊரன் மகள் இவள்*
*பழன ஊரன் பாயல் இன்துணையே* [99]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில் 'ஊரன் மகள்' என மருதநிலத் தலைவன் மகள் குறிக்கப்படுவதைக் காணமுடிகிறது. மகன், தாய் உறவு முறையினைக் குறிக்கும் வகையில் பின்வரும் ஐங்குறுநூற்றுப் பாடல் அமைந்துள்ளதனைக் காணமுடிகிறது.

*மகிழ்நன் மாண்குணம் வண்டு கொண்டன கொல்*
*வண்டின் மாண்குணம் மகிழ்நன் கொண்டான் கொல்*
*அன்னது ஆகலும் அறியாள்*
*எம்மொடு புலக்கும் அவன் புதல்வன் தாயே* [100]

என்னும் பாடல் அடிகளில் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைச் சுட்டிக் காட்டும் இடத்தில் புதல்வன் தாய் என்னும் தொடர் அமைந்து உறவுமுறையினைக் குறிப்பதனைக் காணமுடிகிறது.

*குடும்பம் – பணியாள்*

குடும்ப வாழ்க்கையினைச் சீரும் சிறப்பாக நடத்துதற்குக் கணவன் மனைவி குழந்தை என்னும் நிலையினைத் தாண்டி, பணியாள் என்னும் நிலையும் காணப்படுகிறது. சங்க காலத் தமிழர் குடும்பங்களில் பணியாளராகச் செயல்பட்டவர்கள் தோழி, பாங்கன், தேர்ப்பாகன், செவிலித்தாய் முதலானோர் ஆவர்.

தோழி தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் நின்று எவ்வாறு பணிகளைச் செய்து முடிக்கின்றாள் என்பதனைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. பகல்குறி இரவுக்குறி ஆகிய இருவகைக் குறியினும் வந்து கூடித் தலைமகன் செல்வதை ஊரினர் கண்டால் அலர் எழக் கூடும் என்ற அச்சத்தால் தலைவனுக்கும் தலைவிக்கும் மிக விரைவில் மணம் முடித்து இல்லறம் நடத்துவதற்குத் துணைபுரிவது தோழியின் செயலாகக் காணப்படுகிறது.

குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களின் ஊடலினைத் தீர்த்து வைக்கத் தோழி மட்டும் அல்லாமல் செவிலித்தாய், அறிவர், கூத்தர் முதலானோரும் துணைபுரிந்துள்ளனர்.

*கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள*
*நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்*
*செவிலிக்கு உரிய ஆகும் என்ப*[101]

என்னும் நூற்பாவில் செவிலித்தாயின் துணைமை குறிப்பிடப்பட்டுள்ளது.

*சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய* [102]

மேலே செவிலித்தாய்க்கு உரியவையாகக் குறிப்பிட்டுள்ள செயல்பாடுகள் அறிவர்க்கும் பொருந்துவன என்று தொல்காப்பியர் தெரிவித்துள்ளார்.

*தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்*
*பல்லாற்றானும் ஊடலின் தணித்தலும்*
*உறுதி காட்டலும் அறிவு மெய்ந் நிறுத்தலும்*
*ஏதுவின் உணர்த்தலும் துணிவு காட்டலும்*
*அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன* [103]

என்னும் நூற்பாவின் வாயிலாகக் கூத்தர் செய்யும் உதவிகள் உரைக்கப்பட்டுள்ளன.

தலைவி பெருத்த வேதனையோடு இருக்கிறாள். அவளது வேதனையினைக் கண்ட தோழி அத்துன்பத்திற்கான காரணத்தினைக் கேட்கிறாள். அவளிடம் தலைவி தனது துன்பத்தினை எடுத்துரைக்கிறாள். புகுந்த வீட்டுப் பெருமையை விட்டுக் கொடுக்காமல் பெருமையோடு பேசிய தலைவி, க ணவனைப் பற்றி எண்ணியவளாய்க் கண்கலங்குகிறாள். பொருள் தேடுவதற்காகச் சென்ற தலைவனை எண்ணி வருந்துகிறாள். அதைக்கேட்ட தோழியின்

நிலையும் பரிதாபத்திற்கு உரியதாகி விடுகிறது. ஏனெனில் தலைவியின் துன்பங்கள் அனைத்திலும் பங்கேற்பவள் தோழி ஆவாள்.

*வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்*
*மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்என*
*நமக்கு உரைத்தோரும் தாமே*
*அழாஅல் தோழி அழுங்குவ செலவே* [104]

என்னும் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் குறுந்தொகைப் பாடலில் தலைவிக்குத் தோழி செய்யும் உதவியாக ஆறுதல் மொழி கூறல் காட்டப்பட்டுள்ளது.

நற்றாய் ஈன்ற குழந்தையினைச் செவிலித்தாய் தனது குழந்தையாகப் பாவித்து அக்குழந்தையை நீராட்டி அலங்கரித்துத் தனக்கு அருகில் தூங்கச் செய்வதை நற்றிணை காட்டுகிறது.

*நெடுநா ஒண்மணி கடிமனை இரட்ட*
*புரைநிலை போகிய விரவு மணற்பந்தர்*
*பெரும்பாண் காவல் பூண்டென ஒரு சார்*
*திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப*
*வெறியுற விரிந்த அறுவை மெல்லணை*
*புனிறு நாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச*
*ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்*
*பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கை*
*சீர்கெழு மடந்தை ஈரிமை பொருந்த*
*நள்ளென் கங்குல் கள்வன் போல*

*அகன்துறை ஊரனும் வந்தனன்*
*சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே* [105]

என்னும் பாடலில் இதனைக் காணமுடிகிறது.

இல்வாழ்க்கையினை இல்லறம் என்று சிறப்பித்துச் சங்க இலக்கியங்கள் நமக்குத் தெரிவிக்கின்றன. இல்வாழ்க்கையின் தொடக்கமாகக் காதல், காமம் போன்றவற்றைக் காணமுடிகிறது. இல்வாழ்க்கையின் உச்சமாகக் கற்பு வாழ்க்கை அமைகிறது. கற்பு நெறிப் பட்ட இல்வாழ்க்கையினை அறப்பண்புக்கு ஏற்றாற்போல் சங்க கால மக்கள் நடத்தியுள்ளனர் என்பதனை இந்த இயலில் பார்த்தோம்.

காதல், காமம், கற்பு ஆகியவற்றிற்குச் சங்க இலக்கியம் தரும் பொருண்மை விளக்கம் தரப்பட்டுள்ளது. இல்லறம், இல்லறத்தின் கண் தோன்றும் மக்கள்பேறு, இல்லற நிர்வாகம், இல்லறத்தில் கணவன், இல்லறத்தில் மனைவி, இல்லறத்தில் உறவு, இல்லறத்தில் பணியாள் முதாலன தலைப்புகளில் சங்க இலக்கியம் தெரிவிக்கும் கருத்துகள் உணர்த்தப்படுகின்றன.

சங்க இலக்கிய அகப்பாடல்கள் காதலைப் பாடுவன போல் தோன்றினாலும் இல்லறக் கருத்துகளை மிகுதியாகக் கொண்டுள்ளன எனலாம். அந்த வகையில் தலைவன் தலைவி ஆகியோரிடையே காணப்படும் காதலும் அவர்களின் ஊடலும் வெளிப்படையாகப் பேசப்படுகின்றன.

பரத்தையர் தொடர்பால் கணவன்–மனைவி ஆகியோரிடையே ஏற்படும் பிணக்குகள் அந்தப் பிணக்குகளைத் தீர்ப்பதற்கு அவர்கள்

மேற்கொள்ளும் முயற்சிகள் முதலானவையும் இல்லறத்தில் காட்டப்பட்டுள்ளன.

அக வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட காதல், கற்பு நிகழ்ச்சிகளைச் சங்க இலக்கியத்தினைப் போல் தெள்ளத் தெளிவாகக் காட்டும் நூல் வேறு எதுவும் இல்லை என்று தெளியலாம்.

## சான்றெண் விளக்கம்

1. சமூகவியல் (மேல்நிலை முதலாமாண்டு), ப. 23
2. கழகத் தமிழ் அகராதி, ப. 352
3. அறஇயல் (மேல்நிலை முதலாமாண்டு), ப.66
4. குறுந்தொகை, பா.40
5. தொல், பொருள், நச்சினார்க்கினியர் உரை, ப.87
6. கழகத் தமிழ் அகராதி, ப.320
7. மு. வ., திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.15
8. அகநானூறு, பா.94
9. கலித்தொகை, பா.17
10. குறுந்தொகை, பா.57
11. தொல்காப்பியம், நூ. 1098
12. குறுந்தொகை, பா.135
13. புறநானூறு, பா.314
14. குறுந்தொகை, பா.
15. மேலது, பா. 136
16. நற்றிணை, பா. 203
17. குறுந்தொகை, பா. 168
18. அகநானூறு, பா.339
19. குறுந்தொகை, பா. 49
20. மேலது, பா. 373
21. தொல்காப்பியம், நூ. 1088
22. கழகத் தமிழ் அகராதி, ப.311
23. திருக்குறள், பா. 54

26. அகநானூறு, பா. 184
27. நற்றிணை, பா.143
28. அகநானூறு, பா. 86
29. ஐங்குறுநூறு, பா. 442
30. மதுரைக் காஞ்சி, அ. 662-664
31. திருமுருகாற்றுப்படை, அ.6
32. கலித்தொகை, பா. 1
33. க. த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப,24
34. புலவர் செந்துறை முத்து, தமிழர் வாழ்வியல், ப.6
35. திருக்குறள், பா.55
36. கலித்தொகை, பா.44
37. நற்றிணை, பா.397
38. அகநானூறு, பா. 52
39. தொல்காப்பியம், நூ. 1138
40. ஐங்குறுநூறு, பா.3
41. மேலது, பா. 86
42. நற்றிணை, பா.250
43. மேலது, பா.26
44. திருக்குறள், பா. 44
45. அற இயல், தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், ப.69
46. திருக்குறள், பா.63
47. நற்றிணை, பா.370
48. மேலது, பா. 355
49. மேலது, பா.
50. குறுந்தொகை, பா.161
51. புறநானூறு, பா.188
52. அகநானூறு, பா. 66
53. மேலது, பா.116

54. புறநானூறு, பா. 222
55. சமூகவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், ப.125
56. திருக்குறள், பா.96
57. அகநானூறு, பா.2
58. நற்றிணை, பா.3
59. மேலது, பா.115
60. மேலது, பா. 214
61. மேலது, பா.269
62. மேலது, பா.184
63. மேலது, பா.149
64. கலித்தொகை, பா.
65. கழகத் தமிழ் அகராதி, ப.162
66. திருக்குறள், 41
67. சி. இலக்குவனார், தமிழர் வாழ்வியல்– சங்க காலம், ப.52
68. புறநானூறு, பா.3
69. மேலது, பா.314
70. நற்றிணை, பா. 103
71. மதுரைக்காஞ்சி, அ. 600–603
72. குறுந்தொகை, பா. 14
73. சமூகவியல்,தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், ப.116
74. தொல்காப்பியம், நூ.983
75. பாரதியார் கவிதைகள்,
76. திருக்குறள், பா.51
77. அகநானூறு, பா.141
78. குறுந்தொகை, பா.167
79. அகநானூறு, பா. 30
80. நற்றிணை, பா.3
81. பரிபாடல், பா.12:20–21, 21: 24–25

82. குறுந்தொகை, பா. 9

83. நற்றிணை, பா.

84. திருக்குறள், பா.61

85. சி. இலக்குவனார், தமிழர் வாழ்வியல்–சங்க காலம், ப.24

86. அகநானூறு, பா.397

87. கலித்தொகை, பா. 8

88. ஐங்குறுநூறு, பா.403

89. புறநானூறு, பா. 250

90. சமூகவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், ப.124

91. கு. வை. இளங்கோவன், உறவு ஓர் ஆய்வு, ப.39

92. ச. ரேவதி, சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள், சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்ட ஆய்வேடு.

93. கழகத் தமிழ் அகராதி, ப.185

94. முனைவர் பார்வதி, படகர் வாழ்வியல், ப.75

95. முனைவர் ம. நடராசன், மகளிர் முன்னேற்றத்தில் இதழ்களின் பங்கு, ப.114

96. அகநானூறு, பா.240

97. மேலது, பா.165

98. மேலது, பா. 6

99. ஐங்குறுநூறு, பா.96

100. மேலது. பா. 90

101. தொல்காப்பியம், நூ. 1099

102. மேலது, நூ. 1100

103. மேலது, நூ. 1114

104. குறுந்தொகை, பா.135

105. நற்றிணை, பா.40

# முடிவுரை

சங்க காலம் தமிழ் மக்களின் வாழ்வியலில் அறத்திற்கு முதன்மை கொடுத்த காலம். அக வாழ்விலும் புறவாழ்விலும் மக்கள் அறநெறிக்குட்பட்டு வாழ்ந்தனர். காதல் வாழ்விலும் கற்பு வாழ்விலும் சில வரையறைகளைத் தங்களுக்குள்ளாகவே வகுத்துக் கொண்டு வாழ்ந்துவந்தவர்கள் தமிழ் மக்கள். காதலுக்கும் கற்புக்கும் இடைப்பட்ட காலத்தில் இணையரில் எந்த மாற்றமும் ஏற்படாமல் காதலின் புனிதத்தைப் போற்றி வளர்த்தனர்.

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப' என்று தொல்காப்பியம் கற்புக்கான தேவையினைக் குறிப்பிட்டிருந்தாலும் மக்கள் தங்கள் அகவாழ்வில் முதன்மையானதாகக் கருதப்படும் களவு வாழ்க்கை வாயிலாகவே தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் செப்பம் உடையவர்களாக விளங்கினர்.

பண்பாடு என்னும் மரபுக்கு அவர்களின் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. வழி வழி வந்த அற மரபினைப்

போற்றும் இயல்பில் அக வாழ்வினரான தலைவனும் தலைவியும் ஈடுபட்டு வாழ்ந்தனர்.

புற வாழ்க்கையில் அரசு, மன்னன், அமைச்சன், வாய்மை, வீரம், ஈரம் முதலான நடைமுறைகளில் நேர்மைக்கு முதன்மை வழங்கினர். போரும் போர் தொடர்பான செயல்களும் புற வாழ்வில் முதன்மை பெற்றிருந்தன. நாட்டின் மானத்தைக் காப்பதற்காக உயிரைக் கொடுப்பதைப் பெருமையாகக் கருதினார்கள்.

மன்னர்கள் கலை வளர்க்கும் எண்ணம் கொண்டு விளங்கினர். எனவே பாணர், கூத்தர், பொருநர், பாடினி, விறலி ஆகியோருக்குப் பரிசில் வழங்கி அவர்களின் கலை வாழ்க்கைக்கு ஊக்கம் வழங்கினர். தமிழ்ப் புலவர்களைப் போற்றும் எண்ணம் உடையவர்களாக மன்னர்கள் விளங்கியதால் இலக்கிய வளம் பெருகியது.

காடு திருத்தி நாடு ஆக்கும் செம்மைச் சிந்தனை உடையவர்களாக மன்னர்கள் விளங்கியதால் வேளாண்மை பெருகியது. மன்னர்களுக்கு அறிவுரை கூறும் அளவிற்குப் புலவர்கள் சிறப்பிடம் பெற்றிருந்தனர். பாண்டியன் நெடுஞ்செழியனின் போர்வெறியைத் தடுத்து வேளாண் தொழில் பெருக்கத்திற்குத் துணைபுரியச் செய்த பெருமை குடபுலவியனார் என்னும் புலவரைச் சேரும்.

பகைநாட்டு மன்னனின் குழந்தைகளை யானைக் காலில் இட்டுக் கொல்ல நினைத்த கோப்பெருஞ்சோழனுக்கு அஃது அறமன்று என்று எடுத்துரைக்கும் துணிவு கொண்டவராகக் கோவூர் கிழார் என்னும் புலவர் விளங்கினார்.

மன்னனுக்கும் புலவருக்கும் இருந்த நட்பானது நாட்டின் எல்லை கடந்து விளங்கியது. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறக்க இருக்கிறான் என்று அறிந்த பிசிராந்தையார் அவனுடன் கொண்ட நட்பின் உரிமையால் அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்திருக்கிறார்.

கணைக்கால் இரும்பொறை காலம் கடந்து வழங்கப்பட்ட தண்ணீரை உண்ணாமல் சிறையிலேயே உயிர் விட்டது தமிழரின் மானத்திற்கு எடுத்துக்காட்டு.

சங்க காலத்தில் பரத்தையர் பிரிவு இருந்தது. என்றாலும் மன்னன் தனது தேவி அல்லாமல் பிற பெண்களுடன் தொடர்பு கொள்வதை இழுக்காகக் கருதியிருக்கிறான். மாங்குடி மருதனார் முதலான புலவர்கள் உயர்ந்த நிலையில் இருந்துள்ளனர்.

ஈகைப் பண்பில் சிறந்து விளங்கியிருக்கின்றனர் அக்கால மன்னர்கள். வள்ளல்களின் வரிசையில் இடம்பெறும் மன்னர்கள் மட்டுமல்லாமல் பிற மன்னர்களும் இரவலர்க்குப் பொருள்களை வாரி வழங்கியுள்ளனர். ஈகை அறம் கொண்டவர்களாக மன்னர்கள் மட்டும் அல்லாமல் நிலக் கிழார்களும் இருந்துள்ளார்கள் என அறிய முடிகிறது.

ஈகைத் திறத்தில் சிறந்த மன்னர்களும் வள்ளல்களும் மறைந்த வேளையில் புலவர்கள் அவர்களின் பிரிவுக்காகப் பெரிதும் வருந்தியிருக்கிறார்கள். பாரியைப் பிரிந்த கபிலரும் அதியமானைப் பிரிந்த ஔவையாரும் பாடியுள்ள பாடல்கள் இதற்குச் சான்றாக அமைந்துள்ளன.

அறம் கூறும் அவையத்தை அமைத்து நல்ல நீதியை வழங்கியிருக்கிறார்கள். கரிகால் பெருவளத்தான் இளையோனாக இருக்கும் போதே நரை முடி தரித்து நல்ல நீதி வழங்கியதை அறியமுடிகிறது. அறம் கூறும் அவையத்தில் கற்றுணர்ந்த சான்றோர்களை அமர்த்தியுள்ளனர். இவ்வாறு அறத்தின் ஊற்றுக்கோலாக விளங்கிய சங்க இலக்கியங்களில் அற நோக்கு என்னும் தலைப்பிலான ஆய்வில் இயல்கள் தோறும் பெற்றுள்ள முடிவைகளைக் காண்போம்.

சங்க இலக்கியத்தில் அறத்தின் மேன்மை என்னும் இயலின் முடிவுகள் பின்வருமாறு:

பண்டைத்தமிழர் அறம் சிறக்கவேண்டும் என்று விரும்பினார்கள். வாழ்வில் உயர்ந்ததாக அறத்தினைக் கருதினார்கள். அந்தணர் அறம்புரிதலைப் போற்றி வாழ்ந்தனர். மன்னன் செங்கோல் தவறாமல் ஆட்சி செய்து அறத்தினைக் காத்தான். பெண்கள் கற்பை ஓர் அறமாகக் கருதிப் போற்றினார்கள். கற்பின் பெருமையைச் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன. அந்தணர் தங்கள் அறுவகைத் தொழிலைத் தவறாது புரிந்தனர். பெண்கள் தமக்கும் அறம் காக்கும் கடமை உண்டு என்று கருதி வாழ்ந்தனர். வீரத்தை விடவும் அறிவுக்கு முதன்மை கொடுத்தனர். இறைவனும் அறம் தவறாச் சிறப்பினைக் கொண்டிருந்தான் என அறிய முடிகிறது. அத்தகைய தகுதி கொண்டவனாகத் திருமால் பரிபாடலில் காட்டப்பட்டுள்ளான். அறம் செய்தவர்களால் மட்டுமே இறைவனை–குறிப்பாக முருகனை அடைய முடியும் அறிய முடிகிறது. அறம் செய்வதற்கு என்று குறிப்பிட்ட காலம்

எதுவும் இல்லை என்றாலும் கார்த்திகை மாதத்தினை அறம் செய்யும் காலம் என்று போற்றியிருக்கின்றனர்.

அறம் பொருள் இன்பம் என்பவற்றுள் அறத்தினை முதன்மையானதாகக் கருதுகிறது சங்க இலக்கியம். அறநூல் தெரிவிக்கும் அறக் கருத்துகளைப் பின்பற்றி வாழ்க்கையினை அமைத்துக் கொண்டு சிறப்பாக வாழ்ந்துள்ளனர். ஒருவர் செய்த உதவியைப் போற்றி மதித்துள்ளனர். அறத்திற்கும் மழைக்கும் தொடர்பு உண்டு என்று கருதி வாழ்ந்திருக்கின்றனர்.

தன்னுயிர் போல் பிற உயிர்களையும் போற்றிக் காத்துள்ளனர். புறாவின் துன்பத்தையும் போக்கி வாழ்ந்துள்ளனர். அறங்கூறு அவையத்தினை நிறுவி அறத்தைக் காத்துள்ளனர்.

சங்க இலக்கியத்தில் அறனில் தன்மை என்னும் இரண்டாம் இயலில் கண்டறிந்த உண்மைகள் பின்வருமாறு:

பண்டைத் தமிழர்களிடம் அறனில்லாத தன்மை என்று எதனையும் காண இயலாது. இந்த உலகில் இறப்பு என்பது இயல்பாக நிகழும் ஒரு நிகழ்வு. அந்த இறப்பிற்குக் காரணமானவன் கூற்றுவன் என்பதால் அந்தக் கூற்றுவனை அறம் இல்லாதவன் என்றும் அறிவு இல்லாதவன் என்றும் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

களவு ஒழுக்கத்தில் ஒழுகும் தலைவியை இற்செறிக்கும் தாயின் தன்மையையும் அறனற்ற தன்மை உடையது என்று சங்க இலக்கியம் தெரிவிக்கிறது. பொய்ச்சத்தியம் செய்வோருக்கு அக்காலத்தில்

தண்டனை வழங்கப்பட்டுள்ளது. அதனையும் அறனற்ற செயல் என்று குறிக்கின்றனர்.

வண்டு அறமற்றது. அந்த வண்டினைப் போல் தலைவியை ஏங்கச் செய்யும் தலைவனும் அறனற்றவன் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அறனில் வேந்தர்கள் யாரும் சங்க இலக்கியத்தில் காட்டப்படவில்லை எனினும் உவமையால் உணரும் பொருட்டு அறனில் வேந்தன் என்னும் குறிப்புக் காணப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் பொதுமை அறம் என்னும் மூன்றாம் இயல் சுட்டும் உண்மைகள் பின்வருமாறு:

போருக்கு என்று ஓர் அறம் பண்டைக் காலத்தில் பின்பற்றப் பட்டுள்ளது. பசு,பார்ப்பனர், பெண்கள், புதல்வரைப் பெறாதவர்கள் முதலானவர்களைப் போர்க்களத்திலிருந்து போகச் செய்தபின் போர் புரிந்துள்ளனர்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் ஈரமும் அறச்செயலும் கொண்டு விளங்கியிருக்கின்றனர். வறுமை நிலை கண்டு இரங்கிப் பொருள்களைக் கொடுத்துள்ளனர். புலவர்க்கும் பாணர்க்கும் பொருள்களை வழங்கியுள்ளனர். இதன் வாயிலாக இலக்கியம், பாடல், ஆடல் முதலான கலைகளைப் போற்றியுள்ளனர்.

நோய் தீர்க்கும் மருத்துவத் தொழிலும் அறத்தொழிலாகப் போற்றப்படுட்டுள்ளது.

செல்வம் நிலையற்றது எனக் கருதி நிலைத்த புகழினைப் பெறுவதற்குப் பிறருக்கு வழங்கியிருக்கிறார்கள்.

கொடியவர்களை ஒழித்து நல்லவர்களைக் காத்தல் அறமாகக் கருதப்பட்டுள்ளது. வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு இல்லாமல் அறவழியில் நடந்துள்ளனர்.

இரப்பவர்களுக்கு நாட்டையும் ஈயும் ஈகைக் குணம் கொண்டு அந்தக் கால மன்னர்கள் விளங்கியிருக்கிறார்கள்.

யாதும் ஊரே என்னும் பொதுமை நோக்கம் கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள். நல்ல செயல் செய்ய இயலவில்லை என்றாலும் தீயவை செய்யாமல் வாழ்ந்திருக்கிறார்கள்.

இன்பமும் துன்பமும் உலகத்து இயற்கை என்று கருதி வாழ்ந்திருக்கிறார்கள். சான்றோர் சான்றோருடன் இணங்கி வாழ்ந்திருக்கிறார்கள்.

எவ்வளவு செல்வம் இருந்தாலும் உண்பது நாழி, உடுப்பவை இரண்டே என்ற தன்னிறைவு இருந்திருக்கிறது. தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் பண்பு கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள்.

விழுப்புண் படுவதை உயர்ந்த பயனாகக் கருதியிருக்கிறார்கள். போர்க்களத்தில் உயிர் துறப்பதையே போர் அறமாகக் கருதியிருக்கிறார்கள். வீரச் சாவினைப் போற்றியிருக்கிறார்கள்.

ஆண்களுக்கு இணையாகப் பெண்கள் போர்க்களம் சென்று போர்புரிய வில்லை என்றாலும் வீரத்தில் சிறந்து விளங்கியிருக்கிறார்கள். வள்ளல்கள் போற்றப்பட்டிருக்கிறார்கள். அந்த வள்ளல்கள் இறந்த போது அவர்களுக்காக வருந்திப்

பாடியிருக்கிறார்கள். வீரம், ஈரம், ஈகை, புகழ் ஆகியவற்றுடன் சிறந்த போர் அறத்தினைப் பொதுமை அறமாகக் கருதியிருக்கிறார்கள்.

சங்க இலக்கியத்தில் இல்லறம் என்னும் நான்காம் இயலில் கண்டறிந்த உண்மைகள் பின்வருமாறு:

இல்வாழ்க்கையினை இல்லறம் என்று சிறப்பித்துச் சங்க இலக்கியங்கள் நமக்குத் தெரிவிக்கின்றன. இல்வாழ்க்கையின் தொடக்கமாகக் காதல், காமம் போன்றவற்றைக் காணமுடிகிறது. இல்வாழ்க்கையின் உச்சமாகக் கற்பு வாழ்க்கை அமைகிறது. கற்பு நெறிப் பட்ட இல்வாழ்க்கையினை அறப்பண்புக்கு ஏற்றாற்போல் சங்க கால மக்கள் நடத்தியுள்ளனர் என்பதனை இந்த இயலில் பார்த்தோம்.

காதல், காமம், கற்பு ஆகியவற்றிற்குச் சங்க இலக்கியம் தரும் பொருண்மை விளக்கம் தரப்பட்டுள்ளது. இல்லறம், இல்லறத்தின் கண் தோன்றும் மக்கள்பேறு, இல்லற நிர்வாகம், இல்லறத்தில் கணவன், இல்லறத்தில் மனைவி, இல்லறத்தில் உறவு, இல்லறத்தில் பணியாள் முதாலன தலைப்புகளில் சங்க இலக்கியம் தெரிவிக்கும் கருத்துகள் உணர்த்தப்படுகின்றன.

சங்க இலக்கிய அகப்பாடல்கள் காதலைப் பாடுவன போல் தோன்றினாலும் இல்லறக் கருத்துகளை மிகுதியாகக் கொண்டுள்ளன எனலாம். அந்த வகையில் தலைவன் தலைவி ஆகியோரிடையே காணப்படும் காதலும் அவர்களின் ஊடலும் வெளிப்படையாகப் பேசப்படுகின்றன.

பரத்தையர் தொடர்பால் கணவன்–மனைவி ஆகியோரிடையே ஏற்படும் பிணக்குகள் அந்தப் பிணக்குகளைத் தீர்ப்பதற்கு அவர்கள்

மேற்கொள்ளும் முயற்சிகள் முதலானவையும் இல்லறத்தில் காட்டப்பட்டுள்ளன.

அக வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட காதல், கற்பு நிகழ்ச்சிகளைச் சங்க இலக்கியத்தினைப் போல் தெள்ளத் தெளிவாகக் காட்டும் நூல் வேறு எதுவும் இல்லை என்று தெளியலாம்.

சங்க இலக்கியங்களில் அறநோக்கு என்னும் இந்த ஆய்வின் வாயிலாகத் தமிழர்கள் இல்லறவாழ்வில் சிறந்து விளங்கினர். புறவாழ்க்கையில் வீரத்தையும் மானத்தையும் ஈரத்தையும் பெரிதும் போற்றியுள்ளனர் எனத் தெளியலாம்.

சங்க இலக்கியங்களில் நீதிக் கருத்துகள், சங்க இலக்கியங்களில் அறத்தின் மேன்மை முதலான மேலாய்வுகளை இந்த ஆய்வினை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளலாம்.

# முதன்மை நூல்கள்


1. அகநானூறு — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
2. ஐங்குறுநூறு — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
3. கலித்தொகை — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
4. குறிஞ்சிப் பாட்டு — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
5. குறுந்தொகை — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
6. சிறுபாணாற்றுப்படை — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
7. திருமுருகாற்றுப்படை. — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
8. நற்றிணை — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
9. நெடுநல்வாடை — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
10. பட்டினப்பாலை — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
11. பதிற்றுப்பத்து — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
12. பரிபாடல் — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98
13. புறநானூறு — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98

| | | |
|---|---|---|
| 14. | பெரும்பாணாற்றுப்படை | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98 |
| 15. | பொருநராற்றுப்படை | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98 |
| 16. | மதுரைக்காஞ்சி | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98 |
| 17. | மலைபடுகடாம் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98 |
| 18. | முல்லைப் பாட்டு | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை–98 |

# துணை நூற்பட்டியல்


1. அழகம்மை, ஜி. சமூக நோக்கில் சங்க மகளிர்
மணிவாசகர் பதிப்பகம்
சிங்கர் தெரு
சென்னை–103.
முதற்பதிப்பு: ஆகஸ்ட்2001

2. இலக்குவனார், சி. இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்
வள்ளுவர் பதிப்பகம்
புதுக்கோட்டை
முதற் பதிப்பு

3. இளங்கோவன், கு.வை. உறவு ஓர் ஆய்வு
முத்து பதிப்பகம்
விழுப்புரம்
முதற்பதிப்பு; அக்டோபர்1999

4. குடந்தை, கவிஞர் கற்பெனும் சிறையினிலே
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98
முதற்பதிப்பு: நவம்பர்1996

5. குருசாமி, மா.ரா.போ. சங்க காலம்
மெர்க்குரி புத்தகக் கம்பெனி
கோவை–1
முதற்பதிப்பு : அக்டோபர் 1967

6. சரோஜினி கற்பு அன்றுமுதல் இன்றுவரை
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
பிராட்வே, சென்னை.

7. சித்திர புத்திரன் சங்கத் தமிழ் உறவு முறைச் சொற்கள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை–113
முதற்பதிப்பு: 2002

8. சிதம்பரனார், சாமி. எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும்
அறிவு பதிப்பகம்
142, ஜானி ஜான் கான் ரோடு
இராயப் பேட்டை, சென்னை–14
முதற்பதிப்பு: அக்டோபர் 2003

9. சுப்பிரமணியம் சங்க காலச் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98

10. சுப்பிரமணியம், ச.வே.(உ–ர்) தொல்காப்பியம்
மணிவாசகர் பதிப்பகம்
சிங்கர் தெரு
சென்னை–103.

11. செந்துறை முத்து, புலவர் சங்க காலச் சமுதாயச் சிந்தனைகள்
அருள் மொழி பதிப்பகம்
85, சுப்பிரமணியம் தெரு
சேலம்–636001
முதற்பதிப்பு: மே1989

12. செல்வராசு, நா. சங்க இலக்கியமும் சமூகவியலும்
மணிவாசகர் பதிப்பகம்
சிங்கர் தெரு
சென்னை–103.

13. செல்வ ராஜ், முல்லை சங்க இலக்கியம் ஓர் அறிமுகம்
மதிஸ்ரீ புத்தகச் சோலை
சென்னை–101
முதற் பதிப்பு: ஜனவரி 2002

14. ஞானசம்பந்தன், அ.ச. அகமும் புறமும்

பாரி நிலையம்
பிராட்வே, சென்னை.
முதற்பதிப்பு: ஏப்ரல்1956

15. திருநாவுக்கரசு,க.த. திருக்குறள் நீதி இலக்கியம்
பாரிநிலையம்
பிராட்வே
சென்னை.

16. நடராசன், ம மகளிர் முன்னேற்றத்தில்
இதழ்களின் பங்கு
தமிழரசி பதிப்பகம்
சென்னை–18
முதற்பதிப்பு: ஏப்ரல்2002

17. பார்வதி, க. படகர் வாழ்வியல்
திருக்குறள் பதிப்பகம்
சென்னை.
முதற்பதிப்பு: மார்ச்2001

18. பாலசுப்பிரமணியம், கு.வை. சங்க இலக்கியத்தில் கலையும்
கலைக் கோட்பாடும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
மையத் தொழில் நுட்பப் பயிலக
வளாகம்
தரமணி, சென்னை–113

19. புருஷோத்தம், வி.பி. சங்க கால மன்னர் காலநிலை
யாழ் வெளியீடு
தென்றல் குடியிருப்பு
மூன்றாவது தெரு
அண்ணாநகர் மேற்கு
சென்னை–40
முதற் பதிப்பு: டிசம்பர் 1995

20. வரதராசனார், மு. (உ–ர்) திருக்குறள்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்

பிராட்வே, சென்னை.

21 வரதராசனார் திருவள்ளுவர் அல்லது
வாழ்க்கை விளக்கம்
பாரிநிலையம்
பிராட்வே
சென்னை.

22. அறவியல்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
கல்லூரிச் சாலை
சென்னை–15

23. சமூகவியல்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
கல்லூரிச் சாலை
சென்னை–15

24. சிலப்பதிகாரம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98

25. மணிமேகலை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98

## அகராதிகள்

1. கழகத் தமிழ் அகராதி
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்
பிராட்வே, சென்னை.

2. தமிழ்–தமிழ் அகரமுதலி
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
கல்லூரிச் சாலை
சென்னை–15

# ஆய்வேடு

1. ரேவதி, ச. சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள் சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்ட ஆய்வேடு. 2002

# சங்க இலக்கியத்தில் அற நோக்கு

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

*ஆய்வாளர்*
டே. மேரி ஆரோக்கிய கிளீட்டஸ் கலா

*நெறியாளர்*
முனைவர் சு. வஜ்ரவேல்
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
தமிழ்த்துறை
கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்
சைதாப்பேட்டை

தமிழ்த்துறை
**கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்**
சைதாப்பேட்டை
சென்னை–600015
ஆகஸ்ட்–2011

# முடிவுரை

சங்க காலம் தமிழ் மக்களின் வாழ்வியலில் அறத்திற்கு முதன்மை கொடுத்த காலம். அக வாழ்விலும் புறவாழ்விலும் மக்கள் அறநெறிக்குட்பட்டு வாழ்ந்தனர். காதல் வாழ்விலும் கற்பு வாழ்விலும் சில வரையறைகளைத் தங்களுக்குள்ளாகவே வகுத்துக் கொண்டு வாழ்ந்துவந்தவர்கள் தமிழ் மக்கள். காதலுக்கும் கற்புக்கும் இடைப்பட்ட காலத்தில் இணையரில் எந்த மாற்றமும் ஏற்படாமல் காதலின் புனிதத்தைப் போற்றி வளர்த்தனர்.

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப' என்று தொல்காப்பியம் கற்புக்கான தேவையினைக் குறிப்பிட்டிருந்தாலும் மக்கள் தங்கள் அகவாழ்வில் முதன்மையானதாகக் கருதப்படும் களவு வாழ்க்கை வாயிலாகவே தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் செப்பம் உடையவர்களாக விளங்கினர்.

பண்பாடு என்னும் மரபுக்கு அவர்களின் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. வழி வழி வந்த அற மரபினைப்

போற்றும் இயல்பில் அக வாழ்வினரான தலைவனும் தலைவியும் ஈடுபட்டு வாழ்ந்தனர்.

புற வாழ்க்கையில் அரசு, மன்னன், அமைச்சன், வாய்மை, வீரம், ஈரம் முதலான நடைமுறைகளில் நேர்மைக்கு முதன்மை வழங்கினர். போரும் போர் தொடர்பான செயல்களும் புற வாழ்வில் முதன்மை பெற்றிருந்தன. நாட்டின் மானத்தைக் காப்பதற்காக உயிரைக் கொடுப்பதைப் பெருமையாகக் கருதினார்கள்.

மன்னர்கள் கலை வளர்க்கும் எண்ணம் கொண்டு விளங்கினர். எனவே பாணர், கூத்தர், பொருநர், பாடினி, விறலி ஆகியோருக்குப் பரிசில் வழங்கி அவர்களின் கலை வாழ்க்கைக்கு ஊக்கம் வழங்கினர். தமிழ்ப் புலவர்களைப் போற்றும் எண்ணம் உடையவர்களாக மன்னர்கள் விளங்கியதால் இலக்கிய வளம் பெருகியது.

காடு திருத்தி நாடு ஆக்கும் செம்மைச் சிந்தனை உடையவர்களாக மன்னர்கள் விளங்கியதால் வேளாண்மை பெருகியது. மன்னர்களுக்கு அறிவுரை கூறும் அளவிற்குப் புலவர்கள் சிறப்பிடம் பெற்றிருந்தனர். பாண்டியன் நெடுஞ்செழியனின் போர்வெறியைத் தடுத்து வேளாண் தொழில் பெருக்கத்திற்குத் துணைபுரியச் செய்த பெருமை குடபுலவியனார் என்னும் புலவரைச் சேரும்.

பகைநாட்டு மன்னனின் குழந்தைகளை யானைக் காலில் இட்டுக் கொல்ல நினைத்த கோப்பெருஞ்சோழனுக்கு அஃது அறமன்று என்று எடுத்துரைக்கும் துணிவு கொண்டவராகக் கோவூர் கிழார் என்னும் புலவர் விளங்கினார்.

மன்னனுக்கும் புலவருக்கும் இருந்த நட்பானது நாட்டின் எல்லை கடந்து விளங்கியது. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறக்க இருக்கிறான் என்று அறிந்த பிசிராந்தையார் அவனுடன் கொண்ட நட்பின் உரிமையால் அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்திருக்கிறார்.

கணைக்கால் இரும்பொறை காலம் கடந்து வழங்கப்பட்ட தண்ணீரை உண்ணாமல் சிறையிலேயே உயிர் விட்டது தமிழரின் மானத்திற்கு எடுத்துக்காட்டு.

சங்க காலத்தில் பரத்தையர் பிரிவு இருந்தது. என்றாலும் மன்னன் தனது தேவி அல்லாமல் பிற பெண்களுடன் தொடர்பு கொள்வதை இழுக்காகக் கருதியிருக்கிறான். மாங்குடி மருதனார் முதலான புலவர்கள் உயர்ந்த நிலையில் இருந்துள்ளனர்.

ஈகைப் பண்பில் சிறந்து விளங்கியிருக்கின்றனர் அக்கால மன்னர்கள். வள்ளல்களின் வரிசையில் இடம்பெறும் மன்னர்கள் மட்டுமல்லாமல் பிற மன்னர்களும் இரவலர்க்குப் பொருள்களை வாரி வழங்கியுள்ளனர். ஈகை அறம் கொண்டவர்களாக மன்னர்கள் மட்டும் அல்லாமல் நிலக் கிழார்களும் இருந்துள்ளார்கள் என அறிய முடிகிறது.

ஈகைத் திறத்தில் சிறந்த மன்னர்களும் வள்ளல்களும் மறைந்த வேளையில் புலவர்கள் அவர்களின் பிரிவுக்காகப் பெரிதும் வருந்தியிருக்கிறார்கள். பாரியைப் பிரிந்த கபிலரும் அதியமானைப் பிரிந்த ஔவையாரும் பாடியுள்ள பாடல்கள் இதற்குச் சான்றாக அமைந்துள்ளன.

அறம் கூறும் அவையத்தை அமைத்து நல்ல நீதியை வழங்கியிருக்கிறார்கள். கரிகால் பெருவளத்தான் இளையோனாக இருக்கும் போதே நரை முடி தரித்து நல்ல நீதி வழங்கியதை அறியமுடிகிறது. அறம் கூறும் அவையத்தில் கற்றுணர்ந்த சான்றோர்களை அமர்த்தியுள்ளனர். இவ்வாறு அறத்தின் ஊற்றுக்கோலாக விளங்கிய சங்க இலக்கியங்களில் அற நோக்கு என்னும் தலைப்பிலான ஆய்வில் இயல்கள் தோறும் பெற்றுள்ள முடிவைகளைக் காண்போம்.

சங்க இலக்கியத்தில் அறத்தின் மேன்மை என்னும் இயலின் முடிவுகள் பின்வருமாறு:

பண்டைத்தமிழர் அறம் சிறக்கவேண்டும் என்று விரும்பினார்கள். வாழ்வில் உயர்ந்ததாக அறத்தினைக் கருதினார்கள். அந்தணர் அறம்புரிதலைப் போற்றி வாழ்ந்தனர். மன்னன் செங்கோல் தவறாமல் ஆட்சி செய்து அறத்தினைக் காத்தான். பெண்கள் கற்பை ஓர் அறமாகக் கருதிப் போற்றினார்கள். கற்பின் பெருமையைச் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன. அந்தணர் தங்கள் அறுவகைத் தொழிலைத் தவறாது புரிந்தனர். பெண்கள் தமக்கும் அறம் காக்கும் கடமை உண்டு என்று கருதி வாழ்ந்தனர். வீரத்தை விடவும் அறிவுக்கு முதன்மை கொடுத்தனர். இறைவனும் அறம் தவறாச் சிறப்பினைக் கொண்டிருந்தான் என அறிய முடிகிறது. அத்தகைய தகுதி கொண்டவனாகத் திருமால் பரிபாடலில் காட்டப்பட்டுள்ளான். அறம் செய்தவர்களால் மட்டுமே இறைவனை–குறிப்பாக முருகனை அடைய முடியும் அறிய முடிகிறது. அறம் செய்வதற்கு என்று குறிப்பிட்ட காலம்

எதுவும் இல்லை என்றாலும் கார்த்திகை மாதத்தினை அறம் செய்யும் காலம் என்று போற்றியிருக்கின்றனர்.

அறம் பொருள் இன்பம் என்பவற்றுள் அறத்தினை முதன்மையானதாகக் கருதுகிறது சங்க இலக்கியம். அறநூல் தெரிவிக்கும் அறக் கருத்துகளைப் பின்பற்றி வாழ்க்கையினை அமைத்துக் கொண்டு சிறப்பாக வாழ்ந்துள்ளனர். ஒருவர் செய்த உதவியைப் போற்றி மதித்துள்ளனர். அறத்திற்கும் மழைக்கும் தொடர்பு உண்டு என்று கருதி வாழ்ந்திருக்கின்றனர்.

தன்னுயிர் போல் பிற உயிர்களையும் போற்றிக் காத்துள்ளனர். புறாவின் துன்பத்தையும் போக்கி வாழ்ந்துள்ளனர். அறங்கூறு அவையத்தினை நிறுவி அறத்தைக் காத்துள்ளனர்.

சங்க இலக்கியத்தில் அறனில் தன்மை என்னும் இரண்டாம் இயலில் கண்டறிந்த உண்மைகள் பின்வருமாறு:

பண்டைத் தமிழர்களிடம் அறனில்லாத தன்மை என்று எதனையும் காண இயலாது. இந்த உலகில் இறப்பு என்பது இயல்பாக நிகழும் ஒரு நிகழ்வு. அந்த இறப்பிற்குக் காரணமானவன் கூற்றுவன் என்பதால் அந்தக் கூற்றுவனை அறம் இல்லாதவன் என்றும் அறிவு இல்லாதவன் என்றும் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

களவு ஒழுக்கத்தில் ஒழுகும் தலைவியை இற்செறிக்கும் தாயின் தன்மையையும் அறனற்ற தன்மை உடையது என்று சங்க இலக்கியம் தெரிவிக்கிறது. பொய்ச்சத்தியம் செய்வோருக்கு அக்காலத்தில்

தண்டனை வழங்கப்பட்டுள்ளது. அதனையும் அறனற்ற செயல் என்று குறிக்கின்றனர்.

வண்டு அறமற்றது. அந்த வண்டினைப் போல் தலைவியை ஏங்கச் செய்யும் தலைவனும் அறனற்றவன் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அறனில் வேந்தர்கள் யாரும் சங்க இலக்கியத்தில் காட்டப்படவில்லை எனினும் உவமையால் உணரும் பொருட்டு அறனில் வேந்தன் என்னும் குறிப்புக் காணப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் பொதுமை அறம் என்னும் மூன்றாம் இயல் சுட்டும் உண்மைகள் பின்வருமாறு:

போருக்கு என்று ஓர் அறம் பண்டைக் காலத்தில் பின்பற்றப் பட்டுள்ளது. பசு,பார்ப்பனர், பெண்கள், புதல்வரைப் பெறாதவர்கள் முதலானவர்களைப் போர்க்களத்திலிருந்து போகச் செய்தபின் போர் புரிந்துள்ளனர்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் ஈரமும் அறச்செயலும் கொண்டு விளங்கியிருக்கின்றனர். வறுமை நிலை கண்டு இரங்கிப் பொருள்களைக் கொடுத்துள்ளனர். புலவர்க்கும் பாணர்க்கும் பொருள்களை வழங்கியுள்ளனர். இதன் வாயிலாக இலக்கியம், பாடல், ஆடல் முதலான கலைகளைப் போற்றியுள்ளனர்.

நோய் தீர்க்கும் மருத்துவத் தொழிலும் அறத்தொழிலாகப் போற்றப்படுட்டுள்ளது.

செல்வம் நிலையற்றது எனக் கருதி நிலைத்த புகழினைப் பெறுவதற்குப் பிறருக்கு வழங்கியிருக்கிறார்கள்.

கொடியவர்களை ஒழித்து நல்லவர்களைக் காத்தல் அறமாகக் கருதப்பட்டுள்ளது. வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு இல்லாமல் அறவழியில் நடந்துள்ளனர்.

இரப்பவர்களுக்கு நாட்டையும் ஈயும் ஈகைக் குணம் கொண்டு அந்தக் கால மன்னர்கள் விளங்கியிருக்கிறார்கள்.

யாதும் ஊரே என்னும் பொதுமை நோக்கம் கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள். நல்ல செயல் செய்ய இயலவில்லை என்றாலும் தீயவை செய்யாமல் வாழ்ந்திருக்கிறார்கள்.

இன்பமும் துன்பமும் உலகத்து இயற்கை என்று கருதி வாழ்ந்திருக்கிறார்கள். சான்றோர் சான்றோருடன் இணங்கி வாழ்ந்திருக்கிறார்கள்.

எவ்வளவு செல்வம் இருந்தாலும் உண்பது நாழி, உடுப்பவை இரண்டே என்ற தன்னிறைவு இருந்திருக்கிறது. தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் பண்பு கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள்.

விழுப்புண் படுவதை உயர்ந்த பயனாகக் கருதியிருக்கிறார்கள். போர்க்களத்தில் உயிர் துறப்பதையே போர் அறமாகக் கருதியிருக்கிறார்கள். வீரச் சாவினைப் போற்றியிருக்கிறார்கள்.

ஆண்களுக்கு இணையாகப் பெண்கள் போர்க்களம் சென்று போர்புரிய வில்லை என்றாலும் வீரத்தில் சிறந்து விளங்கியிருக்கிறார்கள். வள்ளல்கள் போற்றப்பட்டிருக்கிறார்கள். அந்த வள்ளல்கள் இறந்த போது அவர்களுக்காக வருந்திப்

பாடியிருக்கிறார்கள். வீரம், ஈரம், ஈகை, புகழ் ஆகியவற்றுடன் சிறந்த போர் அறத்தினைப் பொதுமை அறமாகக் கருதியிருக்கிறார்கள்.

சங்க இலக்கியத்தில் இல்லறம் என்னும் நான்காம் இயலில் கண்டறிந்த உண்மைகள் பின்வருமாறு:

இல்வாழ்க்கையினை இல்லறம் என்று சிறப்பித்துச் சங்க இலக்கியங்கள் நமக்குத் தெரிவிக்கின்றன. இல்வாழ்க்கையின் தொடக்கமாகக் காதல், காமம் போன்றவற்றைக் காணமுடிகிறது. இல்வாழ்க்கையின் உச்சமாகக் கற்பு வாழ்க்கை அமைகிறது. கற்பு நெறிப் பட்ட இல்வாழ்க்கையினை அறப்பண்புக்கு ஏற்றாற்போல் சங்க கால மக்கள் நடத்தியுள்ளனர் என்பதனை இந்த இயலில் பார்த்தோம்.

காதல், காமம், கற்பு ஆகியவற்றிற்குச் சங்க இலக்கியம் தரும் பொருண்மை விளக்கம் தரப்பட்டுள்ளது. இல்லறம், இல்லறத்தின் கண் தோன்றும் மக்கள்பேறு, இல்லற நிர்வாகம், இல்லறத்தில் கணவன், இல்லறத்தில் மனைவி, இல்லறத்தில் உறவு, இல்லறத்தில் பணியாள் முதாலன தலைப்புகளில் சங்க இலக்கியம் தெரிவிக்கும் கருத்துகள் உணர்த்தப்படுகின்றன.

சங்க இலக்கிய அகப்பாடல்கள் காதலைப் பாடுவன போல் தோன்றினாலும் இல்லறக் கருத்துகளை மிகுதியாகக் கொண்டுள்ளன எனலாம். அந்த வகையில் தலைவன் தலைவி ஆகியோரிடையே காணப்படும் காதலும் அவர்களின் ஊடலும் வெளிப்படையாகப் பேசப்படுகின்றன.

பரத்தையர் தொடர்பால் கணவன்–மனைவி ஆகியோரிடையே ஏற்படும் பிணக்குகள் அந்தப் பிணக்குகளைத் தீர்ப்பதற்கு அவர்கள்

மேற்கொள்ளும் முயற்சிகள் முதலானவையும் இல்லறத்தில் காட்டப்பட்டுள்ளன.

அக வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட காதல், கற்பு நிகழ்ச்சிகளைச் சங்க இலக்கியத்தினைப் போல் தெள்ளத் தெளிவாகக் காட்டும் நூல் வேறு எதுவும் இல்லை என்று தெளியலாம்.

சங்க இலக்கியங்களில் அறநோக்கு என்னும் இந்த ஆய்வின் வாயிலாகத் தமிழர்கள் இல்லறவாழ்வில் சிறந்து விளங்கினர். புறவாழ்க்கையில் வீரத்தையும் மானத்தையும் ஈரத்தையும் பெரிதும் போற்றியுள்ளனர் எனத் தெளியலாம்.

சங்க இலக்கியங்களில் நீதிக் கருத்துகள், சங்க இலக்கியங்களில் அறத்தின் மேன்மை முதலான மேலாய்வுகளை இந்த ஆய்வினை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளலாம்.